# சைவசித்தாந்தச் சம்புடம்
# SAIVA SITHTHANDA SAMBUDAM





...ண்ட் ஹில்
ரொறண்டோ
கனடா

**Richmond Hill**
**Toronto**
**Canada**

# சைவசித்தாந்தச் சம்புடம்

தொகுத்து ஆக்கியோன்:
*சிவநெறிச் செல்வன், சைவ நன்மணி, ஞானவாரிதி, சொற் கொண்டல்*
இரா. மயில்வாகனம், ஜே. பி.

விக்கிரம வருடம் சித்திரைத் திங்கள்
ஞாயிறு வாரம்
30.04.2000

உ

# நூற்பதிப்பு


நூலின் பெயர் : சைவ சித்தாந்தச் சம்புடம்.
Name of the book : 'Saiva Siththanda Sambudam'

நூலாசிரியர் : சைவ நன்மணி, சிவநெறிச் செல்வன், ஞானவாரிதி இரா. மயில்வாகனம்.
Author : *'Saiva Nanmani, Sivanerich Chelvan, Gnanavaarithy*
**R. Mylvaganam.**

வெளியீடு : திருமதி மங்கையர்க்கரசி மயில்வாகனம்.
Publisher : **Mrs. Mangaiyarkarachi Mylvaganam.**

விலை : SL Rs. 150/-
Price : U.S. $4

நூல் உரிமை : திரு. மயில்வாகனம் – சுதாகரன்.
Copy Rights : **Mr. Mylvaganam - Suthakaran.**

அச்செழுத்து : லக்ஷ்மன் – 11 புள்ளிகள்.
Fonts Design : **Luxman - 11 Points.**

வெளியீடு : 2000 சித்திரைத் திங்கள், ஞாயிறு வாரம்.
Date of Publication : **April, 2000.**

நூல் அளவு : 1/8
Size of the Book : 1/8

பக்கங்கள் :
Pages : 186 + XXIV

பயன் படுத்திய தாள் : 70 வெள்ளை பாங்க் கடதாசி
Paper Used : 70 GSM W/B/P

அச்சுப் பதிப்பு : யுனி ஆர்ட்ஸ் (பிரைவட்) லிமிடெட்,
48B, புளூமெண்டால் வீதி, கொழும்பு – 13.

Printers : Unie Arts (Pvt) Ltd.
48B, Bloemendhal Road, Colombo - 13.


# உள்ளடக்கம்

உ

# சமர்ப்பணம்



ஸ்ரீமதி சிவரெத்தினம் துரையப்பா



உ

## சமர்ப்பணம்

(ஸ்ரீமதி சிவரெத்தினம் துரையப்பா)

புண்ணிய பாவம் இரண்டுள பூமியில்
நண்ணும் பொழுதலிவார் சிவஞானிகள்
எண்ணில் இரண்டையும் வேரறுத் தப்புறத்து
பண்ணிய வினையால் தந்தை தாய்
இல்லாத தனியாய என்னை திண்மையாக்கி
தெருஅலையாமல் தாரமுவந்து தந்து தலைப்பெருங்
கோயில்போல் வீடுந்தந்து இல்லறத்தினி தாய்
திருவருளாய் வாழ வைக்கும் பொன் போன்ற புதல்வரைப் பெற்று
இன்பமாய் என்னை ஆழாக்கி அஞ்சற்க என்று
கை கொடுத்த அன்னை செல்வத்துள் செல்வமாம்
முத்து மூக்குத்தியும் மோகனப் புன்னகையுமுள்ள
ஸ்ரீமதி சிவரெத்தினம் துரையப்பா அவர்கட்கு
சைவ சித்தாந்தச் சம்புடத்தை மனமுவந்து சமர்ப்பிக்கிறேன்.

*சிவநெறிச் செல்வன்*
*சைவ நன்மணி*
*ஞானவாரிதி*
*சொற் கொண்டல்*
இரா. மயில்வாகனம் ஜே. பி.

உ

அட்டைப்படத்தின் விளக்கம்

கனடா றிச்மண்ட் ஹில், ரொறண்டோ ஆலயத்துக்கு முன்பாக இலண்டன் மெய்கண்டார் ஆதீனம், உலகப் பேரவைத் தலைவர் தவத்திரு சிவநந்தி அடிகளார், கயிலை மாமுனிவர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் பேரூராதீனம், கனடா கிளைத்தலைவர் புலவர் வி. வி. நல்லதம்பி (நந்தி), தொகுப்பாசிரியர் இரா. மயில்வாகனம் தம்பதியினர், இலங்கை கிளைத்தலைவர் கா. தயாபரன் ஆகியோர் காணப்படுகின்றனர்.



**RAMAKRISHNA MISSION**
*Ceylon Branch*
*40, Ramakrishna Road, Colombo 6*

*Phone: 588253*
*075 513805*
*Email: rkm@eureka.lk*

21. 03. 2000

## வாழ்த்துச் செய்தி

சைவநன்மணி இரா. மயில்வாகனம் அவர்கள் தொகுத்து வெளியிடும் 'சைவ சித்தாந்தச் சம்புடம்' என்னும் நூலுக்கு இந்த வாழ்த்துச் செய்தியை வழங்குவதில் பெரு- மகிழ்ச்சியடைகிறேன்.

திரு மயில்வாகனம் அவர்கள், அவரது நூல்கள் வாயிலாக, சைவ உலகிற்கு நன்கு அறிமுகமானவர்கள். இந்நூல் அவரது ஏழாவது படைப்பு. கனடாவில் நடைபெற்ற ஏழாவது உலக சைவ மாநாட்டின் பின்னர், அதன் நினைவுக்குறிப்பாகத் தொகுக்கப்பட்ட நூல் இது. சைவ சித்தாந்த கருத்துக்களை நன்கு தெளிவுபடுத்தும் கட்டுரைகள் இதில் இடம்பெறுகின்றன. திருவள்ளுவர் தொடக்கம் மாணிக்கவாசகர் வரை உள்ள கால எல்லையில் தோன்றிய சைவ சமய நூல்களையும், மெய்- கண்ட சாத்திர நூல்களையும் உள்ளடக்கிய கட்டுரைகளை இந்நூலில் காணலாம். சைவ சித்தாந்தத்தைக் கற்க விரும்பும் மாணாக்கருக்கு இந்நூல் பெரும் உதவியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

எண்பத்தி மூன்று வயதைக் கடந்த நிலையிலும், இளம் வயதினர்க்கே உரிய துணிவோடும், ஆர்வத்தோடும் செயற்படும் திரு மயில்வாகனம் அவர்களது சமயத் தொண்டை எல்லாரும் பாராட்டுவதும் நன்று. இதற்கு

முன்னர் அவர் எழுதி வெளியிட்ட 'சைவ சித்தாந்த கைநூல்' என்னும் அவரது ஆறாவது படைப்பைத் தொடர்ந்து வெளிவரும் 'சைவ சித்தாந்தச் சம்புடம்' என்னும் இந்நூல், சைவ சமயத்தின் ஆழத்தையும், சிறப்பையும் விளக்கிக்கொள்வதோடு, சைவ சமயத்தின் வளர்ச்சிக்கும் சிறந்த பங்களிப்பாக அமைந்துள்ளது என்பதைக் கூறவும் தேவையில்லை.

இந்நூலாசிரியர் திரு மயில்வாகனம் அவர்கள், இராமகிருஷ்ண மிஷன் பாடசாலையொன்றில் பயின்று, பின்னர் இராமகிருஷ்ண மிஷன் பாடசாலையில் வாழ்நாள் முழுதும் சேவை செய்து ஓய்வு பெற்றவர் என்பதை இங்கு குறிப்பிடுவதில் பெருமகிழ்ச்சியடைகிறேன். இப்பெரியார் இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து சமயப் பணியாற்ற எல்லாம் வல்ல இறைவன் அவருக்கு நீண்ட ஆயுளையும், நல்லாரோக்கியத்தையும் வழங்கி ஆசிர்வதிக்கப் பிரார்த்திக்கிறேன்.

'சைவ சித்தாந்தச் சம்புடம்' சைவ மக்களிடையே நல்வரவேற்பைப் பெறும் என்பதில் ஐயமில்லை.

சுவாமி ஆத்மகனானந்த



# அணிந்துரை



சைவசமயத்தின் தாற்பரியத்தையும் இறையுணர்வையும் விளங்க வைக்கும் தன்மை சைவ சித்தாந்தத்தையே சாரும். சைவசித்தாந்தத்தின் தெளிவைப் பலரும் விளங்கிக் கொண்டால் வாழ்க்கையில் என்றும் இன்பமுடன் வாழ்ந்திடவும் பேரின்பப் பேறு கிடைத்திடவும் சித்தாந்த தெளிவு வழி சமைக்கின்றது.

இந்த வகையில் சைவசித்தாந்தத்தைப் பற்றிப் பலரும் பல நூல்களை எழுதியுள்ளனர். சிவஞானச்செல்வன், சைவநன்மணி, ஞானவாரிதி திரு. இரா. மயில்வாகனம் அவர்கள் இது தொடர்பாக பல நூல்களை எழுதியுள்ளார். சிந்தனைக்கோவை ஒன்று, தேவி திருமுகம், சிந்தனைக்கோவை இரண்டு, வைரவ மான்மியம், ஒன்பதாம் திருமுறை ஒரு நோக்கு, சைவசித்தாந்த கைநூல் என்பன குறிப்பிடத்தக்க நூல்களாகும்.

தற்போது சைவசித்தாந்தச் சம்புடம் எனும் நூலை வெளியிடுகின்றார். இந்நூல் சைவசித்தாந்தம் தொடர்பான பல கட்டுரைகளின் தொகுப்பாக வெளிவருகின்றது. சித்தாந்தத்தின் தெளிவை இக்கட்டுரைகள் தெளிவு படுத்துவனவாக உள்ளன. பதி, பசு, பாசம், ஆன்ம ஈடேற்றம் தொடர்பான தெளிவை இந்நூல் தொகுப்பு வழங்கும் என்பதில் ஐயமில்லை.

திரு. இரா. மயில்வாகனம் அவர்கள் கனடா, தஞ்சாவூர் போன்ற இடங்களில் நடைபெற்ற உலக சைவப் பேரவையின் மாநாடுகளில் கலந்து கொண்டு சைவ சித்தாந்தம் தொடர்பாக ஆய்வுக்கட்டுரைகளை சமர்பித்து அறிஞர்களின் வரவேற்பைப் பெற்றவர்.

எண்பானொடுபத்தும் மூன்றுமாகிய இந்தத் தள்ளாத வயதிலும் துள்ளும் இள நெஞ்சுடன் சைவ சித்தாந்தத்தின் தெளிவை, உணர வைக்கும் வகையில், நூல்களை வெளியிட்டு வருவது மிகவும் வரவேற்கக் கூடியதொன்றாகும். இவருடைய பணி மேலும் சிறக்க இறையருள் துணை நிற்க வேண்டும்.

இத்தொகுப்பு நூலுக்கு சைவசித்தாந்திகள் மத்தியில் நல்ல வரவேற்பு கிடைக்கும் என நம்புகின்றேன். சைவசமயத்தவர் அனைவரும் இந்நூலை வாசித்து இறையருளின் இறுக்கத்தில் திளைத்திருக்க வேண்டும் எனக் கேட்டு எனது நல்லாசிகளை தெரிவித்துக் கொள்கின்றேன்.

**கா. தயாபரன்**
*செயலாளர் நாயகம்*
*இலங்கைக்கிளைத் தலைவர்*
*உலக சைவப்பேரவை.*

*15ஏ, சமித் பிளற்*
*கொழும்பு – 05.*

உ

# சைவசித்தாந்தச் சம்புடம்

## தொகுப்பு நூலின்

## அணிந்துரை

திருவாளர். இரா. மயில்வாகனம் ஜே. பி. அவர்களை தெரியவராது ஏழாவது உலக சைவ மாநாடு–கனடாவில் ஆடித்திங்கள் 30–31 ஆவணி 1. 1999 நடந்தபோது அறிமுகமானேன். இவர் எங்கள் மகாநாட்டில் பங்கு பற்றுவதற்காக **சைவமும் தமிழ் பாஷையும்** என்னும் தலையங்கத்தில் ஓர் கட்டுரை எழுதி அனுப்பினார் அதிநிறைவாக ஏற்று இம்மாநாட்டில் விடயத்தை விளக்க பத்துத் துணுக்குகள் கொடுத்தோம். ஏற்றுக்கொண்டார். நேரம் வந்தது பத்து நிமிடங்கள் போதாதென்று கூறினார். அப்போ நாங்கள் இடமளிக்க வில்லை மனவடிவுடனே பேசத் தொடங்கினார். பார்வையாளர்களாய் மற்றய சைவமாநாட்டு அங்கத்தவர்கள், அவர்களின் சகாக்கள், பலரும் கேட்கப் போராக இருந்தனர். எல்லோரும் "நீங்கள் முப்பது நிமிடம் பேசுங்கள்" என்று கூக்குரல் செய்து தலைமைவகித்த என்னை நோக்கினார்கள் அவர்களின் விருப்பப்படியே நானும் விட்டுவிட்டேன்.

அவரது பேச்சு கி. முன் 5000ம் ஆண்டு தொடக்கம் கி. பி. 2000 ஆண்டுவரை ஆராயக் கூடியதாக இருந்தது. கொடிநிலை கந்தளி, வள்ளி என்பன குறிப்பான கடவுளைக் இத்தோடு, கூற்று, பித்தா வரை உள்ள திருமுறைகளை உள்ளடக்கியது மாணிக்கவாசகரும் திருவாதவூரடிகளும் ஒரே காலத்தவரா? வேறு வேறானவரா? என ஆராயச் சொல்லி சில குறிப்புக்கள் தந்தார்கள் சபையோர் மிகமிக விரும்பி சொற் கொண்டல் எனப் பெயரைப்புனைந்தும் உரைத்தார்கள். அகில உலக சைவமகா நாட்டின் இலங்கைக் கிளைக்கு தலைமையாயுள்ள திருவாளர் க. தயாபரன் அவர்களும் கொழும்பு மாவட்ட அங்கத்தவர்களும் வந்துபுகழ்ந்தார்கள் இது அவருடைய விளக்கத்தை வியக்கக் கூடியதாக இருந்தது.

இப்போ அவர் தொகுத்த ஏழாவது நூலாகிய சைவசித்தாந்தச் சம்புடத்திற்கு அணிந்துரை எழுத வந்தது எனது பெரும் பூர்வபுண்ணியமே.

இவரது இந்நூல்பல பெரிய சைவ சித்தாந்த அறிஞர்களது கொள்கைகளை அடக்கியதாய் இருப்பது வியப்புக்குரியது. ஒரு பொருளை பல இடங்களில் இருந்து பெறும் அறிவைக் கொண்டு போற்றலாம் தூற்றலாம். பல



பொருளை ஒன்றாக அடக்கிய தொகுப்பு நூலை தொகுத்து எழுதிய துணிவு எப்பேர் பெற்றது என்று என்னால் சொல்லற்கரிதாகும். பிரதானமாக சைவசித்தாந்தம் என்றால் மெய்கண்ட சாத்திரத்தையே குறிக்கும். இது இதற்கு முன்பும் இதற்கு பின்பும் உள்ள சைவசித்தாந்தங்களைச் சேர்த்தது, வியப்பானது அன்றியும் ஆசிரியர்கள் சேர்ந்ததும் வியப்பானது.

நாவற்குளி நடராசா எனப் உலகப் பெயர் பெற்ற பெரியாரின் அரிச்சுவடியில் சித்தாந்தமும் சேர்ந்தது நூலின் பெருமையைக் கூறும் வானொலியாயிற்று. அரனும் ஆன்மாவும் என்பதில் தொடங்கி பசுவும் பாசமும் என்பதில் முடிவுற்ற இவரது நூல் சைவசமயம் கற்கும் மாணவர்களுக்கும் கற்ற ஆசிரியர்களுக்கும் கேட்கும் அறிவாளர்களுக்கும் பெருமையைத் தேடிக்கொடுக்கும். இவரது பணி இனும் மேலோங்கிவர வேண்டுமென்பது எனது பேரவா.

கனடாவில் நான் இப்போ சைவ மகாநாட்டிற்கு தலைவராகத் தேர்ந்துள்ளேன் உங்களது மனதைச் சந்தோஷப்படுத்தும் இனிவரப் போகிற எட்டாம் ஒன்பதாம் மகாநாடுகளில் நீங்கள் பங்கு கொண்டு எங்களை ஊக்கப் படுத்த வேண்டுமென்று கேட்டு எனது பணியை நிறைவு செய்துள்ளேன்.

சிவசிவ

***Pandit V. V. Nallathamby***
*(Namby)*
*(Retired Principal)*

## அணிந்துரை

மேன்மை கொள் சைவநீதியே உலகெலாம் பரப்பும் உயர்ந்த குறிக்கோளுடன், நம்மாலியன்ற சைவப்பணியை ஆற்றிவருகின்ற பெரியார், சிவநெறிச் செல்வர், ஞானவாரிதி, சைவநன்மணி இரா. மயில்வாகனம் அவர் தொகுத்தாக்கும் சைவ சித்தாந்தச் சம்புடம் என்னும் நூலுக்கு அணிந்துரை வழங்குவதில் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

இவர், கடந்த பத்தாண்டுகளில் சிந்தனைக்கோவை, திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, சிந்தனைக்கோவை (II), வைரவமான்மியம், தேவி திருமுகம், சைவசித்தாந்த கைநூல், ஆகியவற்றினை வெளியிட்டிருக்கின்றார்.

முழுமுதற் பொருளாம் இறைவனை "அன்பினில் விளைந்த ஆரமுது" என்றும், தாயிற் சிறந்த தயாவான தத்துவன் என்றும், இன்னும் பலவாறாகவும் நம் சமய குரவர்கள் பாடிப்பரவினர். சைவ சித்தாந்தத்தின் அடியபடைத் தத்துவம் அன்பு என்பது மெய்ஞ்ஞானிகளின் கூற்றாகும்.

ஆயின், சைவசமயம் காலத்துக்குக் காலம், ஒதுங்கிப் போகவும், ஒடுங்கிப் போகவும், அதனைப் பின்பற்றுவோர் பலர் வேற்றுமதங்களை நாடவுமான காட்சிகள் நடைபெற்று வருவதையும் அறிய முடிகின்றது. இவற்றிற்கு ஏதுவான காரணங்களையும் சைவப் பெரியார்கள் அறிந்து செயற்படுதல் சிறப்பானது என்பதனை இங்கு குறிப்பிடுதல் பொருத்தமானது என நம்புகிறேன். இவ்வரையில், மக்களுக்கு சைவ சமயத்தில் தெளிந்த நல்லறிவை ஊட்டும் நூல்களை எழுதி வெளியிடும் பணியில் ஈடுபட்டுள்ள பெரியார் இரா. மயில்வாகனம் அவர்களது பணி மேலும் சிறக்க இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

12.3.2000

அன்னலட்சுமி இராஜதுரை
*சிரேஷ்ட பத்திரிகையாளர், வீரகேசரி*



## நூலாசிரியர் வரலாறு



முந்தியே வெளிவந்த இவரது நூல்களில் இருந்து வரலாறு வரையப் பட்டிருப்பதை வாசித்து அறிந்திருப்பீர்கள். எனினும் எனக்கு உள்ள கடமையை நிறைவேற்ற முயல்கிறேன் என்பது என் எண்ணம்.

*"பத்தெட்டும் மூன்றும் சேர் முத்தாண்டை வாழ்ந்து முடிவாக்கி*
*பத்தைந்தும் ஐந்துசேர் ஆண்டுபாரி யுடனறப் பணியாற்றி*
*சைவசித்தாந் தச்சம்புடத்தை தொகுத்து விரித்து பேர்பெற்ற*
*மைவிளியான் இரா. மயில்வாகனம் எனும்பேரு டையோனே".*

ஆக்கியவற்றை நினைவூட்டும் நிரல்.

1. 1ம் சிந்தனைக்கோவை 1990ம் ஆண்டு ஐப்பசி
2. ஒன்பதாந்திருமுறை ஒருநோக்கு
   திருவிசைப்பா, திருப்பல்லாண்டு 1991ம் ஆண்டு புரட்டாதி
3. 2ம் சிந்தனைக்கோவை 1993ம் ஆண்டு புரட்டாதி
4. வைரவ மான்மியம் 1995ம் ஆண்டு புரட்டாதி
5. தேவி திருமுகம் 1997ம் ஆண்டு ஐப்பசி
6. சைவ சித்தாந்த கைநூல் 1998ம் ஆண்டு புரட்டாதி

வைச சித்தாந்தக் கைநூல் ஆறாம் உலக சைவ மாநாடு தஞ்சை மாநிலத்தில் நடந்தேறியது. அதில் இறை, உயிர், தளை எனும் முப்பொருள் உண்மைகளை எழுதி வாசித்தார். அந்நிகழ்ச்சியைக் கண்ணுற்ற இலண்டன் மெய்கண்டார் ஆதீனம் உலகச் சைவப் பேரவை தலைமைச் செயலகம் தவத்திரு சிவநந்தி அடிகளார், முனைவர், செயல் நாயகம் இயக்குனர். இன்னும் பெரியோர்கள் நூலாக்க வேண்டு வேண்டுமென்று முனைந்தார்கள். இதற்கு மிகப் பேருதவியாக வரதராஜ விநாயக அறங்காவலர்களும் இருந்தனர்.

இரண்டாவதாக ஏழாம் உலகச் சைவ மாநாடு காண்டற்கரிய கனடாவில் நடந்தேறியது. இதற்கும் இப்பெரியார் சைவமும் தமிழ்மொழியும் என்னும் கட்டுரை

எழுதி தெரிவு செய்யவும் பெற்றார். அங்கேயும் பங்குபற்றி கொடுத்த பத்து நிமிஷத்தை சைவப் பெரியோரான சபையோரின் கேள்விப்படி முப்பது நிமிஷங்கள் பேசி முடித்தார். அங்கேயும் சொற்கொண்டல் எனப் பெயரும் பெற்றார். அதன் வழியே வந்தவர்தான் நான் இப்போ கூறும் நூலின் ஆசிரியராவர்.

இப்பெரியோர் நினைவு மலர்களைச் செய்து நினைக்கச் செய்தவர். இன்னும் வாழ்த்துமடல்களை ஆக்கி வாழவைத்தவர். சமயப் பிரசங்கங்களில் பேசி சிவநெறிச் செல்வர், சைவநன்மணி, ஞானவாரிதி ஆகிய புறப் பெயர்களையும் பெற்றவர் ஏனவே கூறியதுபோல் எண்பத்து மூன்று வயதை இனிதாய் முடித்து இல்வாழ்க்கையில் ஐம்பத்தைந்து ஆண்டுகளையும் கண்டவர். "தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தாற் காணப்படும் என்னும் தெய்வத் திருவள்ளுவர் வாக்குக்கு இலக்கானவர்.

*வாழ்க ஆசிரியர், வளர்க இவர் பணி*

*கொட்டாஞ்சேனை*
*04.03.2000*

*இவ்வண்ணம்*
பொ. பாலசுந்தரம்
*அறங்காவலர்.*



உ

# நுழைவாயில்

*"ஈசன் அடிபோற்றி எந்தையடி போற்றி*
*தேசனடி போற்றி சிவன்சேவடி போற்றி*
*மாயப்பிறப் பறுக்கும் மன்னன்அடி போற்றி*
*சீரார் பெருந்துறைநந் தேவனடி போற்றி*
*ஆராத இன்பம் அருளுமலை போற்றி."* *சிவபுராணம்.*

இவ்வாறு இறைவனை நினைந்து வணங்கி. சைவசித்தாந்தச் சம்புடம் என்னும் தொகுப்பு நூலின் நுழைவாயிலை தொடங்கியுள்ளேன்.

*"பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்*
*பதியினைப் போற் பசு பாசம் அனாதி*
*பதியினைச் சென்ற ணுகாப்பசு பாசம்*
*பதியணுகித் பசு பாசம் நிலாவே"*

*திருமந்திரம்.*

*"பலகலையாகம வேதம் யாவையினும் கருத்துப்*
*பதி பசு பாசந் தெரித்தல் பதி பரமே அதுதான்*
*நிலவும் அருவுரு வின்றிக் குணம் குறிகளின்றி*
*நின்மலமாய் ஏகமாய் நித்தமாகி*
*அலகினுயிர்க் குணர்வாகி அசலமாகி*
*அகண் டிதமாய் ஆனந்த உருவாயன்றிச்*
*செயலரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்*
*திகழ்வது தற்சிவமென்பர் தெளிந் துளாரே"*
*(சிவப்பிரகாசம் உமாபதிசிவம்)*

சைவ சித்தாந்தம் இன்று நேற்றல்ல இதற்கு முந்திய கடவுள் இயலைப் பற்றிப் பகருகின்ற எல்லா நூல்களிலும் வெளிக் கொணரப் பெற்றது. ஆனால் நம் போன்ற அறிவிலிகள் சைவ சித்தாந்த உட்பொருளைக் கண்டு கொள்ளவில்லை. கண்டாலும் கைக் கொள்ளவில்லை. நாமறிந்த நினைவுக்கு திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரின் தேவாரப் பதிகங்கள் தொடங்கி கி.பி 565 சேர்க்கிழார் சுவாமிகளின் கி. பி. 1113 அருளிய பெரிய புராணம் வரையிலுள்ள பன்னிரண்டு திருமுறைகளிலும் சைவசித்தாந்தம் உள்ளீடாகவுள்ளது. இதை நாம் உய்த்துணரவில்லை.

மெய்கண்டதேவர் தோன்றிய காலத்தில் ஆகமங்களின் முரண்பாடுகளை ஓரளவு நீக்கி ஒழுங்குபடுத்தி தமிழ் மொழியில் பன்னிரண்டு சூத்திரங்களாக்கி சிவஞானபோதம் என்னும் சிவனின் வாக்கியமாகிய நூலை உலகிற்கு அளித்தார்.

சிவஞான சித்தியார் என்னும் வழி நூலும் சிவப்பிரகாசம் முதலிய சார்பு நூல்களாக பதினான்கு சாஸ்திரங்களும் தோன்றின. இவைகள் எல்லாவற்றிற்கும் மணி முடிபோல சித்தருள் சிறந்த சித்தராகிய திருமூலரின் திருமந்திரம் வந்தது. இதனையே மறை மொழிமாந்தர் ஆனையிற் கிடந்த மந்திரமாகும் என்பர்.

சைவம் என்னும் பெயருடைய சைவ சமயம் கடவுள் உண்டென நிரூபிக்கிறது. நிரூபிப்பதற்கு பலவழி வகைகளையும் காட்டியுள்ளது. இவற்றை நாம் முன் வெளியிட்ட சைவ சித்தாந்த கை நூலில் வெளிக்கொணரவில்லை. இங்கு சைவ சித்தாந்தச் சம்புடம் என்னும் நூலில் ஓரளவு எடுத்துக் கூறியுள்ளேன். கட்டுரைகாரரும் கூறி இருக்கிறார்கள்.

நான் இந்நூலை வெளிக் கொணர்வதற்கு பல காரணங்கள் உண்டு. ஆறாவது உலக சைவ மாநாடு தஞ்சாவூரில் நடந்த போது இறை, உயிர், தளை என்னும் மூன்று பெருந்தலையங்கங்களைக் கொண்ட சைவ சித்தாந்த கைநூலை ஆக்குவதற்கு எனது அன்னாடற் பேச்சு உதவியாக இருந்தது. பேச்சினைக் கேட்டுக் கொண்டவர்களின் உலகச் சைவ மாநாட்டுத் தலைவர் அதாவது இலண்டன் மெய்கண்டார் ஆதீனம் உலகச் சைவப் பேரவை. தவத்திரு சிவநந்தி அடிகளார்களும் ஒருவர். இப்பெரியாரே மாநாட்டுக்கு தலைவருமானார். இவர் இன்னூலை ஆக்கி உலகத்துக்கு அளிக்க வேண்டுமென்று பலமுறை கூறியதுமன்றி அருளாசி வாழ்த்தும் எழுதித் தந்தார்கள். இச்சபையில் அங்கத்தவர்களில் தூணாகவுள்ள திரு க. பாஸ்கரன். M.A.M PH.L இயக்குனர் மன்றம் பேராசிரியர் அவர்களும் (தத்துவமையம் தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சாவூர்) முனைவர் திரு கி. லோகநாதன் அவர்களும் (செயல்நாயகம் உலகச் சைவப் பேரவை) அணிந்துரைகள் எழுதி ஆற்றுப் படுத்தினார்கள்.

கடவுள் கண்விழிக்க ஒருவாறு சைவசித்தாந்தக் கைநூலை எழுதி முடித்து வெளிப்படுத்தியுமுள்ளேன். இது "மன்னுடை மன்றத் தோலைத்தூக்கினும் .................. தன்னுடை யாற்றலுணராரிடையினும் தன்னைப் புகழ்தலுந்தகும்புல வோற்கே" என்பதனால்.

### அட்டைப்படம்

ஏழாவது உலக சைவ மாநாடு கனடாவில் நடந்தேறியது. அந்நாட்டிலும் சைவப் பேரவையில் பங்கேற்பதற்காக "சைவமும் தமிழ் மொழியும்" என்னும் தலையங்கத்தில் கட்டுரை எழுதி அனுப்ப வேண்டிய அணைவு உண்டாகியது. அதனையும் பூர்த்தியாக்கி தெரிவும் பெற்றேன். இதனால், கனடாகாண வேண்டிய பாக்கியமும் கிடைத்தது. (30.07.99) பத்து நிமிஷம் தந்தார்கள் காணாது என்றேன் கதையா? கட்டுரையா? என வினவினர் இருந்து பாருங்கள் என வாக்கியங்களை வளரவிடவில்லை. நேரம் வந்தது நிகழ்ந்தது பண்டிதர் வீ. ந. நம்பிகாப்பாளர் தலைமையில், கேட்போரின் கேள்விப்படி முத்தியது பேச்சு முடிந்தது முப்பத்திஐந்து நிமிடம்.

ஸ்ரீலங்கா ஒன்று இப்படியுமா? என அதிசயத்தார்கள். அப்போ தலைவர் திரு தம்பையா ஸ்ரீபதி அவர்கள் கனடா எப்படி இருக்கிறது என்றார்கள்.

*"கண்டனன் கனடாவைக் கண்களால் சீறியது சீற்றம்*
*கொண்டன் குபேரனை நோக்கி இதுதான் இதுவேதான்*
*பண்டைய குவேராபுரி அந்தரத்திழின் திடாமல் வருக*
*திண்திதல் திருமாலும் திசைமுகனும் தேவர்களும் வருகவே"*

எனது பதில் இதுதான். காரியகர்த்தாக்கள் கேட்டவர் வாயார வாழ்த்தினார்கள். ஏழாவது உலகசைவ மாநாடு மறவாதிருக்க ஒரு நூலை ஆக்குங்கள் என்றனர். அவர்களின் அருள் ஆசியும் என் ஆன்ம ஆசையும் தூண்டியது.

அட்டைப்படம் கனடாவில் உள்ள ஒருமாகாணமாகிய ரொறண்டோவில் உள்ளது. றிச்மண்ட் ஹில் (Richmond Hill Toronto) மாநாடு ஆரம்பமாவதன் முன் வணங்கிய தேவாலயம். தவைலர் தம்பையா ஸ்ரீபதியையும் கட்டுரை நாயகன் இரா. மயில்வாகனத்தையும் காணக்கூடியதாக இருக்கிறது.

### நுழைவோம்

இவ்வெண்ணத்தை நிறைவேற்றவே இத்தொகுப்பு நூல் உதவுகிறது. தொடக்கமாக, "அரனும் ஆன்மாவும் என்னும் தலையங்கத்தை திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார் ஆகிய மெய்கண்ட சாத்திரத்தின் உதவியுடன் கூறியுள்ளேன். இன்னும் சைவ சித்தாந்தத்தை உலகத்துக்குப் பரப்ப வேண்டும். என்ற அவாவுள்ள பெரியார்கள் கட்டுரைகள் தரமுற்பட்டார்கள் இவர்களுக்கு ஓர் தருணம் பழம் நழுவி பாலில் விழுந்தது போலாயிற்று. இவற்றுள் உதவியவர் முதலாவதாக சைவநன்மணி, கலாநிதி. நா. செல்லப்பா அவர்கள் சிவஞானபோத மலர்ச்சி என்பதாகும். இரண்டாவது எனது சைவ சித்தாந்த ஆசிரியரும் கீரிமலை சைவ சித்தாந்த வகுப்பு நடத்திய திரு. வி. சங்கரப்பிள்ளையுமாவர். இவ்வாசிரியரைப் பற்றி முன்னமே நான் கூறியுள்ளேன்.

*"பண்டைமறை வண்டரற்ற சைவத்தின் பசுந்தேன் பரிந்தொழுகும்*
*புண்டரியம் பொலிந்து தோன்று பன்னாலைப் பதிதனில்*
*அண்டறிந்த ஆயுள்வேத ஆசானாம் விஸ்வநாதர் இளையபிள்ளை*
*கண்டறிந்து தோற்றுவித்த சங்கரப்பிள்ளை சைவ சித்தாந்தரே"*

இப்பெரியார் மனவுவந்து திருக்களிற்றுப் படியாரின் உட்பொருளாக பத்து தலையங்கங்களைக் கொண்ட கட்டுரைகள் கட்டுரைத்துள்ளார். இன்னும் இயற்கையில் இறைவன், மெய்கண்டாருக்கு முன்னுள்ள சைவ சித்தாந்தம். திருவாசகத்தில் ஒருவாசகம், திருமூலரின் சமயச் சித்தனைகள் இவைகள் எல்லாவற்றிலும் மேலாக "ஒய்ந்தாய்ந்து பார்க்கையிலே" ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பு. என்னும் நூல் இலக்கிய வித்தகர் கலாநிதி கே. எல். நடராசா அவர்களால் இலக்கிய கலாநிதியாகிய திரு செ. குணரெட்டணம் அவர்கள் கொழும்பு தமிழ் சங்கத்தில் தலைவராக இருக்கும் போது வெளிக் கொணர்ந்தது. இந்நூலை கலாநிதி அவர்கள் அடியேனுக்குத் தந்தார்கள். இது எனக்கு "மஞ்சு கண்ட மஞ்சை போல் இருந்தது மகிழ்ச்சி இதில். "அரிச்சுவடி அமைப்பில் ஆன்ம ஞான வைப்பு" என்னும் தலையங்கம் தலைக்கேறியது. அதையும் சம்புடத்தில் ஒருபக்கத்தில் வைத்துள்ளேன்.

இவ்வாறான கட்டுரைகள் பலதிறப்பட்ட சைவ சித்தாந்தக் கொள்கை யுள்ளார்களுக்கும் பொருத்தமாய் இருக்கும் என நினைத்தே இந்த ஏழாவது நூலையும் தொகுத்துள்ளேன்.

பேரறிவாளர்கள் நூலின் உள்ளே புகுமுன்னர். ஏன், எதற்கு இதை ஆக்கியுள்ளார் என்னும் வினாவுக்கு விடைகண்டுள்ளார்கள்.

கடவுளால் நடக்க வேண்டியவை நடந்தேறியது நடந்தேறும் என்று நாமும் சும்மா இருக்க முடியாது. இதற்கு கருவி காரணமாய் இருக்க வேண்டும். கடவுளை மெய்தான் அரும்பி விதிர்விதித்து, தலைகைதான் தாங்கி வாழ்த்தி வணங்க வேண்டும்.

கடவுளின் தன்மை குறைவில்லாதது, நிறைவானது, பெருந்தன்மையது, பேரறிவுடையது, பிறப்பிறப்பில்லாதது. இடையறா இன்ப அன்பில் உயிர்கள் திளைக்கச் செய்வது. இத்தன்மையை சிவஞானபோதம் பின்வருமாறு கூறுகிறது.

"விளம்பிய உள்ளத்து மெய், வாய், கண், மூக்கு, செவி அளந்து அறிந்து அறியா" அதாவது சொல்லப்பட்ட மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் அறிகருவிகள் (ஞானேந்திரியங்கள்) பொருளை அறிந்தாலும் அவை தாம் பொருளை அறிகிறோம் என்னும் தன்னுணர்வு பெறவில்லை. கண் பொருளைப் பார்க்கும் நான் பார்க்கிறேன்



என்ற தன்மை உணராது, பொருளை அறிந்தால் மட்டும் போதாது. அறியும் போது அறியும் எல்லையும் அறிய வேண்டும். இவற்றை நாம் உள்ளிருக்கும் கட்டுரைகளில் அவர்களின் உதவியால் விளக்கியுள்ளோம், இன்னும், கண், காது முதலிய உறுப்புக்களையுடைய இவ்வுடம்பு கெட்டவிடத்து ஆன்மாவானது படைப்புக் காலந் தொட்டுச் சங்காரகாலமாகவும் அழியாதுள்ள சூக்கும தேகம் வாயிலாகப் பூதசாரசரீரம், யாதானாசரீரம் என்பவற்றை எடுத்துக் கொண்டு முறையே சுவர்க்கத்திலும் நரகத்திலுஞ் சென்று இன்ப துன்பங்ளை அனுபவிக்கும். பின்னர்ச் சாக்கிராவத்தையிற் கண்டவைகளைக் கனவு காணும் போது மறந்து அறிவு வேறுபட்டாற்போல முன்னரே உடம்பு நீங்குங்காற் கண்ணும் காதும் கெட்டமையும் பூதாசார சரீர முதலியவற்றை எடுத்துச் சுவர்க்க முதலியவற்றிலே சென்றமையும் அங்கே இன்ப முதலியவற்றை அனுபவித்தமையுமாகிய இவற்றை மறந்து அறிவு வேறுபடும்.

அந்நிலையிற் முன்னுடம்பு நீங்குங்கால் அடுத்த வினையினாற் காட்டப்படும் தெய்வப்பிறப்பு, மக்கட் பிறப்பு, விலங்கின் பிறப்பு, நரகர் பிறப்பு என்னும் நால்வகைப் பிறப்புள் ஒன்றை ஆன்மா அவாவுமாறு மனஞ்செலுத்துதலால் அந்தப் பிறவியின் கண்ணே செல்லுதற்கு ஏதுவாகிய புண்ணிய பாவ எச்சத்தினாலே சூக்கும தேகத்தோடே சென்று அம்மனம் தள்ளிய பிறவிக்கு வாய்த்த கருவின் கண்ணே விழும். இது பிறவி எடுக்குங் காற்படும் போது அறிவு வேறுபடுதல், அச்சு வேறுபடுதல், இடம் பேறுபடுதல் முதலியனவாய்ப்பிரியும்.

சூக்கும உடம்பானது சுத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம் என்னும் காரண தன்மாத்திரை மனம், புத்தி, சித்தம் என்பவற்றால் அகங்காரம் என்னும் அந்தக் காரணங்கள் ஆக்கப்பட்டது. இந்தச் சூக்கும உடம்பின் காரியமே தூலவுடம்பு. இறக்குங்கால் ஐம்பொறிகளுள்ளே கண்ணும் காதுமே முதற்கண் கெடும். இவைகள் எல்லாம் காலவரையறையின்றி நடப்பன. இவை பாம்பு தோலை உரித்துப் பிறிதொரு தோலோடு செல்லுதலும்புருடன் நனவுடம்பினின்றும் நீங்கிக் கனாவுடம்பிற் செல்லுதலும் யோகிகள் தமது உடம்பை விடுத்து மற்றோர் சரீரத்திற்போய் மீளுதலுமாகிய இம்மூன்றும் ஆன்மா தூல சரீரம் விட்டுப் போதற்கு உவமைகளாக மிக்கெடுத்துச் சொல்லப்பட்டன. இதன் விரிவு சிவஞானபோதம் பாச உண்மை இரண்டாம் சூத்திரத்தை உள்ளடக்கியது.

இவ்வாறு பலவற்றை உணர ஆற்றுப்படுத்திய பேரறிஞ்ஞர்களுக்கு மனமார்ந்த நன்றியுரித்தாகுக. இவர்களை திருவள்ளுவ நாயனார் பின்வருமாறு புகழ்கிறார்.

*"பெருமையுடையவர் ஆற்றுவார் ஆற்றின்*
*அருமையுடைய செயல்".*

சிவ சிவ.

# என்னுரை

வணக்கம் வரதா

> "கனைகடலும் குலவரையும் கலந்து ஒன்றாய்
> துணைபுரியத் துலங்குகொட் டாஞ்சேனை – புகர்முகவா
> வரதாநின் கண்ணினையாற் கருணை கூர்ந்து
> சரவணமாம் சம்புடத்தைச் சார்". (சரவணம் = தாமரை)

அநாதி மல முத்தராகிய சிவபெருமான் அநாதிமல பெத்தராகிய ஆன்மாக்கள் தம்மையறிந்து வழிபட்டுய்யுமாறு அநாதியாய் திருவாய் மலர்ந்தருளியவை வேதம் சிவாகமம் என விரண்டாம்.

அவற்றுள் முந்திய வேதத்தின் ஞானகாண்டப் பொருளைச் சிவாகமத்துக்கு மாறுபடா வண்ணம் வுள்ளபடி சமய குரவர் தேவாரம் திருவாசகம் என்றும் தோத்திர வாயிலாக விளங்கவுரைத் தருளினார்.

பிந்திய சிவாகமத்தின் ஞானகாண்டப் பொருளை சந்தானகுரவர், திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபாவிருபது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம், என்னும் சாத்திரவாயிலாக விளங்கவுரைதந் தருளினார்.

மெய்கண்ட சாஸ்திரம் பதினான்குக்கு முன்பும் சைவ சித்தாந்தம் பரவியுள்ளது என்பதை இன்னூலில் இருந்து வாசக நேயர்கள் அறிந்து கொள்வீர்கள். இவர்கள் கால எல்லையில் என்ன என்ன தேவைகளைப் பூர்த்தி செய்தார்கள் என்பதை நாம் சற்றுச் சிந்திக்க வேண்டும். இருபகுதிகளாய் உள்ளவர்களும் சொல்லிப் போந்தவைகள் ஒன்றேதான்.

பண்டைய நாளில் வாழ்ந்த மக்கள் முதலில் உலகுண்மையையும் பின்னே உயிருண்மையையும் அதற்குப் பின்னே கடவுள் உண்மையையும் படிப்படியாய்க் கண்டிருப்பார்கள். இம்முப்பொருள் எங்குமுள்ள கடவுள் உலகு உயிரில் கலந்து நிற்றலை அவர்கள் நாளடைவில் உணர்ந்திருப்பார்கள். இக்கலப்பே பின்னை நாளில் அத்துவிதம் என்று சொல்லப்பட்டது.

முப்பொருளைப் பற்றியும் அத்துவிதத்தைப் பற்றியும் ஆராய்ச்சி முதிர முதிர பலதிறக் கருத்து வேற்றுமைகள் தோன்றின. அவைகளிற்பல நூல்களாகி உலவுகின்றன. அந்நூல்களால் சிலசமயம் நலனும், சில சமயம் தீங்கும்



விளைகின்றன. காய்தல், உவத்தல் அகற்றி நடுநின்று உண்மை காணும் நோக்குடன் நூலாராச்சி செய்வோருக்கு நற்பயன் விளையும், மற்றவர்க்குத் தீப்பயன் விளையும்.

தத்துவ விதை முதன் முதல் நமது நாட்டில் விதைக்கப்பட்டது. இவ்வுண்மை சரித்திரக் கண் கொண்டு பார்ப்போர்க்கு நன்கு விளங்கும். மிக மிகப் பழைய காலத்தில் அதாவது சரித்திரகாலத்துக்கு பல்லாயிர மாண்டுகளுக்கு முன்னர் நமது நாடு நாவலத் தீவு என்ற பெயர் பெற்றிருந்தது. ஆத்தீவில் வாழ்ந்த மக்களுள் ஆத்ம சத்தி பெற்றவர் சித்தர் என்று அழைக்கப் பெற்றனர். அவர் கண்டமுடிபே சித்தாந்த மென்பது. இது சித்தமார்க்கம் என்னும் நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

சித்தமார்க்கமாகிய சித்தாந்தம் ஒரு போது உலகம் முழுவதிலும் பரவி இருந்தது. இந்நாளில் உலகத்தில் நிலவும் சமயங்கள் யாவும் சித்தாந்தத்தின் சிதைவுகளேயாம். இச்சிதைவுகள் பொருந்து மிடங்களுக்குத் தக்கதாகப் பெயர் பெற்று இருக்கின்றன.

சித்தாந்தம் இடைநாளில் தான் பிறந்த நாட்டிலே வடக்குப் பகுதியில் வேதாந்தம் என்னும் தெற்குப் பகுதியில் சித்தாந்த மென்றும் வழங்கலாயிற்று பின்னே இரண்டும் வேறாய்க் கருதப்பட்டன. வேற்றுமை உணர்வால் வாதப் போர்களும் எழலாயின.

நமது நாட்டு மொழிகளுள் தொன்மை வாய்ந்தன இரண்டு, ஒன்று வடமொழி, இன்னொன்று தென்மொழி, முன்னையதில் உள்ள நூல்களில் பழையது வேதம். பின்னதில் உள்ள நூல்களில் பழையது தொல்காப்பியம் பழைய இருக்கில் இயற்கைக் கூறுபாடுகளும் உயிர் வளர்ச்சியும், கடவுளியல்பும் பேசப்பட்டிருந்தாலும் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் இயற்கை நிலை கூறும் இன்பமும் ஓரறிவுயிர்கள் முதலியனவும் கந்தழிக் கடவுள் நிலையும் பேசப்பட்டிருத்தலும் வெள்ளிடைமலை, வடமொழி நாளுக்கு நாள் பெருகலாயிற்று அதன் கண் புகுந்துள்ள ஞானப் பகுதியாகிய உபநிடதம் அதாவது வேதாந்தம் – மன்பதையே கவர்ந்தது, வேதாந்தம் கடல் போலப் பெருகிற்று என்றுங் கூறலாம். அக்கடலிற் பலர் படித்து ஆழங்காண்டல் அரியதாயிற்று. அவ்வறுமையைப் போக்க வியாச முனிவர் முயன்றார். முயன்று வெற்றியும் பெற்றார்.

வியாச முனிவர் தனது நுண்ணறிவினால் வேதாந்தக் கடலைக் கடைந்து வேதாந்த சூத்திரம் என்னும் அமுதை உலகுக்கு உதவினார். வேதாந்த சூத்திரத்திற்கு பிரம சூத்திரமென்று மற்றொரு பெயரும் உண்டு. இச்சூத்திரத்திற்கு உரைகள் அறிஞ்ஞரால் வரையப்பட்டன.

உரைகள் தோன்றுதற்கு முன்னர் வேதாந்தம் ஒருமை நோக்குடன் அறிஞ்ஞரால் கொள்ளப்பட்டு வந்தது. உரைகள் தோன்றிய பின்னர் வேதாந்தத்தின் ஒருமை நோக்கு நாளடைவில் பாழ்படலாயிற்று. சிவாத்துவித மென்றும், கேவலாத்துவித மென்றும், விசிஷ்டாத்துவிதமென்றும், துவிதமென்றும் பிற என்றும் வேதாந்த உலகில் சுவடு கோடுகள் முளைத்தன. அவைகளின் மீது செடி, கொடிகளும், தூறுகளும் படர்ந்தன.

உரைகாரர்கள் பெயரால் மடங்களும் சம்பிரதாயங்களும் காணப்பட்டன. அவைகளை யொட்டி வாதப்போர்களும் பிணக்குகளும் வீறிட்டெழுந்தன. மூலத்தின் ஒருமை மக்களின் உண்மை அரியாசனத் திலினின்றும் இழிந்து வீந்தது. உரைகளின் பன்மை அங்கே இவர்ந்து ஆட்சிபுரியலாயிற்று. உரைகள் வரைந்த பெரியோர்கள் மீது பழிசுமத்தத் தொடங்கினர். இது அறியாமை அவர் கருணை மேலீட்டால் அவ்வக்காலத்துக் கேற்றவாறு உரைகளை வரைந்தார்கள். உரைகளையொட்டி காணப்பெற்ற மடங்களும் சம்பிரதாயங்களுமே பழிக்கு உரியனவாம்.

உயர்திணை உலகம் என்னும் ஒரு பெற்றியாயிராது அதன் கண் கருத்து வேற்றுமை நிகழ்வது இயல்பு. சிற்சில சமயம் மூன்று பொருளில் ஒன்றை விடுத்து மற்றொன்றை மன்பதை கொள்ளும் அதனால் வாழ்வும் குலையும் அந்தந்த நேரத்தில் சான்றோர் தோன்றி மன்பதை விடுத்த ஒன்றை வலியுறுத்திச் சென்றனர்.

இவ்வாறான கொந்தளிப்பு நிலையிலே சமய குரவருள் முதல்வரான திருஞான சம்பந்தக் குழந்தை தோன்றி ஞானப்பால் உண்டு ஓர் சுமூகமான நிலைக்குக் கொண்டு வந்தது. இவர்களுக்கு சமண சமயத்தவரும், பௌத்த சமயத்தவரும் நெருக்கடியை உண்டாக்கினார்கள். இதனாலேதான் நாவுக்கரசு நாயனாரும் சமண சமயத்தைத் தழுவவேண்டிவந்தது. இவரை தமக்கையார் சிவனை வேண்டி மனதை மாற்றியருளினார். பல்லவர் காலமும் இதுவேதான் இன்னும் இவர்களாலும் இடர்கள் வரத் தொடங்கின.

சமய குரவர்களில் சைவசமய சித்தாந்தக் கருத்துக்கள் மூலமாகவுடைய சிலதிருத்தாண்டங்கள் தம்மையும் அவ்வளிக்கு இழுக்கச் செய்யும் சிவனுடைய திறமையை வியந்து திருப்பள்ளியின் முக்கூடலில்,

*"ஆராத வின்னமுதை யம்மான் றன்னை*
*யயநெடுமாலறியாத் வாதியானைத்*
*தாராகு மலர்க் கொன்றைச் சடையான் றன்னை*
*சங்கரனைத் தன்றெப்பாரில்லாதானை*

*நீரானைக் காற்றானை தீயானை*
*நீள் விசும்பாயாழ்கடல்களேழுஞ் சூழ்ந்த*
*பாரானைப் பள்ளியின் முக்கூடலானைப்*
*பயிலாதே பாழேநா னுழன்ற வாறே"*

*"மண்ணாகி விண்ணாகி மலையுமாகி*
*வயிரமுமாய் மாணிக்கந் தானேயாகிக்*
*கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியுமாகிக்*
*கலையாகிக் கலைஞானம் தானேயாகிப்*
*பொண்ணாகி பொண்ணுக்கோர் ஆணுமாகிப்*
*பிரளயத்துக் கப்பாலோர் அண்டமாகி*
*எண்ணாகி யெண்ணுக்கோரெழுத்துமாகி*
*யெழுஞ்சுடராயெம் மடங்களின்றவாறே"*

அவன் அதுவாதல் மணிவாசகரில் என்னென்று பார்ப்போம்.

*"இன்று எனக்கு அருளி இருள் கடிந்து உள்ளத்து*
*எழுகின்ற ஞாயிறே போற்று*
*நின்ற நின் தன்மை நிலைப்பு அற நினைந்தேன்*
*நீ அல்லால் பிறிது மற்று இல்லை*
*சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து ஒன்று ஆய்*
*திருப்பெருந் துறைஉறை சிவனே*
*என்றும் நீ அல்ல அன்றி ஒன்று இல்லை*
*யார் உன்னை அறிய நிற்பாரோ"*

*"துணியா உருகா அருள் பெருகத்*
*தோன்றும் தொண்டர் இடைப்புகுந்து*
*திணியார் மூங்கில் சிந்தையேன்*
*சிவனே நின்று தேய்கின்றேன்*
*அணி ஆர் அடியார் உனக்கு உள்ள*
*அன்பும் தாராய் அருள் அணியத்*
*தணியா ஒல்லை வந்தருளித்*
*தளிர்ப் பென்பதும் தாராயே"*

சைவசித்தாந்தத் தத்துவம் படிப்பது கடினம், என்ற எண்ணம் சில ஆண்டுகட்கு முன் மாணவர்களிடையேயும், மனிதர்களிடையேயும் நிலவிவந்தன. இதற்கு மிகப் பெரிய காரணம் என்ன வெனில் சித்தாந்தக் கொள்கைகள் இடை இடை வித்தியாசமாய்த் தானிருக்கும் இதைவிடுத்து ஆசிரியர்கள் கடினம் எனக்காட்டித் தொன்னூற்கஞ்சும் தகுமாறுள்ளத் தானாக்கி விட்டார்கள்.

இப்போ அனேக நூல்கள் வெளிவந்து கொண்டிருகின்றன அவைகள் வசனநடையிலும் செய்யுள்நடையிலும் உள்ளன. அவை மாணவர்களுக்கு இலகுவில் விளங்கக் கூடியனவாயுள்ளன.

அருள் விளக்கம் மூலத்தில் உண்டு அதாவது சித்தாந்த நூல்களைப் படிக்கமுன் முறையே வள்ளுவப் பெருந்தகையின் குறள்சித்தாந்தச் செம்மலாகிய திருமூலநாயனாரது திருமந்திரம் அதன் பிறகுநமது சமய குரவர்களின் திருமுறைகள். இவைகளைப் படிக்க வேண்டும்.

நமது முதல் ஏழு திருமுறைகள் கருவூலங்களாம். மற்றயவற்றை திருவாசகம், திருக்கோவை எனவும் ஒழுங்கு படுத்தி வகுத்து விரித்து விளக்கியதும் இக்காரணங் கொய்டேதான் வேண்டியபோது முன்பின்னாகக் கற்கலாம். உதாரணமாக காரைக்காலம்மையார் பற்றி பதினோராம் திருமுறை முறைவரும் வரை காத்திருக்க வேண்டியதில்லை. முதலிலே கற்றாலும் குறைவராது.

*"இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டுகின்றார்*
*பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உனை யென்றும்*
*மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து பாடி*
*அறவா நீ ஆடும்போதுன்னடியின் கீழிருக்க வென்றார்"*

*காரைக்கால் அம்மையார்.*

இவ்வாறான கொள்கைகளையுடையனவற்றை தேவார திருவாசக முதலிய தேன்சுவைகளில் காணலாம்.

இக்கால எல்லையை தேவார காலத்துடன் முடித்து பின்வரும் தலையங்கங்களைக் கொண்டனவற்றை மெய்கண்ட தேவர் அவர் மாணகரின் பாசுரங்களில் பார்த்துக் கொள்ளலாம்.

*"சீவனைச் சிவத்தினொன்றாய்ச் சேர்க்கும் சித்தாந்தத்தோர்க்கு*
*சீவனைப் பரத்தினொன்றாய்ச் சேர்க்கும் வேதாந்தத்தோர்க்கு*
*பாவனை இரண்டுமொன்றே பரமஞானத்தோர்க்கெல்லாம்*
*மேவியகரும காண்டம் விளம்பிடிற் பேதமாமே".*

*– சிவபுண்ணியத் தெளிபு உமாபதி சிவாசாரியார்.*

*"கருவுற்ற நாள்முத லாகவுன் பாதமே காண்பதற்கு*
*உருகிற்றெ னுள்ளமுகாணுங் மிடம்தலங் தேய்த்தொழின்தேன்*
*திருவொந்தி யூரா திருவாலவாயா திருவாரூரா*
*ஒருபற்றி லாமையுங் கண்டிரங் காய்கச்சி யேகம்பனே".*

சிவ சிவ

*நூலாசிரியர்.*





# அன்பே சிவம் அரனும் ஆன்மாவும் திருவுந்தியாரில்



### கடவுள் வணக்கம்

*மூவர்க்கும் முதற் பொருளாய் முத்தொழிற்கும் வித்தாகி*
*நாவிற்கும் அறியா மனத்திற்கும் ஐங்கர! விநாயகரே!*
*தேவர்க்கும் முனிவர்க்கும் சித்தசித் தாந்தர்க்கும் சித்தானவரே*
*சீராக என்தனக்கு சிற்கருணை செய்தருளவாராயோ*

திருவுந்தியார் = திரு + உந்தி + ஆர் என மூன்றாக பகுக்கலாம்.

திரு = அருட்சத்தி, உந்தி = பறத்தல், ஆர் மரியாதை பன்மை விகுதி.

அருட்சத்தி ஆன்மாக்களுடைய மலபந்தங்களை நீக்கச் (பறக்க) செய்யும், மகிமையது. திருவுந்தியாரின் பொருள் = உந்தி என்பது மகளிர் குழாங்கூடி விளையாடும் விளையாட்டு. மகளிர் கூடி நின்று ஒரு பொருளை ஊதி மேலே பறக்கச் செய்து விளையாடுவது.

திருவுந்தியாரின் முழுமையான பொருள்: அருட்சத்தி ஆன்மாக்களின் மனஉந்தல். மல நீக்கல் விளையாட்டு எனலாம் மலநீக்கம் = திரு அருட்சத்தி பதிதல். இன்னும்: உம்தீபற = உம் + தீ + பற என பிரிபடும். உம்முடைய தீமைகள் பறந்து போகக் கடவது. தீமைகள் என்றவிடத்து : அநாதி குற்றத்தை விளக்கும் இம்மலங்களையும் கருவி காரணங்களையும் தேகாதி பிரபஞ்சங்களையும் விட்டுப்போம்படி இந்த ஞான சாஸ்திரத்தின் கருத்தே கருத்தாக நிற்பது என்பதாம்.

**அரன்** :- திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார் என்ற பெயரை தாங்க வந்த ஞானகுருவாம், முதற்கடவுள் (சிவன்)

**ஆன்மா** :- ஞானகுருவால் உபதேசம் பெற்ற சீடன் திருவியலூர் ஆளுடைய தேவனாயனார். அரனாகிய ஞானகுருவால் ஆன்மாவாகிய சீடனுக்கு உபதேசிக்கப்பட்ட உபதேச நூலே திருவுந்தியார்.

**திருவுந்தியார்** :- 1147, 1148, அதாவது பன்னிரண்டாம் நூற்றாண்டில் அருளப்பட்டது. தமிழில் வெளிவந்த சித்தாந்த சாத்திரங்கள் பதின்நான்கினுள் முதல் வெளிவந்த சித்தாந்த சாத்திர நூலாகும்.

அரன் ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று ஆன்மாக்களின் மலபரிபாகத்திற்கு உபதேசிக்கும் முறைமையையும் அவன் உபதேசத்தைப் பெறுவதற்கு ஆன்மா செய்ய வேண்டிய சாதனை நெறியும், உபதேச நெறியில் திருவுந்தியாரில் அமைந்துள்ளன. இது ஒரு சாதனை நூல் மூன்று அடிகள் கொண்ட நாற்பத்து நான்கு செய்யுள்களால் அமைவுற்றது. அவ்வுபதேச நெறிகளை யாவரும் வெகுவில் விளங்குமாறு.

ஞான குருதரிசனம்:–

*அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்*
*சகளமாய் வந்தென் றுந்தீபற*
*தானாகத் தந்ததென் றுந்தீபற* – இதில்

*ஞான குரு உபதேசம் (பொதனம்)*

அநாதியே நிர்மலமாய் தன்னைக் கூடினவர்களாலும் கூடாதவர்களாலும் அறிதற்கரிய பரிபூரணமான பெரும்பொருள் சிவமே. நம்பொருட்டாக எழுந்தருளி வந்து ஒரு திருமேனி கொண்டு தீட்சையினாலே சஞ்சிதத்தை ஒழித்து பிரார்த்தம் புசிக்கச் செய்பவரும் அவரே. அதில் அழுந்தாத படியும் ஆகாமியம் ஏறாதபடி நிலையிலே நிறுத்தி மாயாபடலத்தை உரித்து ஒழித்து அதன் மூலமாக நிகளத்தை விடுவித்து அருளாகிய அமிர்தத்தை புசிப்பித்து தன்னுடைய திருவடியிலே கூட்டி வேறறா நிற்கச் செய்பவரும் அவரே.

சிவன் அனாதியே கூடிப் போந்த பிரபஞ்சவாதனையை கூடாதபடி இந்தப் பொருளினாலே அனவரதமும் வாதனைப் படாமுறைமையை அருளிச் செய்கிறார். இரட்சிக்கப்படாதவர்களுக்கு பிராரத்த காரணமாய தேகம் நிற்கையால் அநாதி காலந் தொடங்கி இந்திரியாதிகளுடன் கூடிவருகின்ற வாதனையை விடுதல் அரிதாய் இருக்கும்.

இது எது போலவெனின் பிறவிக்குருடனாய்த் திரிந்தவன் சிவ கடாட்ஷத்தினாலே கண்விழித்தால் அனேக காலம் அந்தகராகி வாதனை பண்ணிப் போதலால் உண்டாய மருட்சியால் வழியைக் குழி என்றும் பழுதையைப் பாம்பென்றும் சந்தேகித்து முன்வந்தாரை அவை யாதெனக் கேட்டு நிற்பது போல இருக்கும்.

பிராரத்தத்தாலே இந்திரியாதி விடயங்கள் வந்தடுத்த காலத்தில இவற்றின் ஐக்கியத்தினாலே பிறப்பு கூடாநிற்கும். இது கூடாத படி பிராரத்தமான கன்மம் அனுபவிக்கும்போதே அவற்றினை ஏற்றுக் கொள்ளாமல் கூடுகிற உபாயத்தை கண்ணாகக் காட்டுகிற சிவனருளினாலே வாதனை பண்ணுவதொழிந்து பேய்த்தேர்போல் நிலையில்லாத பிரபஞ்சத்தை மெய்யெனக் கருதி பேறு பெறாமல் நிற்பதை ஒக்கும். ஆதலால் ஒப்பில்லாத பொருள் ஞானக் கண்ணென அந்தப் பொருளுடனே சிவசெபதியான பாவனை பண்ணி நிற்கவேண்டும்.



எம்முடைய பாக்கியத்தாலே தமக்குப் பிரானான சிவன் கோசரமாக ஆசாரியராக எழுந்தருளி வந்தவரைக் கொண்டே தீக்கையாற் சஞ்சிதபாத கன்மத்தையும் போக்கி தேகத்துடனே பிராரத்த கன்மத்தையும் போக்கி நிறுத்தியவருடைய ஞானக் கண்ணாலே ஆகாமியத்தையும் போக்கி மூன்று கர்மத்தையும் போக்கித் தீர்த்த ஆசாரியர் வசப்பட்டு நிற்பவர்கள் ஒருகாலும் தேகவாதனையின் வழி நிற்க மாட்டார். ஆகையால் கன்மங்கூடாதபடி ஆசாரியர் கடாட்ஷத்தாலே சிவனது திருவடியிலே நிற்பவர்களுக்கு ஒரு காலத்திலும் ஜனன மரணம் இல்லை.

இந்நிலையிலே நின்று சிவனை அனுபவத்தால் உண்டான சுகம் வாக்கால் உரைக்க வராது.

தன்னுடைய நிலையையும் சிவரூபத்தினுண்மையையும் இந்த சிவரூபக் கண்ணாலே அறிந்து அத்துடனே வேரறா நின்று அனுபவிக்கத்தக்க ஐக்கியம் உண்டானபோது வாக்கால் உரைக்கப் படாதாகையாலும், மனவாக்குக் காயங்கள் மாயாவிகற்பமாகையால் இவற்றிற்கு அதீதமாய் இருத்தலாலும் இப்பொருட்கு ஒரொப்பில்லா தொழிகையாலும் இப்படி இருந்ததென்று எப்படி உவமித்துச் சொல்லுவேன்.

ஒருவனுக்கு கன்மந்தொலைபோகிறகாலத்து மலபரிபாகமும் பிறந்து தேசிகனுடைய திரவடியைப் பெற்று சிவரூபத்தையுமுணர்ந்து இரண்டறக்கூடி பரமானந்தம் விளைந்து அந்தப் பரமசுகத்திலே அழுந்தின காலத்து அவனுக்கு எப்படி இருந்ததோ அப்படியே எண்ணுவதொழிந்து இன்னபடியென்று அளவுபடுத்தி உரைக்குமதன்று. ஆதலால் அப்படியே இருந்தது. அப்படி இருந்த பொருளை ஆன்மஞானத்தால் அறிந்து கூடத்தக்கதன்று. இப்படிப் படர்க்கையாய் நின்ற சொரூபந்தானே அநாதியே நமக்குத் தன்மையுமாய் முன்னிலையுமாய் கன்ம ஒப்பும் மலபரிபாகமும் பிறந்த பின்பு ஆசாரியனுமாய் வந்தது. என்று அருளிச் செய்கின்றார்.

இப்படிப்பட்ட பொருளாய் உள்ளவனே ஆன்மாவைக் கூடி பிரிந்தற் கரியனாகையினாலே ஒன்றென்றும் பதியுமாய் யாம் செய்த கன்மத்துக் கீடாக உபதேசிக்க வேண்டி அவன் அவள் அது என்ற பலவாய் நிற்கத்தக்கவனுமாய் இப்படி நின்று கன்மத்தையும் தொலைப்பித்து மலத்தையும் பக்குவமாக்கின. இந்த அவசரத் தினாலே நமக்கு ஆசாரியனுமாய் எழுந்தருளி வந்தான். இப்படி எழுந்தருளி வந்து அநாதியே தொடங்கி இருந்தனனெனவும் திருவருள் கிடையாமல் நரகத்திலே உழன்ற நம்மையே காருண்ணியத்தின் மிகுதியாலே பெறுதற்கரிய திருவடியைத்தந்து அடிமை கொண்டான் என்க.

சர்வத்தையும் தம்பிரானார் கூடிநின்று கூடுகை செய்து நின்ற இந்த முறையை அறியாமல் தன்னாலே செய்யப்பட்டதென்று கருதும் ஆன்ம சுபாவமும் அருளாலே விட்டுநீங்கி இப்படி நீங்கினோமென்ற தன்னையும் அருளிலே கொடுத்து தானும் அருளேயாய அப்பொழுதே கர்த்தா என இவனைக் கருதிக் கொண்டு, இவன் செயல் எல்லாம் தன்செயலேயாக்கி, இவனும் தானாகவே நிற்பான். இப்படிக் கூடி ஒருவன் கைமாறு செய்யத்தக்கதாக தன்னை ஒழிந்த பொழுதிலே வேண்டுவது கொடுக்கையன்றி தன்னையே தந்தானொருவருக்குச் சிவனும் ஒரு பதங்களைக் கொடாமற் கரையற்ற பதமாக அவனைப் போல தன்னையும் அவனுக்குக் கொடுப்பான்.

இப்படிப் பெற்ற பொருளுடனே ஏகி பாவம் பிறந்து ஒரு நீர்மையாய் நிற்கும் உபாயம் எப்படி என்று வினவுவோமாகில் இது எப்படியெனில், நம் பொருட்டுத் திருமேனி கொண்டு எழுந்தருளி வந்து தம்பிரானார் நமக்கு திருநாமமாகிய பஞ்சாட்சரத்தை ஒருகால் அருளிச் செய்யக் கேட்டும் உள்ளபடி காட்டக் கண்டும் அந்தச் சொரூபம் அநாதியே தம்மிடத்திலே கூடிநிற்கிற முறைமையை உணர்த்தியும் அவர்கட்கு முறைகளிலே சீவன்கள் நிர்விகாரிகளாய் நிற்பர். இவர்கள் அக்கினி கலந்த மெழுகுபோல் உருகப் பேரன்பு கூர்ந்து கரையழிந்து இருந்த காலத்து (குளிகையாலே காளிதமறப் போக்கப்பட்ட செம்பிலே உள்ள மாற்றெழுந்து செம்பென்னும் பெயர் கெட்டு பொன் என்னும் பெயர் பெற்றாற்போல) ஆன்ம சொரூபம் மறைத்து சிவசொரூபமேயாய்ச் சிவனென நிற்பர். அப்படிக் கூடுகை ஒழிந்து ஆய்வுடையபோதத்தால் ஆராய்ந்து கண்டு கூடுதற்கரியர். இப்படித் தஞ்செயல் கூடாதே கூடினவர்களே மேலான ஞான ஐஸ்வரியத்தையுடையவர்கள்.

இதைவிடுத்து வேறுவழிகாணில் மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம். விசுத்தி ஆஞ்ஞை என்று சொல்லப்படாநின்ற ஆதாரர்களிலே ஒவ்வொரு ஆதாரந்தோறும் பொருந்தின தேவதைகளைத் தியானித்து சமாதியடைந்து இதுகைவந்தபின், நிராதார யோகமென்று சொல்லப்பட்ட ஆன்ம சொரூபத்தையுணர்ந்து ஒரு பற்றுமின்றிச் சமாதி பரனாய் நிற்க அந்தந்த நிராதார யோகத்துக்கு உபயோகமாகிய மேலான யோகத்திலே சாதித்துத் தன்னுடைய செயலற நிற்குமதைச் சாத்திரங்களின் வழிகளிலே ஆராய்ச்சி செய்து, மீதானமாகிய சிவசொரூபத்திலே கூடும்படி சிரத்தை பண்ணுவாயாக! இப்படிப்பட்ட இடமே நிர்மலனாகிய சிவனைக் கூடத்தக்க இடம்.

நற்போதத்தாலே மூலாதாரமுதல் பிரமாந்திர மீறாயுள்ள ஆதாரங்களிலே ஒவ்வொரு தேவதைகளைத் தியானித்த காலத்தில் உண்டு போலத் தோன்றியும்



தியானியாத காலத்து இல்லையாகியும் இப்படித் தியானிக்கப்பட்ட தேவதைகள் இந்தத் தேகத்தில் ஆதாரங்கள் போலப் போகத்துக்கு தானமாகிய அண்டத்திற்கு உட்பட்ட பதங்களிலே அடைவிக்குவ தொழிந்து, பரிபூரணமான சாயுச்சியத்தை அடைவிக்க மாட்டா. அஃதேதெனில், ஆன்மபோகமானது சீவிக்குமளவில் அதே முகமாக வொழிந்து சீவியாதாகையால் அதனாற் கற்பிக்கப்படும் அவை யெல்லாந் தனக்கு அநாதியே வாதனைபண்ணிப் போந்த மாயாரூபமே யொழியத் தன்னை விட்டுநீங்காத சிவசொரூபத்தையுணர்த்தாது ஆதலின் தன்னுடைய போதத்தால் கற்பிக்கப்படுமவையெல்லாம் விசாரித்துப் பார்க்கில் சொரூபமல்ல. இவ்விதமாக மனோகோசரமாயுள்ள பொருள் இவனுடைய கற்பனையில் அகப்படாது.

பஞ்ச பூத பரிணாமமாகிய தேகத் துடனே கூடிநின்றால் உள்ள தோஷத்தை அறிந்து வேறாகக் கண்டு நீங்கி நிற்கவே இந்தத் தேகமும் பிரமாண்டமாகிய பஞ்சபூதங்கள் போல இவனுக்குறவாகியே நிற்கும். இவற்றை அருட்கண்ணாலே கண்டு நீங்கின ஆன்மாவுக்கு நீங்கின பொழுதே இவனுடைய இச்சா ஞானக் கிரியைகளும் தொலைந்து இவனுக்கு அனாதியே பிராணனாய் மறைந்து நின்று இரட்சித்த சிவனும் இவனைக் கவளீகரித்துக் கொண்டு தானான்மாவாகி நில்லாநிற்பன்.

இந்த நிலை தவறாமல் நிற்பதெப்படியெனில் ஒருவனோரூர்க்குப் போகுமளவில் மற்றொருவன் காட்டிவிட்ட குறிவழிச் செல்லாமற் பக்கமே செல்லத்தக்க கள்வருடைய அடிப்பாட்டை வழியெனக் கருதிற் சென்றால். கள்ளராலே விசனப்படுவார். இந்த விக்கினங்கள் கூடாதபடி பக்கவழிகளிற் செல்லாமல் ஒருவன் காட்டி விட்ட குறிவழிச் சென்றால் பெரு வியாகூலமுமறப்போய்க் கருதினவூரிலே சென்று தன்னுடைய கோட்பாடு முடிப்பான். அதுபோல, சொரூபத்திலே சென்று இரண்டறக் கூடுகின்ற வழிக்கு விரோத வழியாகிய மயக்க விகற்பங்களிலே விழுந்து ஜநந மரணங்களை அடையாதே தன்னுடைய சொரூபத்திலே வந்து கூடும்படி வழிகாட்டி நிற்கிறவுணர்வு கண்ணாகக் கேவல சகலத்திலே தாக்காமலிருக்க வேண்டும். இதுவே வேதாகமங்களின் தீர்வாகும்.

ஆன்மாவுடனே கூடி ஆன்மாவாய் நின்றும் தன்னுடைய உண்மை குற்றமற பரமானந்த சொரூபமாய் நிற்கிற அந்தச் சொரூபத்தை கூடவிசாரித்து அதுதனியே ஒரு பொருளாக உன்னிடத்திலிரண்டு பட்டு நின்று பொருந்த விசாரிக்கில் உனக்கு அப்பொருள் கைகூடாது. அநாதியே அந்தச் சொரூபந்தன்னைத் தோற்றாமல் நீயாகி நின்ற முதைமைபோல் நீயும் உன்னை தோற்றாமல் அந்தச் சொரூபந்தானாகியே நிற்கில் அப் பொழுதே பரிபூரண பரமாநந்த சொரூபமாய் விடுவாய்.

இந்த உபாயத்தை அருளிச் செய்த குருவின் பெருமைதான் என்னே.

1. மூலையிருந்தாரை முற்றத்தே விட்டார் சாலப் பெரியரென்றும் தீபற, தவத்தவத்திற்றலைவரென்றுந் தீபற,

2. தவத்திற் தலைவரென்றுந் தீபற.

*(திருவுந்தியார்) உரை வருமாறு.*

மாதாவிடத்துண்டான சுரோணிதத்திலே பிதாவிடத்துண்டாகிய சுக்கிலம் பவளப்பையில் முத்தை வைத்தாற்போல படுகிற நாளில் சீவனானது பிராணவாயு வாகனமாகவும் மனம் வழியாகவும் இவனுடைய ஆஞ்ஞையாலே சென்று, சுக்கிலசுரோணிதத் தலையிலே பதிந்து கன்மத்துக்கீடாக மூன்றரைக்கோடி ரோமத்துவாரமும் எழுபத்திராயிர நாடியும் வாயுவிற் பிரதானமான தசவாயுவும் கவத்துவாரமும் எண்சானுடம்பும் ஏழுதாதுவும் ஆறாதாரமும் ஐந்து பொறியும் நாலு கரணமும் மூன்று மண்டலமும் இரண்டு வினையும் எனப் பெயர்பெற்று இவற்றை ஒன்றெனப் போர்த்த புறத்தோலுமாக ரூபகரித்து பிராரத்தமளவுந் தன்னுடைய தேகத்தில் உந்திச் சக்கரத்தின்மேலே கிடக்கும்.

ஆறாமாதமுதல் உந்தி நாளத்தாலே மாதாவினிடத்திலே அன்னரசமுங் கொண்டு அவ்வன்னரசத்தின் மிகுதியாலே சுழு முனைநாடி அடைபட்டு இடையும் பிங்களையுந் திறந்து பிராணவாயு புகுந்து மேனோக்கி நாசித்துராரங்களாலே விட்டெழுந்த விதத்தாலே நாளொன்றுக்கு இருபத்தோராயிரத்து நூறு சுவாசசவுச் சாரணந்தோன்றி முப்பத்திரண்டு நூறாயிரத்து நாற்பதினாயிரம் உருச் சென்றவாறே உதர கன்மந் தொலைந்து, மாதாவிடத் துண்டான பிராணவாயுவிலே தம்பிரானுடைய காருண்ணியத்தாலே சத்தியையஷ்டித்துக் கொண்டு, இந்தச் சத்தி பலத்துடனே வாயுவானது பிரஞ்ஞையைப் பூமியிலே பதிவிக்க வேண்டிய பிரஞ்ஞாபத்தியமென்னும் பெயர்பெறுகிறது.

இவனுடைய போதம்போல இவனுடைய தேகமுங் கீழ் நோக்கி விழும்படி தன்னுடைய பலத்தாலே தலைகீழாகத் தள்ளிப் பூமியில்வந்தபின்பு, தேகத்துக்கடுத்த கன்மங்களாலே புசிப்புகளைக் கருதி இந்திரியங்களாகிய மூலைகளிலேயிருந்து, விடயங்களைப் புசிப் பொழிந்தால் இவனுடைய போதமானது கீழ் நோக்கி சாக்கிர முதல் அதீதமளவாக அவத்தைகளுக்கடுத்த தானங்களாகிய மூலைகளிலே அடைந்து கிடக்கும். இப்படி இரவுபகல் இந்த மூலைகளிளுண்டான விருளினாலே மறைந்து விகற்பித்து மயங்கியும் இப்படிப் போய் சுக துக்கங்களிற் அழுந்தாமற் கீழ்நோக்கின போதத்தை ஒழித்து உண்மையை உணர்த்தி மேலாகிய பிரகாசமான பரமாகாச வெளியிலே விழித்து பரபோகத்தில் அழுந்தும்படி கூட்டுவித்த உபாயகுரு மிகவும் அளவிடப்படாத பெருமையுடைய தம்பிரானாவர். அரிய தவத்தினாலே நின்று



வழிப்பட்டவர்க்கு வேண்டும் வரங்களைக் கொடுக்கவல்ல கர்த்தாவுமாவர். கர்த்தா குரு. தம்பிரான் என்பன சிவனைக் குறிக்கும்.

இப்படிச் சொல், பொருள் இவை கட்கு எட்டாத பொருள் கூடுவது எவ்விடத்தில் ?

தனக்கொரு போக்குவரவு மின்றியே ஒழிவற நிறைந்த சலிப்பற நிற்கிற ஞானத்தை ஆன்மாவின் கண்ணாகக் கூடி அந்த ஞானமேயாய் அந்த ஞானத்தினைக் கியத்தாலே கூடினோமென்கின்ற விகாரமும் அந்த ஞானமும்சேரக் கரைந்த விடந்தானே சிவரூபமாம் இந்தவிடம் போதங்கரைந்த விடத்திலே பிரகாசிப்பதொழிந்து ஆன்மபோதத்தாலே ஆராயத்தக்க விடமன்று.

இந்த விடத்தைத் தேசிகனாலே அறிந்தே அவனறிவித்த வுபாயத்திலே அவதிகூடாமற் கூடவேபிரகாசிக்கும் எப்படியெனில் ஆன்மாவை அநாதியே பொருந்திப் போதுகிற அருளாகிய சிவசத்தியை ஆசாரியன் கடாஷத்தாலே பிரகாசிப்பிக்க அந்த ஞானத்துடனே அந்தமயமேயாய் நிற்பது. அப்படி நிற்கவே சிவமானது உன்னையே கண்டு கிரகித்துக் கொள்ளும்.

மலமாய கன்மங்களைப் போக்குகிற ஞானத்தை ஆசாரிய கடாஷத்தாலே இவன்பற்றவே அப்பொழுதே சிவபிரான் இவனைப் பற்றினோமென்கிற நினைவையும் அறுத்துத் தானாக்குவான்.

தேகேந்திரிய பிராணவாயு அந்தக் கரணங்கள் முதலாயுள்ள பற்றுகளை அறுக்கத்தக்க திருவருளை ஆன்மா பொருந்தி அந்த ஞானமேயாய் நிற்கில் அப்பொழுதே ஞானமாய் நிற்கின்றோமென்ற பற்றையும் அறுத்துச் சிவன் தானாக்கியே விடுவான். அல்லது சிவனைத் தியானித்துக் கூட வேண்டுமென்று விசாரிக்கில் அவன் ஒருக்காலும் கூடப்படான்.

இப்படிக் கூடிநின்றவர்கள் ஒன்றிலும் பற்றாமல் உணர்த்தும் முறைமையினும் அவத்தையினும் அழுந்தாமல் சிவஞானத்தாலே சிவனைத் தரிசிக்கின்ற சிவயோகிகளுக்குப் பிராரத்தத்தாலே கன்மங்கூடிற்றாயினுந் திருவடி ஞானக்கண்ணாக நிற்கையாலே ஒருவிடயங்களிலும் இரார்கள். தாழ்ந்த நாவையுடைய மணிபோல அசையும் ஆரவாரமும் அன்றிருப்பார்கள்.

இப்படிக் கூடுங்காலத்து நடுவே ஒருகுறி நிகழுமென்றும் அப்படி நிகழ்ந்தால் செய்ய வேண்டிய உபாயம்.

தம்பிரானார் திருவுள்ளத் தடைந்த ஆன்மாக்கள் கருவிகார ணாதிகளாலுள்ள ஆரவாரங்களை கடாஷந் துணையாகவே மாற்றினையோட்டி வெற்றியுடனே தன்னுடைய பதியைச் சேரச் செல்லுமளவில் (இராசாவின் அருகு நின்ற வாச்சியங்கள் எதிர் கொள்ளுந் தன்மைபோல) அனவரதமும் பரமானந்த நிருத்தம் பண்ணி அருளாநின்ற தம்பிரானார் திருவடிச் சிலம்பும் ஓசையுமான பரவிந்து பரநாதம் அடியார் பிறவித்துக்கள் கெடும்படி ஆரவாரியாய் நிற்கும். திருச்சிலம்பாகிய திருவருளினுடைய ஓசை ஒலியாகிய பிரகாச ஒளிவழியே சென்று அவ்விடத்திலே செவ்வையாக நின்று கர்த்தாவைக் கண்டு தெரிசிப்பாயாக. கர்த்தாவினிடத்திலே உள்ள திருவருளை நீ மறவாதிருந்தாயாயின் உன்னுடைய நினைப்பும் மறப்பும் அற்றுப்போம். இவ்விடத்திலே நீ செய்ய வேண்டியது அஃதொன்றுமே.

சிவன் திருவருளுடனே கூடிநிற்கும் பொழுது சிவனைக் கூடவேண்டுமென்று விரும்புதற்கு முன்னே உன்னுடைய விருப்பங் கெடும்படிக்கு உன்னுடனே வந்து பொருந்துவன். ஒப்பற்ற பராசத்தியினுடைய கணவன். இப்படியன்றி உன்னுடைய போதத்தாற் கிட்டுவதற்கரியன். இரவாகிய ஆணவமும் மாயையுமல்லாத இன்ப வெளியாகிய திருவருளுடனே சீக்கிரத்திலே கூடிநின்று விளங்கும் உண்டென்று சொல்லப்பட்ட பொருள்களும் உண்டென்று சொல்லப்படாத ஆகாயப்பூ முயற்கோடாதிப் பொருள்களுமாகிய இவ்விரண்டு தன்மையுமில்லானாய் வேறே ஒரு தன்மையாளனாவான். அவன் யாரெனிற் பராசத்தியினுடை கணவன். இறைவன் சுட்டறியப்படும் நிலையில்லாப் பொருளுமல்லன். சுட்டறியப்படாத இல்பொருளுமல்லன். நிலையில்லாப் பொருள்தோன்றி யொடுங்கும் மாயாகாரியப் பொருள். இது பொய்ப் பொருளெனவும் அழிபொருள் எனவும் வழங்கப்படும். இப்பொருள் வானத்தாமரை முயற்கோடு முதலியன. இறைவன் அவனருளால் அவன்றாளணைந்து உணரப்படும் சிவசத்து.

யோகப் பற்சியினாலே பிராணவாயுவை உள்ளடக்கித் தன்னுடைய போதத்தை திருவடிகளிடத்திலே செலுத்துவதேயன்றி அல்லாத முயற்சிகளெல்லாம் இழிவு. உயிர்க்காற்று பிராணவாயு. உயிர்க்காற்றும் ஒலிக்காற்றும் உந்தப்பட்டால் வாக்குக்கள் நான்கும்தொழிற்படும். இச் சொல்லாசையாகிய வாக்குகளால் விளிப்புணர்வு எனப்படும் சகலாவத்தை நிகழும். மூச்சு ஒடுங்கில் தொழிற்பாடு ஒடுங்கும்.

மயக்கவல்ல கள்ளத்துடனே மயக்கவல்ல வீட்டையுடையவன் கூடினது போலத் திருவருளுடனே ஆன்மாகூடினால் அந்த ஆன்மாவினுடைய இதயம்



மலமாயை கன்மம் நீங்கி வெட்ட வெளியாயிருக்கும். அப்பால் சிவனைப் பொருந்துகிறதும் எளிதாயிருக்கும். அட்டமூர்த்தத்தைக் கொண்ட சிவனைச் சார்ந்து நின்றவர்கள் தேக முதலிய பிரபஞ்ச பதார்த்தங்களிலே பற்றுவிட்டவர்கள் இப்படிப் பற்று விட்டவர்களே பற்று விட்டவர்கள்.

ஆன்மாவும் முன்னே பொல்லாங்கு விளைக்கப்பட்ட அந்தக் கரணங்களும் திருவருளுடனே பொருந்துதலே இருவினையொத்தது. இருவினை யொவ்வாததனாலே திருவருளைப் பெறுதல் கூடாது. சரியை கிரியைக் காரரைப் போல ஏகதேசப்படுத்தி உள்ளே தியானிக்குந் தியானமும் அதனால் உன்னிடத்திலே ஒருவராலும் முகந்து கொள்ளப்படாத சிவானுபவம் உண்டாம். அப்பால் பாசஞானமும் பசுஞானமுமாகிய பெத்தம் உன்னிடத்திலே பொருந்தாது.

பிரபஞ்சத்திலே வியாபித்து இருப்பினும் அதேபெந்தமில்லாமலிருக்கின்ற திருவருளுடனே கூடி நிற்கிறவர்களுக்கு இந்தப் பிரபஞ்சத்திலேயுள்ள துன்பங்களெல்லாம் நீங்கும். திருவருளுடனே கூடினாலொழிய துன்பங்கள் நீங்காது.

வித்தாகிய ஞானசாரியனைத்தேடிப் பாசஞானம் பசுஞாளமாகிய முனையையிழந்தவர்கள் திருவருளாகிய பித்துக் கொண்டவர்கள் இப்படியன்றி முன்சொன்ன இருவகை ஞானங்களாலும் பெறுகிற பிரயோசனம் ஒன்றுமேயில்லை. சிவனுடைய எல்லையானது ஆன்மாக்களாலே சொல்லப்பட்ட எல்லையன்று வித்து = சிவம், முளை = திருவருள் ஆசாரியர் சொல்ல ஆன்மாக்கள் புகுதுகிற எல்லையே; இப்படியாகையால் நாம் அந்த எல்லையை ஏதாகச் சொல்லப் போகிறோம். அனாதியே ஆன்மாவாகிய கூட்டிலேவாள் சாத்திவாழ்ந்திருக்கப்பட்ட திருவருளை விட்டு வீடாகிய துறவறத்திலே நின்றாலும் பயனில்லை. தீர்த்தம் முதலானவற்றை குறித்து நாடுகளிலே சென்றாலும் பயனில்லை. இவ்விரு வகையாலுங் கூடப்படாத பொருளாயிருக்குஞ் சிவம்.

விசாரிக்குமிடத்து சைவசித்தாந்த மொன்றுமே யொழிந்து மற்றச் சமயங்களெல்லாஞ் சாவியாகப் போகாமையால் அந்தச் சமயங்கள் நிலையிலே நின்று நரகத்திலே விழுந்து துன்பப்படாதே. நிர்மல துரியத்தைக் கடந்து சிவனடியார்கட்குச் சாக்கிரம் மேலான திருவருளாய் நிற்கிறது. இப்படி நின்றவர்களே முற்றத் துறந்தவர்கள். திருவருளைப் பெற்ற காலத்துண்டாகிய சிற்றின்பங்க ளெல்லாஞ் சிவானுபவமாய் முடியும்படிக்கு வரும். இந்த முறைமையாலே பின்பு தனு கரண புவன போகங்கள் உண்டாகா.

1. *'பேரின்பமான பிரமக்கிழத்தியோ டோரின்பத் துள்ளானென்றுந் தீபற உன்னையே ஆண்டானென்றுந் தீபற.*

முன்போலப் பல துன்பங்களையும் பலசுகங்களையும் விட்டுத் தொட்டுமிராமல் இப்போது பெரிய இன்பமான சிவசத்தியுடனே கூடி ஒப்பற்ற இன்பத்தையுடையனாய் உன்னையே இப்படியாண்டான். இது எல்லாருக்கும் கிடையாது.

2. *"பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக் கண்டாரே கண்டாரென்றுந் தீபற காணாதார் காணரென்றுந் தீபற*

அதாவது பெண்டிராகிய ஆன்மா பேயின் வசமாய்ப் பிடிபட்டவனைப் போலவும் ஆன்மாவாகிய சிவன் பிடித்த பேயைப் போலவும் பெற்றவர்களே அருட்கண்ணாலே கண்டவர்கள். இப்படிப் பெறாத பேர்கள் அந்தக் கண்ணாலே காணாத பேர்கள்.

இதையே திருக்களிற்றுப் படியாரும் பின்வரும் வெண்பாவால் விளக்குகிறார்.

> *"பேரின்பமான பிரமக்கிழத்தியுடன்*
> *ஓரின்கத் துள்ளானை உள்ளபடி – பேரின்பம்*
> *கண்டவரே கண்டார் கடலுயிர்த்த இன்னமுதம்*
> *உண்டவரே உண்டார் சுவை".*
>
> *திருக்களிற்றுப்படியார் 77*

பாற்கடலிலே உதிக்கப்பட்ட அமுதத்தை யுண்டவர்களே அதனுடைய சுவையை யறிந்தவர்கள். அதேபோல இன்பமான சத்தியுடனே கூடி ஒப்பற்ற இன்பத்தையுடைய சிவனை உள்ளபடி தெரிசித்தவர்களே பேரின்பத்தை யடைந்தவர்கள்.

நாலாம் பூதமாகிய வாயுவையும் நாதமாகிய சத்தப் பிரமத்தையும் ஆசாரியார் உபதேசித்த முறையே யறிந்திடில் நாலாம் நிலையாகிய சாயுச்சிய திருவருள் கைகூடும் சிவன் இருத்தற்கிடம் அந்தத் திருவருளே.

நீ விடயங்களிலே செல்லும் வழியெல்லாஞ் சிவனிடத்திலே செல்லும் வழியாம் படிக்குச் சிவன் செலுத்துவிக்கிற முறைமையையும் நீ செல்லுகிற முறைமையையும் அறிந்து கர்த்தா செலுத்தாமல் நாமே செல்லுகிறோ மென்கிறசெய்தி



பொருந்தாதே. பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவது போல முத்திக்கேதுவாய் இருக்கிற மனவாக்குக் காயங்களைக் கொண்டு விடயங்களுக்கு முயற்சி பண்ணுவதால் என்னபயன்? அக்கொழு போன்ற மனவாக்கு காயங்களினுடைய அருமையை அறிந்து அவையாலே சரியை கிரியா யோகங்களைச் செய்து பின்பு திருவருளை அறிந்து வேறொன்றையும் அறியாவண்ணம் நில். அது விதுவெனச் சுட்டியறியாமல் எல்லாவற்றையும் ஒரு காலத்திலே அறியுமறிவாகிய அந்தக் கர்த்தாவை அதுவே பொருளென்று ஐயந்திரிபற அறிந்து உந்தீபற: அந்தப் பொருள் யாதெனில் அவிழ்ந்த சடையினை யுடையானென்று உந்தீபற:

ஆன்மா சிவனானது அந்தச் சிவனுடைய கிருபையினாலேயல்லாமல் வேறொன்றினாலுமல்ல ஆன்மா சிவனாகான். அப்படியான காலத்தும் பேரின்பத்தையனுபவிப்பதொழிந்து சிவனுடைய கிருத்தியத்தைப் பண்ணமாட்டான். இதை திருவுந்தியார்,

| | |
|---|---|
| "அவனிவ னான தவனாரு ளாவல்ல | அவனிவனாய் நின்ற தவனருளா லல்ல |
| திவனவ னகா ளென்றுந் தீபற | தெவனாவனாய் நிற்கின்ற கேழாய் – அவனிதனில் |
| என்று மிவனே யென்றுந் தீபற | தோன்றுமரப்புல்லுருவி தொல்லுலகில் அம்மரமாய் |
| *– தி. க.பா. 92* | ஈன்றிடுமோ சொல்லாய் இது – *தி. க. பா* |

இப்படிக் கூறுகிறார்.

முத்தியடைதற்கேதுவாகிய ஆன்மாவாகிய கொடியிலே ஆசையாகிய கொடிபடர்ந்து அத்திப்பழம்போல சிதாகிதங்கள் மிகுதியுமுளவாயின. பிருதிவியண்ட முதலாகிய ஆறத்துவாவையும் உனக்குச் சரமாகக் கொண்டிருக்கிற சரீரத்தைப் பொருளென்று கொள்ளாதே இத்தன்மையே குறைவற்று நின்ற நிலை. ஆன்மா சரீரத்துக்குள்ளே உயிராயிருக்கப்பட்ட சிவஞானமாகிய தேனையுண்டு (தன்மை) பேரின்பத்தையனுபவிக்க மாட்டாமல் மெய்போன்ற விடயமாகிய கள்ளையுண்டு மயங்கும்: அவ்வான் மக்கள் யாரெனில் வறட்டுப் பசுக்களே போன்று பயன்படாத ஆன்மாக்கள்.

தன்னுடைய திருவடித்தாமரையானது என்னுடைய இதயத்திடத்திலேயும் என்னுடைய தலையிடத்திலேயுஞ் சேரும்படிக்கு ஆசாரியராகத் திருமேனி கொண்டுவந்த சிவன் எக்காலமும் பராசக்தியுடனே கூடி வாழ்ந்திருக்கக் கடவர். இதுகாறும் திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் அருளிச் செய்த திருவுந்தியாரில் இருந்து அரனையும் ஆன்மாவையும் ஓரளவு அறிந்து திருப்தியும்பட்டோம். இந்நூலுக்கு திருவாவடுதுறையாதீனத்து சிற்றம்பலத் தம்பிரான் சுவாமிகள்

உரையிட்டுள்ளார் என்பதை மறவற்க.

நாலிரண்டுசாண் உடல்

தாதேழு :

*இரத்தம், உதிரம், எலும்பு*
*தோல், இறைச்சி, மூளை, சுக்கிலம்*

ஆறாதாரம் :

*மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம்,*
*அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை*

ஐம்பொறிகள் :

*மெய், வாய், கண், மூக்கு, செவி*

நான்கு கரணம் :

*மனம், புத்தி, சித்தம், அகங்காரம்*

மூமண்டலம் :

*சூரிய மண்டலம், சந்திர மண்டலம், அக்கினி மண்டலம்*

இருவினை :

*நல்வினை, தீவினை*

*நாலிரண்டு சாணுடம்பு நல்லவித் தாதேழு*
*மூவிரண்டு ஆதாரம் ஐந்துபொறி – மாதேகேள்*
*ஈரிரண்டு கரணம் மூமண்டல மிருவினை*
*காலற வுந்தியாரைக் கேள்.*

*பிழைகளைந்து பெறுக இன்பம்.*

சிவம்

*சிவஞானச் செல்வன், சைவ நன்மணி,*
*ஞானவாரிதி, சொற் கொண்டல்*
இரா. மயில்வாகனம்.



# அரனும் ஆன்மாவும் திருக்களிற்றுப் படியாரில்

*அப்பனீ யம்மைநீ யையனுநீ*
*யன்புடைய மாமனும் மாமியுநீ*
*ஒப்புடைய மாதரும் ஒண் பொருளுநீ*
*யொரு குலமுஞ் சுற்றமுமோரூ ருநீ*
*துய்ப்பனவும் முய்ப்பனவுந் தோற்றுவாய் நீ*
*துணையாயென் நெஞ்சந் துறப்பிப்பாய் நீ*
*இப்பொன்னீ இம்மணிநீ யிம்முத்தும்நீ*
*யிறைவனீ யேறூர்ந்த செல்வனீயே.*

*ஆறாம் திருமுறை திருநாவுக்கரசு நாயனார்.*

உலகு உயிர் கடவுள் என்னும் மூன்றும் என்றும் இருப்பன, உலகு மாறுதல் அடையும் உள்பொருள். உயிர் அறியாமை விரவிய அறிவாகிய உள்பொருள் இம்மூன்றனுள் அறியாமையே இல்லாத முற்றறிவுடைய உட்பொருள் கடவுள். கடவுள் கட்டில்லாத முற்றறிவுடைய தாகலின் அஃது அங்கு இங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்தும் எல்லாவற்றையும் கடந்தும் நிற்கும் தன்மையுடையது. எங்கும் உள்ள கடவுளை விடுத்து உலகும் உயிரும் பிரிந்து தனித்து நிற்பதில்லை. இரண்டும் கடவுளின் அகண்டத்திலே நிறைந்து நிற்பன.

அக்கடவுள்தான் மூவகை ஆன்மாக்களாகிய எங்களை ஆட்கொள்ளுகிறார். என்பதை நான்கு வழிமுறைகளால் அறியலாம். அவைதான் நமது சைவ சித்தாந்தத்தின் மிகுதிப் பொருளுமாகும். இதை உய்யவந்த தேவனாயனார் அருளிச் செய்த திருக்களிற்றுப் படியார் பின்வருமாறு கூறுகிறது.

சிவன் சங்கார காலத்து மலசகிதரான மூவகைப்பட்ட ஆன்மாக்களையும் சிவசத்தியிடத்திலே ஒடுக்கி இந்தச் சக்தியையும் தம்மிடத்திலே கரந்து கொண்டு சிவமொன்று மேயாய் நிற்பர்.

பின்பு இந்தக் காலமானது சென்று சிருட்டி காலமான அவசரத்திலே தம்முடைய காருண்ணியத்தின் மிகுதியினாலே இந்த ஆன்மாக்களை பக்குவமாக்கும் பொருட்டும் அந்தச் சத்தியை மீண்டும் பிரகாசிப்பித்து அந்தச் சத்தியினிடத்திலே தாமும் பொருந்துவர்.

அந்தச் சத்தியிலே ஒடுங்கிக்கிடந்த மலசகிதரான ஆன்மாக்களையும் தோற்றுவிப்பார். இவர்களுக்கு முன்புவிட்ட குறைக்கீடான தனுகரண

போகங்களையும் கொடுத்து தாமும் முதல் கெடாமல் நின்று அவர்களைக் கன்ம மலங்களுக்கீடாக புதுப்பிக்கச் செய்வர்.

இப்படிச் செய்கிற தம்மையையும் இந்த உபகாரங்களையும் தெரியாமல் விஷயங்களிலே இரேசிக்கும்படி திரோபவித்து இந்த நான்கு கிருத்தியங்களினாலும் கன்மமும் துலையொத்து மலபாக முண்டாயிருப்பர்.

இவர்கள் முத்திக்கு பிராத்த ராவரெப்போதென்று அனவரதமும் திருவுள்ளத்தினால் அனுக்கிரகமே பண்ணி, இப்படியுள்ள பஞ்சகிருத்தியங்களை தம்முடைய அருளாலே கடத்திப் போதரநின்ற காலங்களிலே இரக்ஷித்து முறைமையிலே கூட்டிக் கொள்கையினால் இந்தச் சத்தியையுடைய சிவனே சர்வலோகங்களுக்கும் தாயும் தந்தையுமாவர்.

1. பக்குவப்பட்ட ஆன்மாக்களைத் தம்மருளாலே நடத்திப் போதராநின்ற காலங்களிலே இரக்ஷிக்கும் முறை எப்படியெனில்?

அந்தச் சத்தியுடைய சிவன் பக்குவப்பட்ட ஆன்மாக்களை அறிந்து ஒரு மலத்துடனே நின்ற விஞ்ஞானாகலரிற் பக்குவற்கு பிராணனாய் நின்று அம்முறைமையிலே பிரகாசித்தும் இரண்டுமலத்துடனே நின்ற பிரளயாகலரிற்ட பக்குவர்க்குத் திவ்வியமான திருமேனியுடனே தோன்றி அந்தத் தரிசனத்தால் இரக்ஷித்தும்; மூன்று மலத்துடனே நின்ற சகலரிற் பக்குவர்க்கு அவர்களைப் போன்ற திருமேனியுடனே எழுந்தருளி வந்து சந்தினி பாதத்துக்கீடாக நான்கு வகைப்பட்ட தீக்கைகளாலும்

*"திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால் பாவனையால்*
*மிகு நூலால் போகப்பண்பால்"*

என்கின்ற பிரமாணப்படியே ஆறுவகைப்பட்ட காருண்ணியத்தாலும் இரக்ஷித்தும், இப்படி இந்த முறைமைகளிலே அதுக்கிரகியாநிற்பார். இப்படித் திருமேனி கொண்டவாராகில் அவரும் இவ்வுலகங்களில் உள்ளாரிலே ஒருவராகாரோருவனில் அம்மையப்பர் எல்லாவுலகிக்கும் அம்புறத்தார். அருளாலே திருமேனி கொண்டு இரக்ஷித்த தொழிந்து அவருண்மையை ஒருவரும் அறியார்.

அறியுமிடத்து பிருதுவி முதல் நாதமீறான தத்துவங்களுக்கு அப்பாற்பட்டு நின்றே அறிய வேண்டுமாகையால் அறியப்பட்ட சத்தியையுடைய சிவனும், இந்தச் சர்வலோகங்களுக்கும் அப்பாற்பட்டே இராநிற்பர்.

2. சிவன் பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டே யிருப்பாராகில் பிரபஞ்சமானது தானே நடந்ததோ? எனில் இல்லை.



அவர் தம்முடைய அருளாலே சர்வலோகங்களையும் நடத்தும் பொருட்டுத் தம்முடைய சொரூபந் தோன்றாதபடி அறுவகைப்பட்ட அத்துவாக்களே திருமேனியாகக் கொண்டு தத்தம் பிரக்கினையாலே பிரபஞ்ச நடவா நிற்கத்தாம் அவை அவராய் அசைவின்றியே ஒரு பணியற நில்லா நிற்பர்.

இதனாலே கர்த்தாவுஞ், சத்தியும், மூன்று வகைப்பட்ட ஆன்மாக்களும், பஞ்ச கிருத்தியங்களும், மூன்று வகைப்பட்ட ஆசாரிய மூர்த்திகளும், கிரமங்களும், பதமுத்திகளும் சாயுச்சியமும் கருத்தாவேயுமல்லர், அவருமல்லர். பூவிற்கந்தம் போல பக்குவங்களிலே பிரகாசிப்பரென்னு முறைமையும் அவர் கிருபாமூர்த்தி என்னும் முறைமையும் சர்வத்தையுங் கூடிநிற்பினு தோய்விலரென்னு முறைமையும் அறியக் கூடியதாயிற்று.

3. இப்படிச் சிவரூபத்தைத் தரிசித்துக் கூடும் முறை எப்படி?

தம்மிடங்களிற் பக்குவமறிந்து எழுந்தருளிவந்த ஆசாரியரிடத்திலே தாமுங்கூடி வழிபட்டு, ஆசாரியரது அநுக்கிரகத்தாலே முன்பு தாமாக அபிமானம் பண்ணியிருந்த தேகாதிகளைத் தமக்கு வேறென அறிந்து நீக்கி தம்மையுந் தரிசித்துத் திருமேனி கொண்டெழுந்து உணர்த்தின தம்பிரானார் தம்மிடத்திலே நின்று பிரகாசிக்கிற பேறையும் தாம் அறிந்து. தம்மிடத்திலே தோன்றாமல் நின்று நடத்தி பக்குவமாக்கி அந்தப் பக்குவத்திலே இப்படித் தரிசிப்பித்த இந்த ஞானஞேயங்களாகிய சத்தி சிவமான இரண்டு முதலுந் தோன்றா நிற்கும். இப்படித் தரிசிக்கிறோமென்கிற தம்முடைய சுட்டான போதத்தைவிட்டு அந்த ஞானத்திலே பொருந்தி நிற்கில், அப்பொழுதே அந்த ஞேயசொரூபமாகிய சிவமுங்கூடி அந்தச் சிவமாகியே பிரகாசியா நிற்பர்.

4. ஆசாரியரதநுக் கிரகத்தாலே என்னுடைய பசு ஞானம் போனவளவில், நான் அந்த அவசரத்திலே நின்று அநுபவிக்கிறபடி எப்படி?

பசுஞானம் போய்ச் சிவஞானத்திலே அபேட்க்ஷையுண்டானவர்கள் அறியுங்களென்று எனக்கு ஒரு பரமாசாரியார் அருளிச் செய்தபடியே சொல்லக்கேள், எனக்கு ஒரு பரமாசாரியார் என்னுடைய பக்குவத்துக்கு ஈடாக பாரம்பரியம் போல ஒரு உபாயமாக அருளிச் செய்தார். அந்த அவசரத்தை அந்த முறைமையிலே நான் உனக்குச் சொன்னேன். நீபுத்திபண்ணிக் கேட்பாயாக இந்த இடத்தில் ஆசாரியனும் ஆன்மாக்களில் ஒருவராகிறார். பசுஞானம் போய் சிவஞானத்திலே நின்று அநுபவித்தபடியே கேள் என்று ஆசாரியன் அருளிச் செய்கிறார்.

5. ஆசாரியனும் ஆன்மாக்களில் ஒருவனோ? என்று (வினாதோன்ற விடையாக) இன்னும் சிவனைக் கண்டறிய வேண்டுமெனில் உமாபதி சிவம் அவர்கள் அருள் முறைத் திரட்டில்பின் பின்வருமாறு கூறுகிறார்.

*"பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும்*
*பார்ப்பரிய பரம் பரனைப் பதிஞானத்தாலே*
*நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத*
*நிழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதின்*
*ஆசைதரும் உலகமெலாம் அலகைத் தேராமென்*
*றறிந்தகல அந்நிலையே ஆகும் பின்னும்*
*ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்க*
*உள்ளத்தே புகுந்தளிப்பன் ஊனமெலாம் ஓட."*
*(சிவஞானசித்தியார்.)*

திருவம்பலத்தே ஞானமயனாய் ஆநந்த நிருத்தஞ் செய்தருளுகின்ற எம்முடைய சுவாமி. அதாவது, {தன்னுடைய காருண்ணியத்தின் மிகுதியாலே என்னுடைய பிறவித்துன்பத்தைப் போக்கும் பொருட்டாக எனக்கு ஞானக் கண்ணில்லாமை யினாலே ஊனக்கண்ணுக்குத் தோன்ற (அதாவது விலங்கு சாதிகளை பழக்கப்பட்ட மிருகத்தால் உபாயமாகப் பார்வையிட்டுப் பிடிப்பாரைப் போல) சர்வமுந் தனக்கு திருமேனியாகையால், என்னைப் போலச் சகளீகரித்து விசுவத்தில் ஒரு தேகிபோலத் தோன்றி ஆன்மாவையும் மாயா தேகத்தையுங் காட்டி, பிணிக்கு காரணமான விலங்காகிய கன்மமுண்டாம்படி நிற்கின்ற ஆணவமலமாகிய மூலமலம் விட்டுப்போம்படி, அநாதியே என்னை விட்டு நீங்காமல் நின்றும், இப்பொழுது பக்குவப்பட்ட அவசரத்திலே இப்படித் திருமேனி கொண்டெழுந்தருளி வந்து (என்னுடைய பிறவி நோய்க்கீடாக உபாயமாகவே அவனே சங்காரங்களினாலே பேதித்து) அடிமை கொள்ளும்.

6. நாதீத கோசரமாயுள்ள சிவன் நாநீத ஆன்மாவாவனோ?

எனக்கு அநாதியே தொடங்கி விடியாமல் நின்ற பேரந்காரமான ஆணவமலம் பக்குவப்பட்டபடி அறிந்து பரமேசுரன் தன்னுடைய வருளாலே திருமேனி கொண்டெழுந்தருளி வந்து என்னுடைய மலமாய கன்மங்களையும் விடுத்து என்னையும் என்னுடைய சுதந்திர கீனத்தையும் அறிவித்து தன்னுடைய வடிமையாகக் கொண்டு ரூபசொரூபங்களையும் எனக்கேற்பத் தெளிவித்து. தன்னுடைய பரமாநந்த போகத்திலே என்னைத் திருத்தியடைவிப்பள். அவனுடைய எல்லைப்படாத சொரூபத்தை அறியவல்லார் யார்? அதனை அநாதியே சொல்லப்பட்ட ஆகமங்களும் அவற்றிலே வகுப்புண்ட ஆறுசமயங்களும் அந்தச் சமயங்களில் முடிந்த பொருளின் யோகங்களும் இவற்றை அறியத்தக்க விவேக ஞானங்களும் என் செயலன்று என்றும் சாஸ்திரத்தினாற் பிரயோசம் ஒன்றுமில்லை என்றும் எண்ணக் கூடாது.

7. உபதேசமின்றியே சாத்திரம் மாத்திரமே ஓதினால் திருமேனி கொண்டெழுந்தருளிவந்த ஞானாசாரியன் கருணையே உண்டாக மாட்டாது எதனைப் போல



என்றால் ஆழ்ந்த கடற்றண்ணீர் குடித்தவர்க்கு தாகம் தணிந்திடுமோ இதனை உள்ளபடி யோசித்துப் பார். தாகம் தணியாது. அந்தக் கடல்நீர் மேகத்தின் கைப்பட்டு வந்த பொழுதே குறைந்த சலத்திலே மிகுந்த தாகம் தணியா நிற்கும். அதுபோலச் சாத்திரமுங் குருமுகத்தாலே பெற்றாலொழியப் பிரயோசனமாகாது. இதனை ஏற்க. ஐயப்பட்டால் பின்பும் யோசியுங்கள். இவ்வுலகத்திலே உள்ள எல்லா மலங்களும் இப்பொழுது பசுவின் மலத்தாலன்றோ போக்கப்பட்டன. ஆனால் அநாதியே கூடிப்போதுகின்ற தேகாதிகளானவை பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு இல்லையாய் விடும்படி பொருந்தப்பட்ட சுத்த ரூபமான ஞானத்தை பிரகாசிப்பிக்கவல்ல சாமர்த்தியன் திருமேனி கொண்டெழுந்தருளிவந்த ஆசாரியனன்றி வேறொருவர் உண்டோ. இல்லை.

அநாதியே பூரணனாய்த் தோன்றாமல் நின்ற சிவன் காருண்ணியத்தினாலே நம்மைப்போல எழுந்தருளி வந்த ஆசாரியமூர்த்தியையும், அவனாலே இதுதான் அன்றாயிருந்ததெனக் கண்ட தன்னுடைய உடம்பையும் இந்தவுடம்பை வேறென்றறிவிக்க வந்த தன்னையும் ஆகப் பதி – பசு – பாச என்று சொல்லப்பட்ட இந்த மூன்று பொருள்களையுங் கண்டு உட்கொண்டு இதனாலே கர்மத்தை முடித்தவர்களே அவர்கள்.

கன்மமானது சஞ்சிதமென்றும், பிராரத்தமென்றும், ஆகாமியமென்றும் மூவகைப்பட்டிருக்கையால் இவற்றை ஆசாரியன் செய்யுந்தீக்கையிலே அத்துவ சோதனை பண்ணுவதனாலே சஞ்சிதமான கன்மத்தையும் தேகமுள்ளளவும் பிராத்த முண்டாகையால் இந்தத் தேகத்துடனே கூடப் பிராரத்தமான கன்மத்தையும் அவனருளிச் செய்த வுபாயத்திலேதா நின்று ஆகாமிய கன்மமேறாமலும் போக்கிய படியாலுமென்க. அந்த ஞான சொரூபத்தை அண்டத்துக் குள்ளேயென்றும் புறம்பேயென்றுங் கொள்ளாமல் அந்த ஞானம் தத்துவாதீத மாயிருக்கின்ற முறைமையும் அந்தத் தத்துவங்களுக்குத் தத்துவமாய் நிற்கு முறைமையும் ஆன்மாக்களுக்கான்மாவாய் நிற்கும் முறைமையையும் உணர்ந்து தாமும் இந்தப் பரிபூரணமான ஞானமேயாய் நிற்கவே அவர்களுக்கு இந்த ஞானத்தினைக் கியத்தாலே இப்படியாகுமென்கின்ற கருத்துமனுகிட நிற்கும் அப்பொதே அவர்கள் சிவமாகவே நிற்பார்கள். அவர்களே இப்பொழுது எல்லாப் பொருள்களையும் உணர்ந்து பரிபூரணமாய் நிற்கின்ற கலியாணர்கள்.

8. அந்தச் சிவரூபந்தான் எப்படி இருக்கும்?

அநாதியே தொடங்கி ஈஸ்வரனுடைய ஏவலினாலே சிருஷ்டி திதிகளுக்கு கர்த்தாக்களாய் முன்பு சங்கார காலத்திலே ஈசுவரனிடத்தில் கூடத்தக்க பிரம விஷ்ணுக்களும் அவனுடைய உண்மையான சொரூபம் இப்படி இருக்குமென்று இன்றளவுந் தெரிந்ததில்லை. இதனை எவ்வாறு இருந்ததென்று எப்படி நான்

சொல்லுவேன் உவமிக்கவும் ஒன்றுமில்லை. அந்தப் பொருள் யாவர் சிலர்கூடி அநுபவித்த வர்களுக்கு எப்படியிருந்ததோ அப்படியேயிருக்கும்

இன்னும் விளக்கினால்,

*"ஒன்றுங் குறியே குறியாத லாலதனுக்*
*கொன்றுங் குறியொன்றி லாமையினா – லொன்றோடு*
*டுவமிக்க லாவதுந் தானில்லை யொவ்வாத்*
*தவமிக்கா ரேயிதற்குச் சான்று".*

*(திருக்களிற்றுப் பாடியார் 10வது வெண்பா)*

இந்தப் பொருளுக்கு அநாதியே தொடங்கி தான்பிரிந்து நில்லாமல் அது அதுவாய் நிற்கின்றதே அடையாளமானதால், இது வொழிந்து அந்தப் பொருளுக்கு வேறோரடையளமுமில்லை. ஆகையால் ஒருபொருளுடன் உவமித்துச் சொல்லுதற்கு இதற்கொப்பானது ஒன்றுமில்லை. ஆகையால், இப்பொருள் அநாதியே இரண்டறநிற்கும் முறைமைபோல இடையறாதே இரண்டறநிற்குஞ் சிவாநுபவ த்தையுடைய சிவயோகிகளே இதற்குச் சாட்சி,

திருவுந்தியார்

*"எங்ங னிருந்தென றெவ்வண்ணஞ் சொல்லுகேன்*
*அங்ங னிருந்த தென் றுந்தீபற*
*அறியும் அறிவத என்றுந் தீபற"*

*என சீர்தூக்குகிறார் திருமூலநாயனாரும் தனது திருமந்திரத்தில்*

*"வானுக்குள் ஈசனைத் தேடு மருளாளர்காள்*
*தேனுக்குள் இன்பம் சிவப்போ கறுப்போ*
*தேனுக்குள் இன்பம் சிதற திருந்தாற் போல்*
*ஊனுக்குள் ஈசன ஒளித்திருந் தானே"*

*இவரும் உண்மைப் படுத்துகிறார்.*

9. காணுவது அருமை என்று அதைசிறார் இப்படியான சிவனை இடைவிடாமற் கண்டு களிப்பது எப்படி?

ஆற்றிலே சென்று அலையையுடைய கடலிலே கூடிய நன்னீர், கடல் நீருடனே ஒன்றாய்த் தன்தன்மை கெட்டு மீண்டும் அந்த ஆற்றலாலே நெடுந்தூரம் எதிர்த்தாலும், முன்போல நன்னீர் ஆகாமல் அந்த உப்பு நீரேயானாற்போல ஞானத்தாலே சிவனைக் கூடிச் சிவமாயிருக்கின்ற சிவயோகிகளுக்குப் பிராரத்தத்தாலே அநுபூதி திரித்தாலும் கண்டவர்களுக்கு இந்திரியங்கள் சீவிப்பது போலத் தோன்றி அவர்களுக்கு சுயரூபத்தினைக்கியத்தாலே பசுகரணங்கூடாமல் சிவகரணமே பிரகாசியா நிற்கும் இவ்வளவேயன்றியும் தரிசன மாந்திரத்தாலே



அவர்கள் கருணையானது போந்து நம்முடைய மலங்கள் நில்லாத படியும் போக்கி நம்மையும் இரக்ஷியா நிற்கும் ஆம் இதற்கும் பிரமாணங்கள் உண்டு. சிவகரணம் பிரகாசித்த சிவஞானி களிடத்திலேயாம்.

*"பாலை நெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்*
*காலனை அன்றேவிக் கராங் கொண்ட பாலன்*
*மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தங்*
*கரணம் போ லல்லாமை காண்."*

சிவனுடையவருளினாலே சிவனைப் பெற்ற நாயன்மார் பாலை நிலம் நெய்தல் நிலமாகப் பாடியதும், பாம்பு கடித்து மரித்தவன் பிராணன் பெற்றெழுந் திருக்கும்படி பாடியதும் பக்குவத்திலே காலனை ஏவி முதலை பிடித்து மரித்த புதல்வனைக் காலத்தைப் போக்கி அழைப்பித்ததுவும் அவர்களுக்கு நம்மைப் போலப் பசுகரமாய்ச் சீவியாமல் சிவகரணமாகவே இருத்தலால் என்க.

10. இப்படி எல்லார்க்குஞ் செய்யலாமா? இல்லை மிகுந்த சத்தினி பாத உடைவர்க்கே இவையுண்டு.

சுகதுக்க வேதனைகளிலே மிகவுமொத்துண்டாருக்கு அதிகருவிகள் நீங்கி மயக்கம் வந்தடுத்த காலத்தில், அளவிலன்புடையவர்கள் நன்றாகப்படுத்த சயனத்தில் அவர்கள் கூடியபின், தம்மையும் பிரபஞ்சத்தையும் மறக்கத்தக்க பேருறக்கம் அவர்கள் கூட்டவேண்டுவதின்றியே தம்மிடத்திலே அதுதானே உண்டாகாநிற்கும். அந்த முறைமை போலச் சரியை, கிரியை, யோகங்களின் முந்துதலாலே மிகுந்த சத்தினி பாத முடையவர்கள் அந்த மூன்று பாதங்களையும் நிகழ்த்தி பிரபஞ்சத்தையும் விட்டு ஞானத்திலே அபிஷேக முடையவர் எம்மை இரக்ஷிக்கைக்கு ஞானா சாரியனை எங்கே பெறுவோமென்று மிக்க தேட்டத்துடனே சென்றடைய அவர் மீது ஆசாரியனும் மிகுந்த அன்பை வைத்து இப்படிக் கேடான வல்வினைகளைச் செய்யும் அவர்களுக்கும் முத்தி கிடைக்குமோ என்று ஐயுற வேண்டியுள்ளது.

*"செய்யுஞ் செயலே செயலாகச் சென்றுதமைப்*
*பையக் கொடுத்தார் பரங்கெட்டா – ரையா*
*வுழவுந் தநுசு மொருமுகமே யானா*
*விடவுண்டோ சொல்லா மிது."*

*திருக்களிற்றுப் பாடியார்.*

ஒருவனின் உழவோரிடத்திலும் தநுசு ஓரிடத்திலுமானால் ஒன்றுக்கொன்று உதவிகூடாது. அவை இரண்டும் ஓரிடத்திலேயானால் இவன் சூரனாய் விடுவன் சந்தேகமில்லை. அதுபோலச் செய்கின்ற செயல்களில் அகிகம் வராமற் சிவனை

நோக்கியே செய்யும் இந்தச் செயல்களுக்குஞ் சிவன் செயலென்றே கொண்டு தம்மையும் அவன் கையிலே கொடு.

11. பாரங்கெட்டு விடுகையாலே இவன் பெறுகின்ற முத்திக்கும் இழவுண்டாகுமோ? இல்லை. இதற்குரிய விடை சிவயோகமே. இது அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. இது இயமம், நியமம், ஆசனம், பிரணாயாமம், பிரத்தியக்காரம், தாரனை, தியானம், சமாதி என எட்டு. இதில் தியானமே ஆதார யோகம்: நிராதார யோகம் என இரண்டில் அடங்கும். இவைகளை விரிக்காமல் சுருக்கி ஆதார யோகமென்றும் நிராதார யோகமென்றும் உத்தமமான யோகங்களைப் பார்ப்போம்.

அருவத் திருமேனி நோக்கிச் செய்யும் வழிபாடுகளில் இவ் யோகங்களும் உண்டு. ஆதார யோகமென்றும் நிராதார யோகமென்றும் எல்லாவற்றிற்கும் மேலான விடமாகிய திருவடியிலே பக்குவப்பட்ட ஆன்மாக்கள் பொருந்தும்படி சாதித்துக் கூட்டுகைக்கு வேதாகமங்களிலே விதிக்கப்பட்டன இரண்டு. பிரகாரமாயிருக்கும். ஆதாரங்களிலே ஒவ்வொரு திவ்விய ரூபங்களை ஆசிரியனிடத்திலே பெற்று அந்தத் தானங்களில் தியானித்திருக்கத்தக்கது ஆதாரயோகம். இந்த ஆதார யோகம் கைவந்தவாறே ஆதாரங்களில் பார்த்திருக்கும்படி கற்பித்துக் கொண்டு நிற்பது போலாது சைதன்விய சொரூபத்தைப் பாராதே பார்த்து நிற்பது நிராதார யோகம்.

தேகத்திலே கற்பிக்கப்பட்ட ஆறாதாரங்களிலே ஆசாரியன் அருளிச் செய்ததொரு திவ்விய ரூபத்தை இதற்குப் பொருந்தினதோர் ஆதாரத்திலே தன்னுடைய மனமானது விசயங்களில் பற்றாமல் இதிலே பற்றும்படி கற்பித்துக் கொண்டு அப்படிக் கற்பித்துக் கொண்ட உருவங்கைவரும்படி நெடுங்காலம் தியானித்து அந்தத் தியானங்கைவந்தவாறே அந்த ஆதாரங்களை விட்டுத் தன்னிலே அந்தப் பொருளைத் தியானிக்கின்ற அந்தத் தியானத்தின் முறுகுதலாலே தியானிக்கின்றோ மென்கின்ற நினைவு கெட்டு அந்தப் பொருளொன்றுமேயாய். இப்படித் தியானிப்பானுமத் தியானிக்கப்படும் பொருளுமன்றியே தன்னை மறக்கச் செய்த திவ்வியரூபம் தானாக நிற்பதுதானே ஆதாரயோகமாம்.

தான் கைவரத் தியானித்த ஒரு பொருளை நுண்ணியதாக நுனுக்கிப் பரமாணுவினும் நுண்ணிதாக தியானிக்கின் இப்படித் தியானிக்கின்றவனும் தியானித்த பொருள்போல பரமாணுவின் நுண்ணிதாக நிற்பன். இப்படி நிற்கவே தியானிப்பானும் தியானிக்கப்படும் பொருளும் அன்றியே ஒரு கற்பனையற அப்பொழுதே அந்த ஒப்பில்லாத பொருள் தானேயாயிருக்கும்.
தியானம் = ஆதார யோகத்திற்கு உபயோகமாம்.



## மந்திரயோகம்

அகாரம், உகாரம், மகாரம், விந்து நாதம் என்கின்ற பஞ்சாக்கரமான பிரணவத்திற்கு பிரமா, விஷ்ணு, உருத்திரர், மகேஸ்கரர், சதாசிவர். இவர்கள் ஐவரும் அதிதேவதைகளுமாய் மந்திரமூர்த்திகளுமாய் ஓங்காரமாயே நின்று நடத்துகின்ற இவ்வைந் தெழுத்தே சத்தியையுடைய சிவன் திருமேனி கொண்டு நடத்துகின்றனர். முறைமையைக் காட்டுதலால் இந்த ஐஞ்செழுத்தும் மூலாதாரத்திலே அகாரமும் பிரமாவும், நாபிக மலத்திலே உகாரமும் விஷ்ணுவும் இருதய கமலத்திலே மகரமும் உருத்திரனும் கண்டத்திலே விந்துவும் மகேஸ்வரனும் புருவமத்தியிலே நாதமும் சதாசிவமும் இப்படிச் சுழுமுனைவழியாக நிற்கின்ற முறைமையை குரு உபதேசித்ததைப் பெற்று இந்த ஐந்தெழுத்தையும் மூலாதாரத்திலே, பிரமாந்தரத்திலே செல்ல உச்சரித்தால், இந்தப் பிரணவ சொரூபவுங் கரைந்து விக்கிரகங்களும் ஒரு நீர்மையாய் நிற்றலால் நீ நாதரூபமாய் நாதாந் தரத்திலே அருளைப் பெறுவை. ஆசாரியன் அருளிச் செய்ய அறிந்து இந்த ஓங்கார ஐந்தெழுத்தும் உச்சாரண பேதத்திலே நாற்பத்தொன்பதாம் எழுத்துப் பதினாலாமெழுத்தும் ஆறாமெழுத்தும் இவை கூடினவிடத்திலே விந்துவும் நாதமுமாக இந்த முறைமையிலே ஐந்தெழுத்தாமென்றும் வேதாகமங்களிலே விதிக்கையால் இந்த வைத்தெழுத்தையும் உளத்தூய்மையாக உச்சரிகில் விந்து நாத முடிந்த விடத்திலே இச்ஞானமான ஆன்ம போதமுங்கெடில், அப்பொழுதே சத்திக்கு கர்த்தாவாகிய சிவன் குற்றமறத் தோன்றி உண்மையான சொரூபத்திலே கூடி இரக்ஷிப்பான்.

## நிராதாரயோகம்

ஆன்ம போதத்தாற் கற்பிக்கக்கூடாத அர்த்தமாய். எல்லாப் பொருள்களிலும் தான் கூடி நிற்கையிலே அவையொன்றாகும். தான் நீங்காமல் ஆன்மாவுக்கும் முத்திக்கும் விரோதமாய் நீக்கத்தக்க பொருள்களையும் தானே அறிந்து நீக்கி, அநாதியே இப்படி நீக்கப்படாத அந்த ஞான சொரூபத்துடனே தன்னுடைய போதமெனதறிந்து இதனைக் கூடித் தானும் அந்த ஞான சொரூபமாய் தனித்துநிற்பது நிராதார யோகமாம்.

*"காண்கின்ற தோர் பொருளைக் காண்கின்ற யோகிகளே*
*காண்கின்றார் காட்சியதைக் கண்ணுதலைக் – காண்கின்றார்*
*காண்பானும் காணப்படும் பொருளுமன்றியே*
*காண்கையினாற் கண்டனரே காண்."*

*திருக்களிற்றுப் பாடியார்.*

எல்லாவற்றையும் அனுபவித்தும் அறிந்தும் உள்ள ஞானத்தைக் கண்ணால் கண்டவர்களாகிய சிவயோகிகளே இந்த ஞானமே சொரூபமாயுள்ள சிவனை அப்பொழுதே பெற்று வேறற்று இருப்பார்கள். இதை காணவேண்டும் நாமும்.

நிதாரயோகம் நிலைபெறும்படி இதற்குபாயமானது மௌனயோகமேயாம்.

பேசாமையாகின்ற பரமோபாயத்தை ஆசாரியன் பக்கலிலே பெற்றபடி எங்ஙனமெலில், தேகம் முதலாயுள்ளவை உனக்குவேறென்றும், இவற்றுட் கூடினால் பிறப்புக்குக் காரணமான கன்மமுண்டாமென்றும், உனக்கு ஞானமே வடிவென்றும் தீக்கையில் நாம் இசைவிக்க நீயும் இசைந்தாயென்றும் அல்லது உன்சரீரம் அந்தப் பிராணன் இவைகளை தத்தம் பணியாலேயேயென்றும் நமக்குத் தத்தம் பண்ணின பொருளை நீ விரும்பக்கடவையனென்றும், ஆசாரியன் அருளிச் செய்ய இவனும் நமக்கில்லாத பொருள்களை விரும்பக்கடவோ மல்லோம் என்றும் அறுதியிட்டதேயாம்.

ஒரு அசைவின்றியே நின்ற பதி பரமா ஞானத்தை அது கண்கூடாகவே கண்டுகூடின ஆன்மா அந்த ஞானமேதானும் அசைவின்றியே நிற்கில், அந்த ஞானத்தின் நிலையாகத் தன்னுடைய ஆன்ம போதம் ஒழிந்து அந்த ஞானமாயே நின்ற இடந்தன்னிலே சிவமே பிரகாசித்து அவனையும் ஒரு நீர்மையயாக்கிக் கொள்ளும். இப்படி ஒழிந்து கூட்டியறியத்தக்க ஆன்ம போதத்தாலே வெகுதுரிதமாக ஆராய்ந்து அறியத்தந்த இடம், பிரபஞ்ச வியாபகமாகையால் அவ்விடம் சிவரூபமாகாது.

ஆன்மாவுக்கு கன்ம பலத்தை விளைவிக்கின்றவைகளை நீக்கிய இதன்பின் தவசிவ யோகத்தை விளைவிக்கத்தக்க சிவஞானத்தை அது கண்ணாகக் கண்டுகூடி, அதனைக்கூடி னோமென்று பிரியப்பட்டிருந்தறிகின்ற கருத்தையும் கைவிடின், அந்த நிலை தன்னிலே அந்த ஞானத்திற்கு மேலான சிவந்தானே பிரகாசிக்கும். திருவள்ளுவ நாயனார் வாக்கியத்தின்படி சுருக்கமாக பற்றற்றான் பற்றினைப் பற்றுக. ஏன் பற்றுவிடற்கு இன்னமும் எண்ணிப்பார்த்தால் :

நீ பொருளல்லவென்று அறிந்து நீங்கின தேகாதிப் பிரபஞ்சங்களிலே, வாசனை மிகுதியினாலே கூடிநின்று விகற்பியாதே! இந்த விகற்பங்கள் நீங்கின அவசரங்களில் உண்டான மாயங்களில் அழுந்தாதே; சுக சொரூபத்தை உன் போதத்தால் அறிந்து கூட விசாரியாதே; இந்தக் குற்றங்கள் நீங்கும்படி உனக்குக் கண்ணுமாய் உனக்கு நடுவே நிற்கின்ற ஞானத்திற்கூடி அந்த ஞானம் தானாகவே நீங்கின் யாவராலும் குறித்தற்கரிய செல்காலம் வருங்காலம் நிகழ்காலமென்று சொல்லப்பட்ட மூன்று காலங்களிலும் படாமல் இந்தக் காலம் அக்காலங்கள் மூன்றையும் வேறாகக் கண்டு, அச்சிவமேயாய் அழிவின்றியே இருப்பாய்.

ஆன்மா தன்னுடைய போதத்தையே பொருளாகக் கொண்டு நிற்கின் விகற்பிக்கிறதே சுபாவமாய போதமும் பலவாய்ச் சிதறிவிடுமென்று இதனை ஆசாரியன் அநுக்கிரகத்தாலே அறிந்து, தனக்கு அநாதியேபிராணனாய் நிற்கின்ற ஞானத்தைக்கூடி தன்னுடைய ஆன்ம சுபாபத்தையுமொழித்து, அந்த ஞானமேயாய் அந்த ஞானஐக்கியத்தாலே தனக்கு இன்றளவும் கிடையாத பெருவாழ்வாகிய



பரமானந்த சொரூப சிவனைப் பெற்று தானும் அந்தப் பரமானந்தமேயாயிரா நிற்பன். இவ்வாய்ப்பைப் பெற உரியார் யார் எனின் மானுடப்பிறப்பிலுள்ளாரில் தேகாதிப்பிரபஞ்சங்களிலுள்ள ஆரவாரங்களைக் கைவிட்டு நிலத்திலே வைத்த மணியினது நாவே போலசலிப்பற்று நிற்கிற சீமான்களென்க.

இந்த நிராதார யோகத்தைச் செய்கின்ற சிவயோகிகள் கூடும்வழி செய்யவேண்டியன. சிவனைப் பெறுதற் பொருட்டு தேகேந்திரியந்தக் கரணங்களாயுள்ள ஆரவாரங்கள் ஒடுங்கும்படி ஞானத்திலே தன்னுடைய இச்சாஞானக்கிரிகைகளை ஒழித்தவ சரத்திலே ஆனந்த நிருத்தம்பண்ணி அருளாநின்ற தம்பிரானார் ஸ்ரீபாதத்தில் பரவிந்து என்கிற திருச்சிலம்பிற் பரநாத பென்கின்றது தோன்றும், அந்த ஓசைவழியே நடந்து சென்று கூடி அந்த ஓசை முடிந்தவிடத்தே தன்னுடைய போதமும் ஒக்கமுடிக்க அப்பொழுதே அந்த ஓசை முடிந்தவிடமே இடமாகவுடைய தம்பிரானார் காருண்ணிய சத்தியுடனே ஞானப்பிரகாசத்திலே வந்து இவனைப் பிரியத்துடனே கூடுவார்.

நெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரும் தனு **கரண** புவன போகங் களுக்குள்ளே பற்றிக் கொண்டு நிற்கின்ற இச்சாஞானக் கிரியைகளில் நிற்பதான சிவயோகத்தை,

*"சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகின் புற்று அழித்துச்*
*சார்தரா சார்தகு நோய்"*

அதாவது ஒருவன் எல்லாப்பொருட்கும் சார்பாய அச்செம்பொருளை உணர்ந்து இருவகைப் பற்றும் அற ஒழுகவல்லானாயின் அவனை முன் சாரக்கடவனவாய் நின்ற துன்பங்கள் அவ்வுணர்வு ஒழுக்கங்களை அழித்துப் பின் சாரமாட்டா.

ஒழுக்கம் என்பது யோகநெறி ஒழுகுதலை அஃது இயமம், நியமம், இருப்பு, உயிர் நிலை, மன ஒடுக்கம், தாரணை, தியானம், சமாதி, எட்டுவகை எனலாம். இவற்றை விளக்கில் பாரமாகும். சாரக்கடவனவாய துன்பங்களுமுண்டு அவை பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரான் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இருந்த உடம்புகளுள் அனுபவித்தளவும் பிறந்த உடம்பால் முகந்து ஒழியப்பின்னும் அனுபவிக்க கிடந்தனவாய்க் கிடந்தன. பிறப்பிற்குக் காரணமாய் நிற்கிற நல்வினைப் பயனும் நோயே. இவ்வாறு கூறிப் போந்தார். இதனால் தனக்கு அநாதியே தாரகமாய் நிற்கின்ற திருவடி ஞானத்தை அது கண்ணாக அறிந்து அதனுடனே இரண்டறக் கூடிநிற்கில் மீண்டும் ஒரு ஜநநம் உண்டாகைக்குக் கன்மமுண்டாகா வென்று அருளச் செய்த பிரமாணப்படியே தனக்குத்தரிசனமான ஞானத்தையுங்கூடி அசைவறநிற்கின் அதுவே சிவத்தியானமாம். அந்தநிலையிற் தியானிக்கின்றோமோ என்ற பாவனை குலையில் அப்பொழுதே சிவரூபமான நன்றான சமாதிபரனாக, நிற்பன். இப்படிக் கூடின சிவயோகிகட்கு பின்பு ஜநநத்தை உண்டாக்குகின்ற ஆகாமிய கர்மம் உண்டாகாது.

*"அன்றிவரு மைப்புலனு நீயு மசையாதே*
*நின்றபடி யேநிற்க முன்னிற்கு – சென்று*
*கருதுவதன் முன்னங் கருத்தழியப் பாயு*
*மொருமகடன் கேள்வனுனக்கு"*

*திருக்களிற்றுப் படியார்.*

சிவனையே கூட வேண்டுமென்று சிரத்தை பண்ணுபவர்களுக்கு சிவன்வந்து கூடும்முறையெனில் அதற்கு இன்றே உன்னுடைய கருத்தையும் அளித்து தன்னுடனே ஓர் நீர்மையைக் கொண்டு நிற்பர்.

உண்டெனின் இல்லை என்றும் இல்லை எனின் உண்டென்றும் உள்ள இந்த பாப சுபாவம் எய்தும் வகைகளால் சிவனைக் கூடாது நிற்கின்ற தன்மையாலே இவற்றைவிட்டு தானாகவே நிற்கின்ற ஞானமாயே நின்று அளவில்லாப் பேரின்பத்தைப் பெறும்படி சிவனிடத்திலே அன்பை வைக்கில் அப்பொழுதே ஒன்றாலும் பாதிக்கப்படாத சிவன் தன்னுடைய காருண்ணியத்திலே உன்னை இரண்டறக் கூடிநிற்பார். இது ஓரளவு நிரந்தர யோகத்தை உணர்த்துகிறது.

இப்படியே கூடாத காலத்தில் எத்தனையோ தத்துவங்கள், எவ்வெவர் கோட்பாடுகள் அத்தனையுஞ் சென்று பரமயக்கங்களின் கொள்கைகளை அறிந்து சென்று அலையவேண்டாம். சித்தமென்று சொல்லப்படுகின்ற தூதுவபை போக்கி சித்தவிகாரத்தை ஞானத்தாலே ஒழித்து ஒப்பில்லாத அந்த ஞானத்தைக்கூடி மனவாக்குக் காயங்களைக் கூடாதபடி அவன்திருவடிகளிலே அழுந்தி நிற்கலாம், இப்படிப்பட்டவர்களுக்கு உயிர்ச்சார்பு அதாவது சாக்காடு வருங்காலத்தும் பொருட்சார்பு சரீரம் நிற்கும்போதே பொருட்சார்பு அடங்கலும் மிகுமாகையால் துன்பப்படாது நின்றபடியே நிற்பர்.

*"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்று அது*
*வேண்டாமை வேண்டவரும்"*

திருவள்ளுவ நாயனாரின் குறள் விரிவும் இதற்குச் சான்று பகருகிறது.

தேகம் உள்ள அளவும் இவன் ஒன்றை விரும்பினாலும் விரும்பா தொழிந்தாலும் பிராரத்தத்தாலேயுள்ளது கூடுமாகையால் ஒன்றை விரும்ப வேண்டுமிடத்து பிறவாமை ஒன்றுமே விரும்பவேண்டியது. அந்தப்பிறவாமையை வேண்டின் தான்வேண்டாமை வேண்டவருமென்று பிரமாணமுண்டு. ஆகையால் நாம் விரும்பத்தக்ககர்த்தாவின் பக்கலிலே பிறவாமைக்கு அவாவறுத்தன் ஒன்றுமே வேண்டிக் கொள்ள வேண்டுவது.

பெத்த, முத்திகன் இரண்டிலும் ஆன்மாக்களைப் பாதுகாத்து ஈடேற்றுகை அநாதியே கர்த்தாவுக்கு காரணமானமுறைமை அதாவது விட்டுநீங்காத சத்தியுடனே பெத்தத் திலுங்கூடி நின்று தொலைப்பித்து முத்தியிலும் மீண்டும் ஒருடம்பு கூடாதபடி திருவடியிலே கூட்டாக் கொள்ளுகின்ற தன்மை.



அந்தக்காரணங்கள் நேராக அங்குரியாதபடி ஞானத்திலே கூட்டிமரித்த ஆன்மாக்களே ஜனன மரணங்கள் இல்லாதவர்கள். இந்த ஞானத்தின் அழுத்தத்தினாலே பிரகாசித்த சிவரூபத்தில் பொருத்தி அதுவாய் நின்றவர்களே சிவயோகத்தில் தற்பரமானவர்கள். இப்படி சிவயோகத்திற் பொருந்தப் பெறாத பாக்கியதுற் எத்தாலும் திருப்தியடையப்பெறார், கருவி காரணங்களாலே கட்டுண்டு இவற்றின் பின்னே தப்பாமல் ஏவற் செய்து ஜநந மரணங்களிலே சென்று உழலாநிற்பர். இப்படிக் கருவி கரணங்கள் எல்லாம் பொருந்தாதபடி உள்ள சிவயோகிகள் தெள்ளிய ஆலின் விதை தெண்ணீர்க்கயற்று சிறுமீன் சினையிலும் நுண்ணிதே ஆயினும் அண்ணல் யானை ஆர்ப்பெரும் படையுடன் இருக்க உதவும் விதை நிழல் கொடுப்பது போன்று அடங்கிநிற்பர்.

அளவிடப்படாத பொருளை ஒருடம்பிலே அடக்கிக் கொண்டிருப்பது எப்படியெனில், பிருதுவி முதலாகச் சொல்லப்பட்ட வைகளெல்லாம் அந்தப் பொருளுக்கு ஆதனமாகையாலும் அப்பொருளை ஆசாரியனாலே கூடப்பெற்றவர் களிடத்தில் அப்பொருளின் பிரகாசம் மெல்லாம் நின்று பிரகாசிக்கையாலும் ஞானதிருஷ்டி இல்லாதவர்களுக்குச் சரீரிகள் போலத் தோன்றினாலும் அவன் அந்த உண்மையேயாய் நிற்பவனாகையாலும் என்போல்வாரிடத்தும் அநாதியே கூடிப்போந்த வாசனையைப் போக்குகைக்கு இந்த நிலையேதான் முறைமையானது.

இந்த முறைமையாலே உள்ளேகண்டு வாசனை தீர்த்திருப்பார்போல இனங்கண்டும் வாசனைதீர்க்கும். திருக்குறிப்புத் தொண்டர், ஏயர் கோன்கரிக்காமர், இவர்கள் தத்தம் தொழில்களைச் செய்யும் போது, சிவனை ஒருவழிப்பட்ட கருத்திலே கண்டு அவன் பிரகாசிப்பதைக் காண்பார்கள். இந்த இரண்டு முறையையும் கருதவேண்டாம் எப்படியாவது ஒரு முறையே காணவேண்டும்.

*"உள்ளும் புறமும் நினைப்பொழியி லுன்னிடையே*
*வள்ள லெழுந்தனுளு மாதினொடுந் – தெள்ளி*
*யறிந்தொழியாயன றியேயன்புடையையாயிற்*
*செறிந் தொழிவா யேதேனும் செய்."*

*திருக்களிற்றுப் படியார்.*

இந்தப் பத்தி, ஞானயேகங்கள் இரண்டினுள்ளேகூடி ஒன்றைச் செய்ய வேண்டும். இந்தப் பக்தியோகத்தில் உண்டான பெருமையினைச் சிறிது பார்ப்போம்.

மெய்யன்பினையுடைய சேந்தநாயனார் அன்பால் விரிந்த மனத்தோடு விரித்தவஸ் திரத்தினின்று பக்குவமாய் மலர்ந்த அன்னத்தை அவிழ்த்து நிவேதிக்க அது விரிந்த சடையையுடைய சிவபிரான் உண்குதற்கு இனிய அமிர்தமாயிற்று. பால்பொழிதற்கிடமாகிய உமாதேவியார் தளத்தினின்று தூய சிவஞானப் பால்

பொழிய அதனை சிவஞானசம்பந்தப் பிள்ளையார் பருகிபாடுகிறார் என்று சொல்லக் கேட்டவளவிலே மங்கையற்கரசியார் பால் பொழிந்த தனமுடைய உள்ளமுடைய பாண்டிமாதேவியாரது அன்பிருந்தமுறை அளவிடக்கரியது.

இவைகளை அறிந்து இவற்றை விட்டு அன்பினால் என்னுடைய அன்பே அன்பேயென்று சிவபிரானை நோக்கி பெரிதும் அழுது பேரன்பு மயமாகப் போதங்களையும் அன்பற்றித் தீர்த்துந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை சாற்றும் மரபன்றேதான்.

*"அன்பேயிவன்னன் பேயென்றன்பாலமுதரந்தி*
*யன்பேயன்பாக வறிவழிபு – மன்பன்றித்*
*தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை*
*சாற்றும்மரபு மன்றே தான்."*

*திருக்களிற்றுப் படியார்.*

எது எப்படியிருப்பினும் இந்த அர்த்தத்தை பெறுதற்கரிய முறையைப் பெறுதற்கரிய முறைமை எது என்றும் அது நிற்க அரிதானமுறைமை எது என்றும் பார்ப்போம்.

12. வித்தும் அதன் அங்குரமும் போன்று மெஞ்ஞானம் இருக்கும் எப்படி? ஏப்படியெனில் நெல்லுமுதலான பல வித்துக்களும் அங்குரிக்கும் பொழுது அங்குரத்துடன் இரண்டு படவில்லாமல் அந்த அங்குரமுள்ள அளவும் பிரகாசமாய் நின்று பருணமித்து இந்த பரிணாமத்தை பிரயோசனங் காரணமாக அங்குரித்த நாள்முதல் ஆசரிந்துக் கொண்டிருந்த ஆன்மாக்களுக்கப் பரிணாமமுதிர்ந்த அந்தக்காலங்களிலே வித்தானது வெகுவிதமாகப் பிரிந்து அவர்கள் தாகங்களை சூமிப்பித்துத் தந்துஷ்டிபிறப்பிக்க இன்பத்தையே கொடாநிற்கும். அதுபோல வித்தான சிவமும் ஆன்மாக்களுக்குக் கன்மவொப்பும் மலபரிபாகமும் உண்டான அவசரத்திலே காருண்ணியமே திருமேனியாக எழுந்தருளி சற்று பக்குவப்பட்ட ஆன்மாக்களைத் தம்முடைய அளவிலே சினேகிக்கும்படி திருவுள்ளத் தடைந்து இவர்களிடத்திலே அநாதியே எழுந்தருளிநின்ற உண்மையை பிரகாசிப்பித்து இந்த உண்மையான ஞான சுகரூபத்திலே இவர்கள் அநுபவித்துச் சம்பூரணந்தை யடையும்படி வெகுபலமாகக் கொடா நிற்கும். (கொடுக்கும்)

இந்த வித்தாகிய சிவனுண்மையும் அங்குரமாகிய ஞானத்தினுண்மையும் உணர்வார் உணருமிடத்து, நெல்லுமுதலிய வித்துக்களும் அங்குரங்களை இந்த வித்தின் பரிணாமமென்று இந்தப் பரிணாமங்களிலே அந்த வித்துக் கலந்து நிற்குமென்றும் அங்குரத்தின் பரிணாமம் முதிர்ந்த பொழுதே அந்த வித்தே வெகு பலமாகப் பலிக்குமென்றும் இதனை ஆராய்ந்துக் கொண்டிருந்து பலிக்குங் காலங்களிலே வித்து தோன்றாதது கொண்டு இந்தப்பரிணாமத்தில் ஓர் வித்துங்



கண்டிலோ மென்று அந்தப்பரிணாமத்தையுங் கைவிட்டு அதனுடைய பிரயோகமும் இழந்து போனவர்களைப் போல தரிசித்து ஞானத்திலே நின்று சாதித்து இந்த ஞானமேயாம் இந்த ஞானத்தின் முதலாகிய சிவனைக்கூட்டிப் பேரின்பத்தையே பெறமாட்டாமல், அந்த ஞானத்தைத் தரிசித்தவளவிலே இவ்வளவே பிரயோசன மென்று சிவபேதத்தினுண்மையை அறியாமல் அந்த ஞானத்தையும் கைவிட்டுப் போன பாக்கிய கீனர் சிவரூபத்தை இழந்து போகா நிற்பார்கள்.

அந்த நெல்லுமுதலியவற்றின் அங்குரங்களிலே வித்துக்கலந்து நிற்குமென்று அறிந்தவர்களும் பயன்படுமளவும் அந்தப்பரிணாமத்தை ஆதரித்துக் கொண்டிருந்து பிரயோசனப்படுங் காலங்களிலே பிரயோசனங் கொள்ளமாட்டாமல் பராமுகத்தாலே அதின் பிரயோசனத்தைப் பிறர் கொள்ள தாம் இழந்து போகின்ற பாக்கிய கீனனைப்போல சிவனைத் தாரகமாகவொழிந்து ஞானம்பிரகாசியாதென்று அதிர்ந்தவர்களும் அந்த ஞானத்தைக் கைவிடாமல் நின்று விசுவாசத்தைக் கைவிட்டு அந்தஞானமாகவே சாதித்து இந்த ஞானத்தினை தியானத்தினாலே சிவனைப் பெற்று பேரின்பமே அனுபவித்து திருப்தியடைய மாட்டார்கள். வாதனையின் மிகுதியாலே பராமுகராய் தாம் பெற்ற ஞானத்தின் பின்பு அனுபவிக்கலாமென்று நித்தமும் பெற்றிருப்பாரைப் போல நினைத்திருந்தவர்கள் தமக்குப் பேறான சிவயோகத்தை இழந்து போகா நிற்பார்கள். ஆதலால் இத்தத் தத்துவத்தைப் பெற்றோமென்று கர்வியாகப் போகக் கூடாது. இடைவிடாமல் ஞானமாய் நின்று சாதித்து பின்பு ஞானத்தில் உறுதலாலே ஞானமானதுந் தலைமறையப்பலிக்கத்தக்க சிவபோகத்திலே அழுந்தி அனுபவிப்பாயாக.

(இஃது திருவுந்தியாரின் உட்கருத்தை விபரித்து அவர் மாணாக்கர் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் அருளிச் செய்த 1100ல்) உரைவிளக்கத்தை ஒத்தது.

கடவுள் மாமுனிவர் எழுதிய திருவாதவூரர் புராணத்தையும் பார்போம் எட்டாம் நூற்றாண்டு அளவில்:

திருவாதவூரருக்கு பூர்வ சன்மத்திருநாமம் குடமுழாநந்தீசர் என்பது இதனை திருநாவுக்கரசு நாயனார் குடமுழாநந்தீசரை மணிவாசகருக்கு தந்தாய் என்னும் அடியையுடைய பாவால் விளக்குகிறார்.

*"தமமெனும் பெரிய வித்துட் டங்கியேயங் குறித்துப்*
*பவமெனும் பங்கநீங்கிப் பயிலருட் குருத்துண்டாகி*
*யவமெனும் களைகணீங்கியாக்கு வோனருளாணுண்மைச்*
*சிவமெனும் விளைவுண்டாக வளர்ந்தது தெய்வச் சாலி."*

தவமென்று சிறப்பித்துச் சொல்லப்படும் பெரிய வித்தினுள்ளே தங்கியிருந்து

உழைத்து பிறவியாகிய சேற்றினின்றும் நீங்கி பொருந்திய திருவருளாகிய குருத்து வரைவளரப்பெற்று நாணாவித விக்கிரகங்களாகிய கலைகளில் நின்று நீங்கி தம்மை உண்டாக்குபவராகிய சிவபெருமானென்னும் உழவரது திருவருளிலே பரமுத்தி என்று விதந்து கூறத்தகும் விளைவு பின்னர் உளதாவதாக அச்சப்புத்திரராகிய தெய்வத் தின்மையுடைய சென்நெற் பயிரானது வளர்ந்தது. அங்குயிந்தல் = முளைத்தல், சிவம்= முத்தி.

இதை தரிசிப்போமானால் சிவவினையாகிய காரியத்தில் இன்றியமையாத காரணமாகலின் நிஷ்காமிய புண்ணியமாகிய தவத்தை வித்தாகவும், அதனை வித்தென்பதற்கேற்ப பிறத்தலை முளைத்தலாகவும், அப்பிறவி கன்ம பேதங்களை புசிப்பித்துத் தொலைப்பிப்பதற்கு கருவியாகலின் அதனைச் சேறாகவும் மேலும் மேலும் புதிது புதிதாக பிறந்து விரிதலினாலே திருவருளைத் தளிராகவும், தேகாதில் பிரபஞ்சமாகிய பொய்ப் பொருளை மெய் பொருளினைக் கொண்டோம்புவது காலக்கழிவாய்க் கேடுபயத்தலின் அவற்றை களைகளாகவும் தனுகரண புவன போகங்களைக் கூட்டி முடிப்பவராகலிற் சிவபொருளை உழுவராகவும் அத்தவவித்து முதலிய சாதனங்களாற் சாதித்துப் பெறும் மெய்ப்பேறுகளிற் பரமுத்திய உண்மைச் சிவவிளைவாகவும், ஏனைய விளைவுகள் போலன்றி இது சிவவிளைவாதலாலும் அவ்விளைவையுழுவது அச்சற் புத்திரராகலானும் அவரை தெய்வத் தன்மை பொருந்திய நெற் பயிராகவும் உருவகம் செய்தார். தங்கியிருத்தல் உரிய காலமும் வருந்துணையும் முளையாதடங்கியிருத்தல்.

திருவாக்கு "காலைமலமாகு கடும்பகற் பசிநிசி வேளை நித்திரை யாத்திரை பிழைத்தும்'' தங்கியிருத்தல், விருத்தியுரை ஸ்ரீல ஸ்ரீ ஆறுமுகநாவலர் அய்யா அவர்கள் இவ்வறிவை விளக்கமாவே திருமூலநாயனாரும் திருமந்திரம் 1932ம் செய்யுளிள். பின்வருமாறு

*"வித்தினி லன்றி முளையில்லை அம்முளை*
*வித்தினி லன்றி வெளிபடு மரபில்லை*
*வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல*
*அத்தன்மை யாகும் அரனெறி காணுமே."*

அதாவது வித்தினில் அன்றி வேறிடத்தில் முளை இல்லை. அதனால் அம்முளை வித்திலிருந்தல்லாமல் வேறிடத்திலிருந்து தோன்றுதல் இல்லை. வித்தும் முளையும் ஒன்றை விட்டொன்று இல்லாமையால் இரண்டையும் ஒருபொருளாக கருதவேண்டும். அது போன்றே வித்துவும் சிவமொடும் சிருட்டிக் கிரமத்தில் ஒளியிலிருந்து உடல் அமைந்து வீரியம் அமைகிறது. அதுபோல லயக்கிரமத்தில் வீரியமாற்றம் அமைந்து ஒளி உண்டாகிறது. அதனால் வீரியம் வித்தாகவும் ஒளி அதன் முளையாகவும் உள்ளன. முளைக்குக் காரணம் வித்தானாலும் முளை நீண்டபின் வித்தில்



யாருமில்லை அதுபோல ஒளிமண்டலம் அமைந்த பிறகு வீரியத்தின் உருவம் இல்லாது போகும். இம்முறையில் சிவயோகம் (அரநெறி) உள்ளது. கருத்து:– வித்தும் முளையும் போல விந்தும் சிவமும் ஆகும்.

இந்தச் சிவரூபன் தன்னை எப்படி அறியலாம்:– எல்லாப் பொருள்களும் கரைந்தவிடத்திலே உதிப்பது மன்று, தன்னிடத்திலே சுட்டறவிளைகின்ற அர்த்தமாகையினாலே இரண்டாயிருப்பது என்று வாக்கு மனாதிதமாயிருப்பது ஒன்றாகையாலே பிரத்திஷமாய் இருப்பது மன்று. ஞானவான்களுக்கு ஞானயோகத்தின் முதிர்ச்சியிலே பரமானந்தத்தை அளித்து நிற்கையாலே இல்லாது பொருளுமன்று. ஆன்ம போதம் இருந்தால்கூடும் பொருள் ஆகையாலே ஆன்மாக்கள் நன்று தீதென்று கூடப்படுவதுமன்று. நானே பிரமமென்றங்கலாக்கின்ற பசு ஞானமுமன்று. அநாதியே தொடங்கி இன்றளவும் நிலையான பாச ஞானமுமன்று. பசு ஞானத்தையும் பாச ஞானத்தையும் உடைய ஆன்மாவும் அன்று உலகத்தறிவாய் நிற்கிற ஞானமுமன்று ஆதியும் அன்று அந்தமும் அன்று இந்தச் சிவரூபம் நான்கு பாதங்களில் ஒன்றைச் செய்து, மற்றவைகளைச் செய்யாமல், ஒன்றுஞ் செய்யாமல் இருப்போர்களை ஆன்மாக்கள் தங்கள் விருப்பப்படி எது செய்யுந் தொழிலாக கொள்கிறார்களோ அதன்படி சிவம் நிற்கும்.

*"வீட்டிலே சென்று வினை ஒழித்து நின்றிடிலென்*
*நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென் – கூட்டில் வாழ்*
*சாத்தியே நின்றிலையேற் றக்கறார் வேள்வி செய்த*
*மாத்திரமே யாங் கண்டோய் வந்து."*

*திருக்களிற்றுப் படியார். – 63*

வீட்டிலே வினை ஒழித்து நாட்டிலே நல்லினை செய்து

அதாவது இப்படி நின்றாலும் இந்திரிய வேடர்கட்கு அடிமையாய் பேதலித்து போகாமல் உனக்கு பிராணனென சிவனைக்கூடி அவன் செயல்களாகவே கருதி உன்னுடைய செயலால் ஒன்றிலை என்றிலையாகின் ஒரு பிரயோசனமுமில்லாமல் துன்பத்தையே பெற்றுக் கொள்ளுவாய்.

தத்க்ஷப்பிரசாபதி தன்னுடைய அகங்காரத்தின் மிகுதியினாலே கர்த்தாவை இழந்து தன்னாலே செய்யப்பட்டதாகவே நின்று எக்கியத்தை செய்து ஒரு பிரியோசனமும் கைகூடாமல் நீங்காத துன்பமே பெற்றால் போல நீயும் கர்த்தாவைக் கைவிட்டு உன்னுடைய செயலென்றே நின்று பெறுதற்கரிய பேற்றை இழந்து போவாய்.

இப்படிச் செய்யாமல் அந்த உண்மையிலே நிற்பாய். சிவன் முதலேயன்றி முதலில் இல்லை. ஆன்மாக்கள் அறிந்தேன்னென்கின்ற அறிவெல்லாம் அவனாலொழிய அறியப்படாது. ஆகையால் நாமும் இதனை அந்தக் கர்த்தாவின் செயலே என்று அறிந்து கொள்ளல் வேண்டும். இஃது சைவ சித்தாந்தத்தின் அடிப்படை.

இந்த உலகத்திலே சைவ சமயத்திலே ஞானமுதமாகிய திருமுலைப் பாலை அமுதுபெற்ற பெருமையினாலே நெடுநாள் அஸ்தியாக சீவன் இல்லாது கிடந்த பெண்ணை முன்பு போல் சீவன் பெற்று உள்ள வயதுவந்த பெண்ணாக்கிக் காட்டியது இப்பெருமையை திருஞானசம்பந்தரையே சாரும். இதை மற்றையோர் சித்து என்று கூறினால் சித்தால் நடந்தது உடனே அழிந்து போகும். இப்பெண் நெடுநாள் வாழ்ந்து சிவன்திருவடி அடைந்தாள்.

சிவஞானிகள் சைவசித்தாந்தத்தின் உறுதிப்பாட்டில் இருந்து தம்மையும் பிரபஞ்சத்தையும் அந்தப் பொருளையும் மறந்து சுயசுபாவத்திலே அழுந்தியும் அனுபவித்தல் செய்யா நிற்பர். அன்றி இந்த முறைமைகளிலே அனுபவியா நிற்கும் பிராத்தத்தாலே பிரபஞ்சம் தோன்றிநாலும் சொரூபத்தின் ஐக்கியத்தினாலே பிரபஞ்ச நீதி அறியாமல் அந்த உண்மையைக் கண்டு நிற்பர். சிவஞானிகள் அநாதியே சர்வத்தையும் அறிந்தும், அறிவித்தும் நடத்தா நிற்கும்போதும் தான் ஒரு விகாரங்களளிலும் நிற்கின்ற ஞானசத்தியுடனே எக்காலமும் விட்டு நீங்காத சிவத்தை அறுதியாக பெறுவர்.

ஆன்மாக்களுக்கு இருப்பிடமான தத்துவங்களையும் இவை இடமாக நிற்கின்ற ஆன்மாக்களையும் அநாதியே பொருந்தி அவை அவராய் அல்லவுமாய் நிற்கின்ற சைதன்னிய சொரூபனான சிவனை அவன் காருண்ணியத்தினாலே ஞானமே திருமேனியாகக் கொண்டு எழுந்தருளிவந்த ஆசாரியனைக் கொண்டே தெரிந்து நாமும் அந்தச் சைதன்னிய சொரூபமாய் நிற்கின்ற தன்மையும் அந்தச் சைதன்னியத்தோடு கரையும்படி அந்தச் சிவன் கையிலே கொடுத்து ஞானத்துக்கு மேலாகிய அந்தச் சிவமாகியே இன்னும் இருப்பர். இவர்களே நிரோதாயி நீக்கம் தரிசித்த கலியாணர்கள்.

இப்படி ஞானத்திலே நின்று சாதித்தவர்கள் அந்தக் சிவனைப்பெற்று சிவனிடத்திலே ஒடுங்கி நிற்கும். இப்படிப்பட்ட சிவஞானிகள் பிராரத்தாலே நிலை திரிந்தாலும் முன்பு ஒடுங்கிய ஞானமும் ஆக்கமும் உணர்ந்து முன்பு மாயையிற் சீவித்தாற்போல இப்பொழுதும் இந்த ஞானமே இவனுக்குத் தனு, கரண, புவன, போகங்களுமாய் நிற்கும். இப்படிப்பட்ட சிவஞானிகளுக்கு கோபப்பிரியர்கள் இல்லையாயினும் மிக்க பாவிகளால் அவர்கள் திருவும் காலாகாலத்து அந்தப் பாவிகளுக்குண்டான ஐசுவரியமும் போய் அவர்கள் சீர்த்தியும் விட்டுப்போய் அவர்கள் வாக்குகளும் தப்பி நிற்கும்.

**13.** இச்செய்கைகளெல்லாம் ஈஸ்வர கிருத்தியமாய் இருக்க இவர்களுக் குண்டான தெப்படி.



ஆன்ம போதத்தால் அறிதற்கரிய ஞானசத்தியுடனே எக்காலமும் விட்டு நீங்காமல் நிற்கிற பரமேஸ்வரனார் தன்னுடைய யளவிலே மிக்கவன்பை வைத்து, ஆன்மாக்களை ஆன்ம போதங்கெடாமல் விழிப்பித்த ஞான சக்தியிலே கூட்டி தன்னாலே செய்யப்பட்ட அநுக்ரைகள் விக்கிரகங்களையும் அவர்களைக் கொண்டுதான் கூடி நின்று செய்வித்து அவர்கள் செய்தார்களாம் படியே நிறுத்தா நிற்பர்.

### ஈசன் செயல்கள்.

தன்னுடைய வளவிலே மிக்க அன்பை வைத்த ஆன்மாக்களை ஆன்ம போதங் கூடாமல் விழிப்பித்த ஞானசத்தியிலே கூட்டித் தன்னாலே செய்யப்பட்ட அனுக்கிரக நிற் கிரகங்களையும் அவர்களைக் கொண்டு தான் கூடி நின்று செய்வித்து அவர்கள் செய்தார்களாம் படியே நிறுத்துவர்.

*"ஓடஞ் சிவிகை யுலவாக்கிளியடைக்கப்*
*பாடல்பனைதாளம் பாலைநெய்த – லேடெதிங்வெப்*
*வென்புக்குயிர் கொடுத்தலீங்கிவைதா மோங்குபுகழ்த்*
*தென்புகலி வேந்தன் செயல்*

*கொல்கரியி னீற்றறையி னஞ்சிற் கொலை தவிர்த்தும்*
*கல்லே மிதப்பாய்க் கடனீந்த – னல்ல*
*மருவார் மறைக்காட்டில் வாசறிறப்பித்த*
*றிருவா முராளி செயல்*

*மோக மறுத்திடினா முத்தி கொடுப்பதென*
*வாகமங்கள் சொன்ன வவர்தம்மை – தோகையர்பற்*
*நூதாகப் போகவிடும் வன்றொண்டன் றொன்டுகளை*
*பேராகச் சொல்வேன் யான்*

*பாய்பரி யொன்றந்தப் பரமானந் தப்பரனைத்*
*தூலதிருவாய் மலராற் சொற்செய்து – மாயச்*
*கருவறை யாமறிய வாறு செய்தான் கண்டாய்*
*திருவாத வூரனார் தேன்"*

தம்பிரானார் திருவடியைப் பெற்ற சிவயோகிகள் பதமுத்திகளால் உண்டான பயன்களையும், பிராரத்தாலே இந்த உலகத்திலே உண்டான பயன்களையுந் சொரூபத்தினை ஐக்கியத்தினாலே கெடுத்து அந்தச் சொரூபத்துக்குள்ளவும் வியாத்தராய் ஒரு சங்கற்ப விகந் பங்களுமின்றியிலே தங்கள் சுயேச்சையிலே திரிகையால் சற்காரியமான சிவயோகமே உள்ளபடி அறிந்துகூடின யோகமாம். என்று அறிக மற்றுமுள்ள யோகங்களெல்லாம் சிவனை உள்ளபடி அறியாத யோகங்களாதலால் அவைகளெல்லாம் ஐநநத்தை உண்டாக்கும். தம்பிரானார் திருவடியைப் பெற்ற சிவயோகிகள் பதிமுத்திகளான்

உண்டாய பயன்களையும் பிராரத்தத்தாலே இந்த உலகத்திலே உண்டான பயன்களையும் சொரூபத்தினைக் கியத்தினாலே கொடுத்து அந்தச் சொரூபத்தைக்குள்ளவும் பத்தரராய் ஒரு சங்கற்ப விகற்பங்களுமின்றியே எவ்விடத்தும் தங்கள் சுயேச்சையிலே திரிவார்கள்.

14. போகத்தின் பிறிதொரு நிலையை நோக்கினால் சீவன்கள் எல்லார்க்கும் கர்த்தா ஒருவனாயிருக்க சிலரைப் பதமுத்தியிலே வைத்தும் சிலரைத் திருவடியிலே சேர்த்துக் கொண்டும் சிலரை விசுவத்திலே நிறுத்தியும் செய்தார். பார பட்க்ஷவாதியெனச் சிவன் பெயர் பெறலாமல்லவா ? இல்லை. இல்லை.

இராசாவானவன் தன்னுடைய ஆக்ஞைவழி நடத்தும் இராச்சியங்களில் எல்லோரையும் இரட்சிக்க வேண்டுமென்கின்ற கருத்து எப்பொழுது உண்டாயிருந்தும் புத்திமான்களாய்ச் சாந்தவராய், தன்னளவிலே இருந்த சினேகிதராய் இருக்கத் தக்கவர்களை தானாகப் பார்த்து தன்னளவிலே சினேகமின்றி காரியத்தைப் பெற்ற ஆஞ்ஞைக்கும் பயந்திருக்கத்தக்கவர்களை ஒவ்வொரு முகங்களிலே வைத்து குணவான்களாய் இருக்கத்தக்கவர்களை அவர்களுக்குத் தக்க தண்டங்களிலே வைத்தும் தண்டித்துக்குண வான்களாக்கியும் செய்கின்ற இவைகளையெல்லாம் கிருபையேற்றால் போல பரமேஸ்வரனுடைய திருவுள்ளம் எல்லாரளவிலும் ஒத்தவராயிருப்பினும் மலபாகமுண்டாவளமும் ஆன்மாக்களுக்கு தனுகரண புவன போகங்களையுங் கன்ம மலங்களையும் கூட்டி சுகதுக்கவாதனைகளிலே வைத்து சிலரைச் சத்தினி பாதத்திற்குக் குறைவுக் கீடாகவும், பதிமுத்திகளிலே வைத்தும், மிகுந்த சத்தினிபாதமுடையவர்களை திருவடியிலே சேர்த்தும் இங்ஙன முறையாக நிறுத்துவன். ஆனால் எல்லோரும் அவருக்கு அடிமையாயிருந்தாலும் திருவடியைப் பெற்ற அடியார் ஒப்பில்லாத அடியார் ஆகையால் நாமும் இவையெல்லாவற்றையும் அறிந்து பாரபட்ச மற்றவரென்று நினைந்து திருவடியிலே பொருந்தி இருக்கின்ற சிவயோக ஐநநத்தை அறுக்கின்ற யோகம் என்றும் உணர்ந்து நிலை நின்று அனுபவிக்க வேண்டும்.

15. ஒப்பில்லாத அனுபூதிமார்கள் தேகமுள்ள அளவும் பிராரத்தம் புசிக்கும் போதும் ஆகாமியமேறுறபடி புசிப்பதெப்படி என்று ஐயுற வேண்டும்.

ஆமாம் பிராரத்த நாசம் பிறக்குமளவும் தேகமிருக்கத்தக்க சிவயோகிகள் தாம் சிற்றின்பத்தைப் பொருந்தினார்களாயினும் அந்தச் சிற்றின்பமானது நிலையில் வேறு பாடு பாவனையில் வேறுபாடு மொழியப் பேரின்பத்தில் வேறுபாடு இல்லையாகையால் இவர்களுக்கு இந்த இரண்டு வேறுபாடுகளுமின்றி சொரூபத்திலே நிலைதிரிந்தாலும் ஞானத்திலொழிந்து மலமாயை கன்மங்களிற்படார்கள்.கூடின சிற்றின்பங்களெல்லாம் ஞானத்தின் நிலையாலே



மீண்டும் அந்தப் பேரின்பத்திலே தங்களை ஆக்கிக் கொள்ளாநிற்பர். இவர்களுக்கு தொடங்கி முளைப்பது மொன்றில்லை முடிந்து அழிவதுமொன்றில்லை. இளைப்பதுமொன்றுமில்லை. பிராரத்தம் புசிக்கும் போது மறுமைக்கு வித்தான ஆகாமியம் அங்குரிப்பது சிறிதும் இல்லை. பிராரத்த நாசம் பிறந்து உடம்பானது நழுவுங்காலத்து இவ்வுடம்புடன் கூடி மரிப்பதுமில்லை. இப்படிச் சற்காரியமான சிவயோகமே சிவனை உள்ளபடி அறிந்து கூடின சிவயோகமாம். மற்றுமுள்ள யோகஸ்களெல்லாம் சிவனையுள்ள படியறியாத யோகங்களாதலால் அவைகளெலாம் ஐநநத்தை உண்டாக்கும். ஆகையால் இவர் ஒரு கர்மங்களாலும் சற்றும் சலியார். அளவிடப்படாத பரமாநந்தமான பிரம சத்தியுடனே கூடி நிற்பர்.

*"பேரின்ப மான பிரமக் கிழத்தியு*
*னோரின்பத் துள்ளானை யுள்ளபடி – பேரின்பங்*
*கண்டவரே கண்டார் கடலுயிர்த்த வின்னமுத*
*முண்டவரேயுண்டார் சுவை."* *திருக்களிற்றுப் படியார்.*

அளவிடப்படாத பரமானந்தமான பிரமசத்தியுடனே இடைவிடாத சுயரூபனாயிருக்கின்ற பரமேஸ்வரனை முறைமையிலே கூடி அந்தப் பரமானந்தமே அனுபவிக்கின்ற சிவயோகிகளே சிவனை உள்ளபடி அறிவார்கள். கடலிற் பிறந்த இனிய அமுதத்தைப் புசித்தவர்களும் அதிற் பிரயோசனமான நித்தியத்துவம் பெற்றவர்களுமல்லாது அந்த அமுதத்தை தரிசித்த மாத்திரத்தில் அதனுடைய இரசமுந் தெரியாது பேறுங்கூடாது. அதுபோல மலமாயகன்மங்களை நீங்கி ஞானத்தைத் தரிசித்தாலும் சிவனைக் கூடிப் பரமானந்தத்தை அனுபவித்தா லொழிந்து ஞானமறிந்த மாத்திரத்தில் சாயுச்சியங்கூடாது. நம் கைகளினாலே நாம் அனைத்தும் செய்தாற்போல அந்தச் செயற்பாடுகள் எல்லாம் நம் மேலே ஏறுமாறுபோல சுகரூபியாயிருக்கின்ற சிவன் சாக்ஷிமாத்திரமாயிருந்து தன்னுடைய சத்தியாலே பிரபஞ்சம் நடத்திநிற்க இந்தச் சிவனையே நாயகமாகக் கொள்ளுவோம்.
17. ஆனால் நிர்விகாரமான சிவன் எவ்வாறு எல்லாவிடமும் பொருந்துவான் என்ற வினாவெழும். (பின்னுக்கு எழுதுக)

பொன்னினது நிறமான மாற்றானது கட்டியானபோதும் ஆபரணங்கள் ஆனபோதும் மாற்றுக்கு வேறுபாடில்லாமை போல் சுயரூபமான சிவனும் ஞானசொரூபமான சத்தியும் இந்தமுறைமையே யாதலால் பிரபஞ்சநிமித்தமாகச் சத்தியானது யாதொரு ரூபமாக விருந்ததோ. நம்முடைய கர்த்தாவாதிய சிவனும் விடங்கள் தோறும் அந்தந்த முறைமையாகவே நிற்பர்.

சிருட்டி காலத்திலே ஆன்மாக்கள் சூக்கும தேகத்துடனே இச்சாஞானாக் கிரியை சீவித்தற் பொருட்டாக சிவனும் தன்னுடைய சத்தியைத் தோற்று வித்து தாமும் அந்தச் சத்தியுடனேகூடி இச்சாஞானக் கிரியா சொரூபமாவர். அவர்

களுக்குத் தூலதேகமாய் வகுக்கன வேண்டி தாமுச் சத்தியுமாக அவர்கள் கன்மங்களை அனுபவிக்கவும் தரிச்சிக்கவும் வேண்டி சத்தி ரூபமான பிரமா, விஷ்ணு, உருத்திரா, மகேஸ்சுவரம், சதாசிவர் என்று சொல்லப்பட்ட விக்கிரங்களுடனே அந்தர மூர்த்தியான பிரணவ சொரூபமாய் ஆன்மாக்களினிடங்களிலே மாயா தத்துவங்களோடு கூடி நடத்தா நிற்பர். மீண்டும் ஆன்மாக்களையும் தத்துவங்களையும் பிரிக்கவேண்டி மகாமாயா சத்தியான நாதாந்த காரத்திலே இராரிற்பர். இவற்றுக்கு அனுக்கிரகம் செய்ய வேண்டி வேதத்திலே முடிந்த பொருளான பராசத்தியிலே இராநிற்பர். 18. எல்லாரிடமும் இவர் நிற்பதெப்படி? வெகுவிதமாயுள்ள சாத்திரங்களெல்லாம் ஒரு சற்றுதரித்து இப்பொழுது அறுதியிட்டுச் சொல்ல முடியுமோ? வேறுயாரும் சொன்னாலும் அது உண்மையில் சர்வ போகத்திலுள்ள எல்லாப் பொருள்களும் சத்தியைப் பொருந்திய அடையாளமே யாகையால் நாமும் இதனைப் பேதம், அபேதம், பேதாபேதம் என்று நமக்குப் பொருந்தினதொன்றைச் சொல்வோம்.

இன்னமும் இந்தமுறை விளங்காவிட்டால்.

யாதொரு காரணத்தினாற் சர்வலோகங்களிலுமுள்ள எல்லாப் பொமையும் சத்தியைப் பொருந்தின சிவனுடைய அடையாளமேயாகையால் நாமும் (நீயும்) இதனைப் பேதமென்போம், அபேதமென்போம், பேதாபேதமென்போம் இவற்றில் பொருந்தியதொன்று எது? சொல்ல முடியாது. இந்த முறைமை அர்த்தத்தில் அழுந்தியவனுக்கே அன்றி கேட்பவர்களுக்கு விளங்காது. ஆகவே இவற்றின் முற்று முடிபுதானென்ன?

நாம் சொல்லுகின்ற பேதமும் அபேதமும் பேதாபேதமும் அன்று சிருஷ்டி காலத்திலே தோற்றுவிக்கத்தக்க பொருள்களுடனே பொருந்திய பஞ்சபூதங்களுஞ் சந்திராதித்தரும் ஆன்மாக்களுமாய் நின்றானும், திரிக்காலத்திலே அடியார் பிறரிநது துயரங்கெட திருவுருவம் தோன்றாமல் ஆன்மாவாய் நின்ற முறைமைபோல ஆன்ம போதந் தோன்றாதபடி சிவனாயே நிற்தவர்களுக் கொழிந்து மற்றையோர்களுக்கு சிவனுடைய உண்மை தெரியாது.

*"சிவமே சிவமாக யானினைத்தாற் போலச்*
*சிவமாகி யோகிருப்பதன்றிச் – சிவமென்*
*றுணர்வாகு மங்கே யுணர்வழியச் சென்று*
*புணர்வாகு முண்டோபுவி."*

ஆகவே ஒரு விகற்மமும் கூடாமல் அந்தச் சொரூபமாக இருப்பதொழிந்து தானும் தனியே ஒரு தேலென்றும் சிவனும் தனி பொணாதேலென்றும் தன்னுடைய போதத்தாலே இந்தச் சிவனை அறியவிசாரிப்பாகும். அவ்விடத்தேதான் கெட்டுச் சிவத்துடனே பொருத்த விசாரிப்பாரும் உண்டோ உலகங்களில், ஆனால்



ஆன்மாவும் சிவமும் எப்பொழுதும் இரண்டாய் இருக்குமென்றும் சிவமென்றும் ஒருமுதலில்லை ஆன்மா தானே சிவமென்றும், சிவம் நீ அன்றி வேறில்லை உன்னுடைய உபாதிகள் எங்கிற பொழுதே நீதானே சிவமாகின்றாய் என்றும், நான் சிவனுடனே கூடி சிவனாய் விட்டேனென்று தம்மையுள்ளபடி அறிந்திருக்கின்ற சிவயோகிகள் இப்படியே பேதமாகவும் பேதாபேதமாகவும் சொல்லுவார்களோ இல்லை.

சர்வமும் முடிந்த விடத்தே சிவம் ஒன்றுமேயாய் மீண்டும் சிருட்டி காலத்திலே சத்தியைத் தோற்றுவித்தும் அந்தச் சத்தியும் தாமுமாய் சர்வத்தையும் அந்த சத்தியிடமாய் நின்றும் தோற்றுவித்து அந்தச் சத்தியும் இவையுங் கூடிநின்று நடக்கும்படி ஒழிவற்ற அட்டமூர்த்தியுமாய் இப்படி இவற்றிற் பொருந்தி நிற்கும் போதும் இவற்றிற்கு தான்வேறுமாய் நிற்கும் போதும் ஒரு முதல் போல இவைதானேயாய் நிற்கின்ற உண்மை எப்போதும் அவன் உடையனாய் இருக்கின்றான்.

உன்னுடையவுதரத்திலே நானாவிதமாய்க் கிடக்கின்ற ஜெந்துக்கள் வினைக்கீடாகப்படுகின்ற சுக துக்கவாதனைகள் எல்லாம் உனக்குள்ள வினைபோல நீ கூடிநின்று அநுபவித்ததுண்டோ? ஆகையால் சர்வத்தையும் கூடி நிற்கும் போதும் அவை ஒன்றுடனும் பற்றறநின்று பிரகாசிக்கின்ற சிவனிடத்திலே அவனருளாலே நிலைபெற்று நிற்கின்ற ஆன்மாக்கள் ஆகையும் அழிகையுமாய் வருகின்றவுண்மையை அந்த முறைமை போலக் காண்.

பிருதுவி முதல் நாதமீனான தத்துவங்கள் சேட்டிக்கும்படி அந்தத் தத்துவங்களுக்கு தத்துவனாய் நின்றாலும் அந்தப் பரமேசுவரனே இந்தத் தத்துவங்களைப் பொருந்தி ஆன்மாக்கள் கர்மமலத்தைப் புசிக்கும்படி அந்தவான்மாக்களுக்கு ஆன்மாவாய் நின்றாலும் அந்தப் பரமேசுவரனே தோற்றப்பட்ட பூதகாரியங்கள் ஆன்மாக்கள் செய்த வினைக்கீடாக ஆண், பெண், அலி என்று வகுப்புண்டு வடிவாம்படி அவற்றை

*"அவனே அவனி முதலா யினானு*
*மவனே யறிவாய் நின்றானு – மவனேஆ*
*ணானாகிப் பெண்ணா யலியாகி நின்றானுங்*
*காணாமை நின்றாலுங் காண்."*

இவற்றை இப்படி அறிந்து கூட இவைதானாய் நின்று நடத்தும் போதேயும் இந்த முறைமைகள் ஒன்றும் அறியாதபடி தீரோபவித்து ஒரு பணியற நின்றானும் அந்தப் பரமேஸ்வரனே.*

கடலின்கண் கீய்த்தித் திரைகளை அலைத்து நின்றாடுதற்கு சாமத்திய வான்களும் கடலினுடைய ஆழமும் அகலமும் நீளமும் அறியவராது போல பூமியின் கண்ணே சரியை, கிரியை, யோகங்களிலே திரவமநுட்டித்த பத்திமான்களுக்கும்

சிவனுடைய ரூப, சொரூப, சுபாவங்களை அறிய விசாரிக்கில் அவர்கள் கருத்துக்கும் எட்டாதாகை போல.

நம்மைப் போல தம்பிரானார் திருமேனி கொண்டெழுந்தருளிவந்து ஞானதீக்ஷாக்கருமங்களினாலே மலங்களைப் போக்கி அவர்களை அடிமை கொண்டது.

"சிவனே யானுந் தேறினன்காண்க" திருவாதவூர் நாயனார் அருளிச் செய்த பிரமாணப்படி நம்மை இரக்ஷிக்கும் காரணத்தால் இப்பொழுதும் பரமேஸ்வரன் எழுந்தருளிவந்த முறைமையைச் சொல்லில் உலகில் உவர் நீர் இரதமான கூர்மையுப்பாகவே வடிவங் கொண்டதைக் காண்கையால் அப்படியே காண். இது அருளாலே சிவன் திருமேனி கொண்ட முறைமை.

வாக்கு மனதீத கோசரமாயுள்ள சர்வேசுரன் ஆன்மாக்களைப் போல தேகியாய்த் தோன்றியது சகலரிற் பக்குவமான ஆன்மாக்களுக்கு அவர்களுடைய சத்தினிபாதத்துக் கீடான சங்காரங்களாலே அவர்களுடைய மலமாய கன்மங்களைப் போக்கி தனக்குடைமையான பரமானந்தத்தை அளிக்கைக்குத் தன்னுடைய அருளாலே தன்னுடைய திருமேனி கொண்டெழுந்தருளி வந்து அருளுவார். இது எப்படியெனில் பூமியின் கண் தோன்றிய மரமானது பயன் படுங்காலங்களிலே கைமாறு கருதாமல் சிரத்தையுள்ளவர்களுக்குப் பயனைக் கொடுத்துச் சந்துஷ்டி பிறப்பியாய் நிற்கும். இஃதொழிந்து மரந்தாரகமாய் நிற்கின்ற புல்லுருவி மரத்தின் பலத்தைக் கொடுக்கவன்றோ இருக்கிறது.

முத்தியைப் பெறுவதற்கு முதலான ஆன்மாவென்பதொரு கொடியிலே அநாதியே மறைக்கத் தக்க ஆணவமலத்தின் காரியமான அஞ்ஞானமான கொடி வெகு விதமாகப்படர்ந்ததினாலே இதாகிதங்கள் விளைத்து, இது காரணமாக மயக்கத்தைச் செய்கின்ற மாயையாலே பூதகாரியமானவுடம்பு ஜநநந்தோறும் பலியாநிற்கும், இவை பக்குவப்பட்ட எல்லைகளை அறிந்து தம்பிரானுந் திருமேனி கொண்டெழுந்தருளி வந்து அருளாலே சமைத்த அனேகதரப்பட்டவாளாலே இந்த ஆணவமல மூலத்தின் வேரறுக்க. அப்பொழுது எல்லா மலங்களின் முதலடங்கலுஞ் சேர்ந்துபோய் முத்தியானது வெகுபலமாகப் பலியா நிற்கும் இந்தப் பழக்கத்தினுடைய இரசத்தினாலே சிவமென்றும் ஆன்மாவென்றும் இரண்டல்லாதபடி அப்பொழுதே ஒரு நீர்மையான சபாபந் தோன்றாநிற்கும்.

படிகைக்கல் தன்னுடைய பிரகாசத்தைத் தடுத்த வர்ணங்களினுடைய ரூபங்களாலே தன்னுடைய சுத்தமான பிரகாசந் தோன்றாமல் அது அதுவாய் நின்றாற்



போல (ஆன்மா) தேகத்திலே பொருந்தி நின்று ஜநந மரணங்களிலே மொத்துண்ணாமல் மலபாகமும் கன்மவொப்புஞ் சத்திநிபாதமும் உண்டான அவசரத்தாலே அவதிகூடாமல் எழுந்தருளிவந்து தம்முடைய பொன்னான திருவடியை என்தலையிலும் இருதயத்திலும்

*"அகளத்தி லாநந்தத் தாநந்தி யாயே*
*சகளத்திற் றையனுடன் றோன்றி – கிளைத்தைப்*
*போக்குவதுஞ் செய்தாள்றன் பொறன்னடி மென்புன்றலைமே*
*லாக்குவதுஞ் செய்தானவன்."*

அடியேனை ஈடேற்றும் பொருட்டு அநாதியே பிணித்த விலங்காகிய மலமாய கன்மகளை போக்குவதுஞ் செய்து தன்னுடைய பொலிவினையுடைய திருவடியை தலையிலே வைத்தாய்.

*"குற்றமனுத் தென்னையாட் கொண்டருளித தொண்டனே*
*னுற்ற தியானத் துடனுறைவர் – முற்றவரின்*
*மாட்சியுமாய் நிற்பாரியான் மற்றொன்தைக் கண்டிடினக்*
*காட்சியுமாய் நிற்பார் கலந்து."*

திருவடி ஞானத்தையுந்தந்து நான் தியானிப்பானாய் நிற்கைக்கு வந்து அத் தியானமும் தாமேயாய் நின்றாய்.

*"ஆளுடைய னெந்தரமு மாளுடையா னேயறியுந்*
*தாளுடையான் றொண்டர் தலைக்காவவ – நாளுந்*
*திருவிய லூரா ளுஞ் சிவயோசி யின்றென்*
*வருவிசையை மாற்றினான் வந்து."*

திருவடி, தியானம் இதனாலே ஆளுடைய தேவனார் திருநாமம் பெற்று மற்றைய தொண்டர்களையும் ஆளுஞ் சிவயோகிகளை அறிந்து சிரக்ஷிக்கலானாய், என்னையும் அசைவற்ற திருவடியில் வைத்தான்.

*"தூலத்தடுத்த பளிங்கின் றுளக்கமெனத்*
*தூலத்தே நின்று தூங்காமற் – காலத்தாற்*
*றாளைத்தன் தென்பிறவித் தாளையற விழித்தார்க்*
*காளன்றி யென்மா றதற்கு."*

படிகக்கல் தன் பிரகாசத்தைத் தடுத்த வன்னங்களையுடைய ரூபங்களாலே தன்னுடைய சுத்தமான பிரகாசந் தோன்றாமல் அதுஅதுவாய் நின்றாத்போல நானும் தேகத்திலே பொருந்தி நின்று ஜநந மரணக்காலிலே மொத்துண்ணாமல் மலபாகமும் கன்மமொப்பும் சத்தினி பாதமும் உண்டான அவசரத்திலே அவதிப்படாமல்

எழுந்தருளிவந்து பொன்னான திருவடியை தலையிலும் இரு தயத்திலும் நிற்கும்படி செய்தருளி ஐநநங்கள் காலற்றுப்போம்படி திருக்கண் சாத்தியருளிக் கைமாறாக அடிமையாக என்னைக் கொடுத்து நான் பரங்கெட்டு விடுவ தொழிந்து வேறோரு கைமாறும் கண்டிலேன்.

நிற்கும்படி தந்தருளி எனக்கு ஏழுவகையாய் எண்பத்தி நான்கு நூறாயிரயோனி பேதங்களில் உன்னுமளவில் அவன் வேறொன்றுக்கும் குறைவிலனாகையினால் என்னை அடிமையாகக் கொடுத்து நான் பரங்கெட்டு விடுவதொழிந்து வேறோருகைம் மாறுங்கண்டிலேன்.

*"இக்கணமே முத்தியினை யெய்திடிறு மியானினைந்த*
*வக்கணமே ஆனந்தம் தந்திடினு – நற்கணத்தார்*
*நாயகற்கு நாயகிக்கு நானடிமை யெப்பொழுது*
*மாயிருந்த லன்றியிலேன் யான்"*

*திருக்களிற்றுப் படியார் 98பா இருக்கிறது.*

பெறுதற்கரிய முத்தியினை இக்கணப் பொழுதிலே பெறிறும் நான் கருதப்பட்ட பரமானந்தம் கருதின கருத்து மாறுவதன் முன்னே பெரிதும் இலை ஒன்றையும் ஆதரிப்பதில்லை இந்தப் பேற்றை அளிக்கும் பொருட்டு அடியேனுக்காக திருமேனி கொண்டெழுந் தருளிவந்த சிவயோகிகளாகிய தம்பிரானார்க்கும் அவளுக்கு மனம், வாக்கு, காயங்களாய் நின்ற ஞானசத்திக்கும் நான் எப்பொழுதும் மீளா அடிமையாயிருப்பேன்.

### திருக்களிற்றுப் படியாரறிய வினாக்களுக்கு விடைகள்

1. பக்குவப்பட்ட ஆன்மாக்களை தம்மருளாலே நடத்திப் போதராகின்ற காலங்களிலே இரட்சிக்கும் முறை எப்படி?

2. சிவன் பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டே நிற்பானாகில் பிரபஞ்சமானது தானே நடந்ததோ?

3. இப்படியான சிவரூபத்தை தரிசிப்பதெப்படி?

4. ஆசாரிய அனுக்கிரகத்தாலே என்னுடைய பசுஞானம் போனவளவில் நான் அந்த அவசரத்திலே நின்று அனுபவிக்கிறது எப்படி?



*"அரனை ஆன்மாவை ஆய்ந்து அறிவதற்கு*
*தரமான மெய்யுணர்வு மெய்கண்டார் – திருவான*
*பரமனும் பசுவும் பற்றிநிற்பர் பகுத்தறிய*
*திருக்களிற்றுப் பாடியாரைப் பார்."*

*(பகுத்தறிய பிரித்தறிய)*

5. ஆசாரியனும் ஆன்மாக்களில் ஒருவனோ?

6. நானாதீதசகோசரமாயுள்ள சிவன் ஆன்மாவாவனோ?

7. ஏன் சாஸ்திரங்களில் செயலில்லை என்று எண்ணக் கூடாது உபதேசமின்றியே சாத்திரம் மாத்திரமே ஒதினால் திருமேனி கொண்டெழுந்தருளிவந்த ஞானசாரியன் கருணையினாலே உண்டாகமாட்டாது.
ஆழ்ந்த கடந்தண்ணீர் குடிப்பதற்கு உதவாது.

8. சிவரூபந்தான் எப்படி இருக்கும்?

9. இப்படியான சிவனைக்காணுவதெப்படி?

10. இப்படி எல்லார்க்குஞ் செய்யலாமா?

சிவ சிவ.

*சிவஞானச் செல்வன், சைவ நன்மணி,*
*ஞானவாரிதி,*
இரா. மயில்வாகனம்.

# சிவஞானபோத மலர்ச்சி



முப்பொருள் உண்மையை அறிவுறுத்தும் சைவசித்தாந்தம் சிவஞானபோத மலர்ச்சியின் அவசியத்தை வலிஉறுத்துகின்றது. முப்பொருள் ஆகிய இறைவன், ஆன்மா, மாயை என்பனவற்றுள் எப்பொருள் சிவஞானபோத மலர்ச்சி பெறுதல் வேண்டும்? எனும்வினா எழுகின்றது. அன்றும், இன்றும் என்றும் பரம்பொருளாகிய சிவன் வாடாத நறுமலராக உள்ளான். அவனிடம் இருந்து ஆதியும் அந்தமும் இல்லாது சிவமணம் ஓயாது பரிமளித்த வண்ணம் உள்ளது. எனவே அவனிடம் புதிதாகச் சிவஞான போத மலர்ச்சி ஏற்படுதல் வேண்டியதில்லை.

மாயை ஆகிய பொருள் அறிவும் உயிரும் அற்றதாகும். ஆகவே அதனிடம் சிவஞானபோத மலர்ச்சி உண்டாக இடமில்லை. ஆன்மா ஆகிய பொருள் சத்தாகிய சிவனும் அல்ல, அசத்தாகிய மாயையும் அல்ல. அதன் இயல்பு சார்ந்ததன் வண்ணம் விளங்குவதாகும். அதாவது அசத்தாகிய மாயைப் பொருளைச் சார்ந்தால் சுட்டறிவு பெற்று விளங்கும். அச்சார்பு நிலையை விட்டு நீங்கி சத்தாகிய பரம்பொருளைச் சார்ந்தால் மெய்யுணர்தல் மலர்ச்சிபெற்று விளங்கும். அதுவே சிவஞான போதமலர்ச்சி எனப்படும்.

ஆன்மாவாகிய பசுவைத் திருவெம்பாவையாகவும், சிவஞானபோதத்தை ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெரும் சோதியாகவும் வர்ணித்துள்ளர் மணிவாசகப் பெருமான். அவர் சிவஞான போதமலர்ச்சி பெறுவதற்கு வேண்டிய வழிபாட்டை மறைபொருளாகச் சுட்டிக் காட்டிய உண்மையை இன்று பல சிவனடியார்கள் உணர்ந்து அனுட்டிக்கத் தெரியாது மயங்கி ஏதேதோ புறப்பூசையும் வழிபாடும் செய்து பலன் அடையாது சலித்து அலைந்து திரிதல் புலப்படுகிறது. ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெரும் சோதிவழிபாட்டின் மறைபொருளை எடுத்துக் காட்டுவதாக சிவலிங்க வழிபாடு அமைந்திருப்பதைச் சிவனடியார்கள் தெளிந்து செயற்படுதல் உத்தமமாகும்.

சிவலிங்க வழிபாடே ஆதிகாலம் தொட்டுச் சைவமக்கள் பெரிதும் போற்றி அனுசரிக்கப்பட்டு வந்துள்ளது. சிவலிங்க வடிவில் தமக்கு முன் தோன்றிய ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெருஞ்சோதியின் அடிமுடியைத் தேடிக் காணாது பிரம்மாவும் விஷ்ணுவும் தோல்வி உற்றனர். மனித பிறப்பு எடுத்த ஆன்மாக்களால் அதைப் பூரணமாகத் தரிசித்து மாசறு காட்சி பெறுதல் இயலும் என்பதைப் பிரம்மா, விஷ்ணுவின் தோல்வி எடுத்துக் காட்டுகிறது. ஆகவே சிவஞானபோத மலர்ச்சி பெறுவதற்குத் தகுதிவாய்ந்தவர் சிவன் அடியார்களேயாகும் என்பதை இங்கு



வலியுறுத்துகிறோம். பெரும்பான்மையான சிவனடியார்கள் அம்மலர்ச்சியைச் சரிவரப் பெறாமைக்குக் காரணம் அதைப் பற்றிய அந்தர்யாக பூசையை முறைப்படி செய்ய வேண்டிய நுட்பங்களை நன்கு தெளிந்து செயற்படாமையேயாகும்.

சிவலிங்க வழிபாட்டிற் கூடப் புறப் பூசைக்குத் தான் முக்கியவத்துவம் கொடுத்துப் பெரும்பான்மையாக சைவ மக்கள் அகப் பூசையைப் புறக்கணித்து வருகின்றனர். அகப் பூசையானது புறப்பூசையுடன் ஆலயங்களிலேதான் ஆரம்ப கட்டத்தில் அனுட்டித்தற்குரியது என்பது சிவாகமவிதியாகும். அதை நாம் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் சரியா மார்க்கத்தில் தமது சிவவழிபாட்டை ஆரம்பித்த திருநாவுக்கரச சுவாமிகள் புறப்பூசையுடன் நில்லாது, அகப் பூசையைத் தாமே செய்து நமக்கும் அற்புதமான வழிகாட்டி உள்ளார். அவர் காட்டியவழிமுறைகளை வழுவற உணர்ந்து அனுசரித்துச் சிவஞானபோத மலர்ச்சி பெறுபவர்களை இன்று சைவ சமுதாயத்தில் காணுதல் அரிது என்பது கவலைக்குரியது ஆகும்.

உதாரணமாக அவர் அருளிய சரியா மார்க்க வழிகாட்டும். "நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா !" எனும் தேவாரத்தை எடுத்துக் கொள்வோம். இதைக் கிளிப்பிள்ளை போலத் திரும்பத் திரும்ப ஓதிமன உணர்ச்சி வசப்பட்டுப் பொருள் உணராது வழிபடுவதில் பிரயோசனம் இல்லை. அதன் அடுத்த அடிகளில் அவர் நாம் எவ்வாறு வழிபடுதல் வேண்டும் என்பதை நன்குதெளிவு படுத்தி உள்ளார். உளவாரத் தொண்டு முதலாவதாகவும் அதனைத் தொடர்ந்து புறப்பூசை இரண்டாவதாகவும் செய்தல் வேண்டும் என மறைமுகமாக நமக்கு அறிவுறுத்துகிறார். அதில் சிவபூசை செய்பவர்கள் "பூமாலை புனைந்து ஏத்திச் சிவனைப் புகழ்ந்து பாடும்படி" பணிக்கிறார். அதில் அவர் சிவனடியார்கள் யாவரையும், சிலவிக்கிரகத்துக்கு நேரடியாகவே பூமாலை புனைந்து ஏத்தும்படி வழிகாட்டுகிறார். இந்த இடம்தான் நமது கவனத்துக்கும், ஆய்வுக்கும் அனுட்டானத்துக்கும் விசேடமாக உள்ளதாகும். இங்கே அப்பர் அடிகள் பூமாலை புனைந்து ஏத்தும் படியே கூறுகிறார். இது இன்றைய ஆலய வழிபாட்டில் அனுசரிக்கப்படுகிறதா ? என்பது நமது ஆய்வுக்குரியது ஆகும்.

தாமாகவே சிவவழிபாட்டின் பொருட்டு பூமாலை கட்டும் வழக்கம் பெரும்பாலும் மலை ஏறிவிட்டது. பிறர்கட்டி விற்கும் பூமாலையைப் பணம் கொடுத்து வாங்கிக் கோயிற் பூசகரிடம் கொடுத்து ஏத்துவிக்கின்றனர். நீங்களே பூமாலையைப் புனைந்து ஏத்துங்கள், எனவே நாவுக்கரச சுவாமிகள் அருளியுள்ளார். இன்று நாம் என்ன செய்கிறோம் ? பிறரைக்கொண்டு பூமாலை கட்டுவித்துப் பிறரைக் கொண்டே அதனை ஏத்துவிக்கிறோம். ஏத்தும் நிலை மாறி, ஏத்துவிக்கும் நிலை உருவாகிய உள்ளத்தை ஆலயத்தில் நாம் காண்கிறோம்

கட்டுவித்தும் ஏத்துவிக்கும் பூமாலை அர்ச்சனையை இறைவன் நேரடியாகவே ஆசீர்வதித்தல் எவ்வாறுகை கூடும்? சிவனை அணுகுவதற்குக் கூடத்தரகர் ஆதிக்கம் வேண்டுமா ? இறைவனை நாயகனாயும் ஆன்மாவை நாயகியாகவும் சுத்தசைவம் சித்தரிக்கிறது.

அவ்வாறிருக்க நாயகியைப் பள்ளி அறையிற் சென்று தனது நாயகனைத் தரிசித்துப் பேரின்பம் பெற முடியாதவாறு, தரகரின் சர்வாதிகாரம் தடுக்கிறது. தாசர்கள் எனப்படும் சூத்திரர் ஆலயத்தில் பூசாரித்தரகர்களால் தீண்டாதார் என இந்த விஞ்ஞான வளர்ச்சிக் காலத்திலும் கூடக் கணிக்கப்பட்டு அவரை மூலஸ்தானத்திற்குள் சென்று நேரடியாகவே பூசை செய்வதற்குத் தடைவிதிக்கப் பட்டுள்ளது. பூசாரிகள் தம்மைத் தாமே கடவுளின் பிரநிதிகள் எனப் பிரகடனப் படுத்திக் கொண்டுள்ளனர். தங்களுக்குத்தான் ஆலய மூலஸ்தானத்திற்குள் பிரவேசித்துப் பூசைகள் அர்ச்சனைகள் செய்யும் உரிமை உண்டு என்றும், சூத்திரன் சுத்தசைவப் புனிதனாகவும், சிவஞானியாகவும் இருந்தபோதும் அவனுக்குப் பூசாரிக்குள்ள உரிமை இல்லை என்றும் தடுத்தல் தகுமா? இந்த உரிமை மீறற் சமயச் சட்டம் சைவக் கோயில்களில் உள்ளமை வேதனைக்குரியதாகும். இது பற்கொதிபோல் உள்ளது. சூத்தை அரித்த பல்லைப் பிடுங்குவதற்கும் பயம். அதை வைத்திருப்பதும் துன்பம், சைவச் சூத்திரர் திருசங்கு நிலையில் இவ்வாறு அந்தரத்தில் நின்று அவதிப்படுதல் அடுக்குமா ? மனித சமய உரிமையைப் பெறுதல் சூத்திரர்களுடைய கட்டாயமான கடமையாகும்.

சிவஆலயத்தை ஒரு வைத்தியசாலையாகவும் அதன் தலைவனை வைத்திய நாதனாகவும் சைவசித்தாந்தம் கொள்கிறது. அங்கே அனுமதிக்கப்பட வேண்டியவர் நோயாளிகளேயன்றிச் சுகதேகிகள் அல்ல. வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்ட நோயாளியை எவரும் வைத்தியரை அணுகவிடாது தடுப்பதில்லை. ஆனால் சிவாலயத்தை அடைந்த சூத்திர ஆன்மீக நோயாளிகளை வைத்திய நாதனை அணுகி நேரடியாகவே கலந்தாலோசித்து வேண்டிய சிகிச்சை பெற முடியாதபடி, தடுத்துத் தூர நிறுத்தும் பூசாரிகளை என்சொல்வது ? வைத்திய சாலையில் சேவை புரியும் செவிலிப் பரிசாதகர் ஒருவர் நோயாளியின் வருத்தத்தை வைத்தியரிடம் முறையிட்டு மருந்து வாங்கித் தருவதாகக் கூறினால் அதை எந்த ஒரு நோயாளியும் ஏற்றுக் கொள்வானா ? அல்லது வைத்தியர் தானும் நேரடியாகவே நோயாளியைப் பரிசோதனை செய்யாது தாதிமூலம் மருந்து வழங்க ஒருப்படுவாரா ? இவ்வுண்மை விளக்கம் பெற்றால் பூசகர்கள் நம்மை மூலஸ்தானத்துக்கள் சென்று நேரடியாகவே பூசிப்பதைத் தடைசெய்ய ஒரு போதும் சகித்து ஒதுங்கமாட்டோம். பூசகர்களுக்கு உரிய கடமை ஐந்துகால பூசைகளையும் ஆலயங்களில் செய்தலாகும். அதைவிட்டு அடியார்கள் இறைவனுக்கு நேரடியாகவே அருச்சனை செய்யும் உரிமையைத் தடுத்துத் தாமே அதை அடியார்களுக்காகச் செய்து பணம் சம்பாதிப்பதல்ல.



சைவசமய குருமார் என்பவர் மரபுவழி சிவாசாரியார் எனப்படுவர். ஆசாரியார் என்பவர் பேராசிரியராவர். அவர் விசேடமாகக் குரு உபதேசம் செய்து சிவனடியார்களுக்குச் சிவஞானபோத மலர்ச்சி பெறுவதற்கு வழிகாட்டுபவர் ஆவர். இன்றைய சிவாலயப் பூசாரியர் சிவாசாரியர் ஆவதற்குக்த தகுதி அற்றவர். உண்மையான சிவாசாரியார் கூட அடியார்களுக்கு வழிகாட்டுபவரே அன்றிச் சிவஞானபோதம் வழங்க வல்லவர் அல்லர். சிவாலய தரிசனம் செய்யும் அடியார்கள் சுயமாகவே உரியசாதனை செய்து, தமக்குத்தாமே உள்ளொளி பெற்றுச் சிவஞான போத மலர்ச்சியை எவ்வாறு பெறுதல் வேண்டும் என்பதைச் சூத்திரவேளாளர் மரபைச் சேர்ந்த திருநாவுக்கரச சுவாமிகளே நமது உண்மையான சிவாசாரியராக நின்று வழிகாட்டும் ஒரு அற்புதமான தேவாரத்தை இவண் தருகிறோம்.

*உயிரா வணமிருந் துற்று நோக்கி உள்ளக் கிழியின்*
*உருஎழுதி*
*உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால்*
*உணரப் படுவாரோ டொட்டி வாழ்தி*
*அயிரா வணமேறா தானே றேறி*
*அமரர் நாடாளாதே ஆதரூர் ஆண்ட*
*அயிரா வணமேயென் அம்மா னேநின்*
*அருட் கண்ணால் நோக்காதார் அல்லா தாரே !*

இத்தேவாரத்தை ஓதி இதன் மெய்ப்பொருள் உணர்ந்து அதற்குத்தகச் சாதனை செய்யாதோர் சிவஞானபோத மலர்ச்சி பெற மாட்டார் என்பது நாவுக்கரசரின் துணிபாகும். புறப்பூசை செய்வோர் அதன் மூலமாக எவ்வாறு அகப்பூசை செய்தல் வேண்டும் என்பதை நாவுக்கரசர் எடுத்துக் காட்டுகிறார். முறைப்படி ஆலய தரிசனம்செய்த பின்பு மூலஸ்தானத்தின் முன்பு ஒரு பக்கமாக இருந்து கொண்டு மன உணர்ச்சி விருத்தி எதுவும்இன்றி அங்குள்ள சிவரூபத்தை உற்றுக் கவனமாக நோக்குதல் வேண்டும். அவ்வாறு உற்றுநோக்கி அத்திருஉருவத்தினை நமது உள்ளமாகிய வெள்ளைத் திரைச் சேலையில் வரைந்து கொள்ளுதல் வேண்டும். எதற்காக ? பின்பு நமது தியான அறையில் தனித்திருந்து மௌனமாக அகப்பூசை செய்வதற்காக என்க.

அவ்வாறு அவனுடைய சித்திரத்தை உள்ளத்தில் வரைந்து கொள்ளும்போது ஓர் ஆவணம் – உறுதிச் சீட்டு – எழுதி அவனிடம் ஒப்படைத்து விடல் வேண்டும். அது என்ன ஆவணம்? அதுதான் நாம் அவனுக்கு என்றும் மீளா அடிமை என்பதாகும். அதன்மறைபொருள் நம்மை நாமே அவனிடம் ஒப்படைத்து விடலாகும். அத்துடன் உள்ளொன்று வைத்துப் புறம்மொன்று பேசுவோர் உறவுகலவாது சாது சத்சங்கத்தினருடன் இசைந்து வரைந்து கொண்ட அவனுடைய

சித்திரத்தை அகக் கண்ணாற் கண்டு சிவசெபதியான அகப்பூசைசெய்தல் வேண்டும். பக்திசிரத்தையுடன் அவ்வாறு இடைவிடாது அகப்பூசை செய்து வரும்போது ஓர் அற்புதம் நிகழும். நாம் உள்ளத்தில் வரைந்து கொள்ளவேண்டிய திருவுருவம் தில்லை நடராஜனுடையதாகவோ அல்லது சிவலிங்கமாகவோ இருத்தல் வேண்டும்.

தொடர்ச்சியான அகப்பூசை செய்து வரும்போது நிகழக்கூடிய அற்புதம் யாது? அதை நாவுக்கரசரே விளக்குகிறார். அதன் உரையை இங்கு தருகிறோம். தேவலோகத்தில் உள்ள அயிராவணம் என்னும் வெள்ளை யானை மீது சிவன் ஏறிவரமாட்டான். அவன் ஏறிவந்து அற்புதமான காட்சி கொடுத்து நம்மைக் காத்தாட்கொள்வது ஏறு எனப்படும், நந்தி எம் பெருமானாகிய வாகனத்தின் மீது ஆகும். ஆம்! அவனை அகப்பூசை ஒழுங்காக விதி தவறாது செய்து வரும் சிவனடியார்களுக்கு நந்தியில் ஏறிவந்து கொடுக்கும் காட்சி சொல்லொணாத அற்புதமாகும். அகப்பூசைமூலம் பெறப்படும் அவனுடைய அருட் கண்ணால்— உள்ளொளி மூலம் நோக்காத அடியார்கள் அந்த அற்புதமான காட்சியை ஒரு போதும் பெறமாட்டார்கள். பூசாரியர் காட்டும் பூசைக் காட்சி மூலம் அதைப் பெறுதல் அரிதாகும், வேளாள நாவுக்கரசர் காட்டிய வழியே உத்தமத்திலும் உத்தமமாகும். அதுவே அகப்பூசை ஆகும்.

## மணிவாசகப் பெருமானும் மெய்கண்டதேவரும் காட்டிய சிவபோத மலர்ச்சி நெறி

சைவ இலக்கியமாக விளங்கும் மாணிக்கவாசக சுவாமிகள் உடைய திவ்ய சரித்திரதிற்கும் திருவாசகத்துக்கும் இலக்கணமாகத் திகழ்வது மெய்கண்ட தேவர் அருளிய சிவஞான போதமாகும். நாம் முதலில் சைவ இலக்கியத்தைப்பயில்வோம். பக்குவ நிலை அடைந்த மணிவாசகப் பெருமானுக்குச் சிவபெருமானே, திருப்பெரும் துறையில் குருந்த மர நிழலில் நேரே தோன்றி விசேட சிவ தீக்கை கொடுத்துச் சிவஞானபோத உபதேசம் செய்தருளினார். அந்த மகிமையை எடுத்துக்காட்டுவதாக அவர் அருளிய "கேட்டாரும் அறியாதான்" எனும் திருவாசகம் உள்ளது. இவ்விடத்தில் நாம் கவனிக்க வேண்டிய ஓர் உண்மையாவது திருவாசகத்தை இலக்கியமாகவும் மெய்கண்ட சாத்திரத்தை அதற்கு இலக்கணமாகவும் கொண்டு பயிலுதல் வேண்டும் என்பதாகும்.

இலக்கணம் இல்லாத இலக்கியம் இயங்கி விளங்குவதில்லை, சாத்திரீய விளக்கம் இன்றித் தோத்திரத்தின் மறை ஞானப்பொருள் பிரகாசிப்பதில்லை. இத்தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு மாணிக்கவாசகர் அருளியா கேட்டாரும் அறியாதான்" எனும் திருவாசகத்துக்கு மறைபொருள் விளக்கமாக மெய் கண்ட



தேவர் அருளிய சிவஞான போதச் சாதனை இயல் எவ்வாறு உறுதுணையாக நின்று உண்மை விளக்கம் பெறுவதற்கு உதவுகின்றது என்பதை ஒப்பு நோக்கி ஆய்ந்து உணர்ந்து செயற்படுவோம். சாதனை இல்லாத போதனை வேதனைக்குரியதாகும். சாதகர்கள் ஓதி உணரும் பொருட்டுக் குறிப்பிட்ட திருவாசகத்தை முதலாவதாக இவண்தருகிறோம்.

*கேட்டாரும் அறியாதான் கேடொன் றில்லான்*
*கிளையிலான் கேளாதே எல்லாங் கேட்டான்*
*நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே*
*நாயினுக்குத் தவிசிட்டு நாயின் ஏற்கே*
*காட்டாதன வெல்லாங் காட்டிப் பின்னுங்*
*கேளாதன எல்லாங் கேட்பித் தென்னை*
*மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்*
*எம்பெருமான் செய்திட்ட இச்சை தானே!*

மாணிக்கவாசகருக்கு அருள் புரிந்த சிவபெருமான் நமக்கும் கட்டாயம் அருள் புரிவான் என்ற நம்பிக்கையுடன் பக்தி சிரத்தை கொண்டு மீண்டும் இதை ஓதுவோம். அவரைப் போன்று சன்மார்க்க சாதனை நாமும் செய்வோமாயின் நிச்சயமாக நமது பிறவிப் பெரும் பிணி நீங்கப்பெறுவோம். சைவ உலகில் எத்தனையோ அட்டாங்க யோகிகள் விழித்திருந்து கடும் தவம் புரிகின்றனர், அவர்களுக்கெல்லாம் சிவன் காட்சி கொடாது, அவர்களைக் காத்து ஆட்கொள்ளாது, மணிவாசகருக்கு நேரடியாகத் தோன்றிச் சிவஞானபோத மலர்ச்சி நல்கிப் பிறவிப் பிணிதீர்த்தது ஏன்? என்பது நமது ஆய்வுக்குரியதாகும். விழித்திருந்து தவம் செய்பவர்களிடம் உள்ள குறைபாடு என்ன? அவர்களால் காண முடியாததைக் காணவும் கேட்க முடியாதவற்றைக் கேட்கவும் முடியாமற் போனது ஏன்? அதற்குக் காரணம் அவர்கள் அட்டமாசித்திகளைப் பெற்று அற்புதங்கள் புரிந்து அவற்றின் மூலம் சிவஞானபோத மலர்ச்சி அடையலாம் எனும் இலட்சியத்தைக் கொண்டமையாகும். மாணிக்கவாசகர் அவ்வாறு குறுகிய குறிக்கோள் கொண்டு சித்துக்களைப்பெறுதல் வேண்டும் எனத்தவம் எதுவும் செய்யவில்லை. அப்படியாயின் அவர் செய்த தவம் யாது? அதை அறிந்து நாமும் அவ்வாறு தவம் செய்து சிவஞான மலர்ச்சியும் ஆன்மீக விடுதலையும் பெறுவதற்கு உறுதி கொள்வோம்.

சிவன் கல்வி, கேள்வி, அறிவுடைமை மூலம் தெளியக் கூடியவன் அல்லன். பரோபகார நன்மையே சொரூபம் ஆனவன். அவனுக்கு இனபந்து என எவரும் கிடையாது. தூல நாதத்தின் மூலம் ஒன்றையும் செவிமடுத்துக் கேளாதவன். அவனுக்கு எட்டக் கூடியது வியாபகமான நுண்ணிய மௌன நாதமாகும். சைவ

சித்தாந்தம் கூறும் சன்மார்க்க சமாதி நிலையிலேதான் நாம் நுண்ணிய சூக்கும நாதத்தைப் பெறலாம். அதன் வழியாகவே சிவனுடன் தொடர்பு கொள்ளலாம். நாம் அத்தகைய சமாதி நிலை அடைவதற்குச் செய்ய வேண்டிய சாதனை எதுவென மணிவாசகர் திட்டவட்டமாகத் தமது திருவாசகத்திற் கூறவில்லை. அதைப்பற்றிய செயல் முறை நுட்பங்கள் சிவஞான போத நூலின் சாதனை இயலில் உள்ளன. அவற்றைப் பின்பு கவனிப்போம்.

இப்பொழுது சிவஞானபோதம் யாது? என்பதைப் பற்றிய உண்மை விளக்கம் பெறுவோம். மாணிக்கவாசகருடைய சரித்திரத்தைக்குறிப்பது திருவாதவூரடிகள் பூராணமாகும். அதில் திருப்பெரும் துறையில் ஒரு குருந்த மரநிழலில் மாணிக்க வாசகருடைய வருகையைக் காத்திருந்த சிவபெருமானுடைய கையில் ஓர் ஏடு இருந்ததாகக் கூறப்படுகிறது. அதைக் கவனித்த மாணிக்கவாசகர் அது என்ன ஏடு? எனக்கேட்டதாகவும் அதற்குப்பதிலாகச் சிவபெருமான் அதைச் சிவஞானபோதம் எனக்கூறியதாகவும் உள்ளது. அதை அறிந்த மாணிக்கவாசகர் சிவம் ஏது? ஞானம் ஏது? போதம் ஏது? எனக்கேட்டு அவற்றுக்கு உபதேச விளக்கம் சிவபெருமானிடம் இருந்தே பெற்றதாகக் குறிக்கப்பட்டுள்ளது. அதில் உள்ள ஆச்சரியம்யாதெனின் சிவபெருமான் அந்த நூலை விரித்துப்படித்துப் பொருள் கூறியதாக இல்லை. அது ஏன் எனின் நூல்கள் மூலம் சிவஞானபோத மலர்ச்சி பெறுதல் இயலாது என்பதனாலாகும்.

சிவபெருமானுடைய குருவடிவம் தட்சணாமூர்த்தியாகும். அவர் கல்லால் மர நிழலில் வீற்றிருந்து ஆதிகால முனி சிரேஷ்டர்களுக்கு இந்து மதம் ஆரம்பமாவதற்கு முன்பே சிவஞானபோத உண்மை விளக்கம் அளித்துள்ளார். அவர் எவ்வாறு உண்மை விளக்கம் அளிக்கிறார் என்பதைத் திருமூல நாயனார் அருளிய ஒரு திருமந்திரச் செய்யுள் எடுத்துக் காட்டுவதைப் பயின்று பாருங்கள்:—

*சத்தும் அசத்துமெவ் வாறெனத் தான் உன்னிச்*
*சித்தை உருக்கிச் சிவனருள் கைகாட்டப்*
*பத்தியின் ஞானம் பெறப்பணிந்(து) ஆனந்தச்*
*சத்தியில் இச்சைத் தகுவோன் சற்சீடனே !*

இத்திருப்பாடலில் இருந்து நாம் கிரகித்து உணர வேண்டிய உண்மை யாதெனின் மனவாசகவிளக்கத்தினால் எவரும் சத்சித் ஆனந்தம் பெறுதல் இயலாதென்பதாகும். அதைப் பூரணமாகப் பெறுதல் வேண்டின், விசேட தீக்கையின்போது சிவனுடைய கை காட்டுதலை இன்ன தெனக் கிரகித்து உணர்ந்து அதன் பிரகாரம் உரியசாதனை செய்து சற்சீடன் சிவானந்தம் அடைதல் வேண்டும். சிவபத்தியின் ஊற்றில் இருந்தே ஞானப் பேராறு உருவாகின்றதென்பதை நாம் உணர்ந்து செயற்படுதல் வேண்டும்.



அட்டாங்க தவயோகம் சைவசித்தாந்தம் குறிப்பிடும் வித்தியா தத்துவத்திலும் சிவயோகம் சிவதத்துவத்திலும் உள்ளதைக் காணலாம். அவற்றை வேறொருவிதமாக வித்தியா கலை என்றும், சிவக்கலை என்றும் சித்தாந்திகள் கூறுவர். மாணிக்கவாசக சுவாமிகள் சிவபெருமானிடம் நேரடியாகவே விசேடதீக்கை பெற்ற பின்பு சிவக்கலை வழி நின்று சிவயோக சாதனை செய்தே சிவஞான மலர்ச்சி பெற்றார். அதில் விளைந்த அருள் ஒளி மூலம் சிவபெருமானுடைய இயல்பான தன்மையைப் பூரணமாக உணர்ந்து அவர் அருளிய ஒரு சிறந்த திருவாசகத்தைத் தருகிறோம். ஓதி உணர்ந்து அதற்குத்தக ஒழுகுதல் சிவனடியார்களின் கடமையாகும்.

*இன்றெனக் கருளி இருள் கடிந் துள்ளத்து*
*எழுகின்ற ஞாயிறே போன்று*
*நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்*
*நீயலால் பிறிது மற்றின்மை*
*சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்*
*திருப்பெருந் துறையுறை சிவனே!*
*ஒன்றும் நீ யல்லை அன்றியொன் றில்லை*
*யாருன்னை அறியகிற் பாரே!*

நாம் சிவபெருமானுடைய ஒளிமயமான தன்மையை எவ்வாறு கண்டு தெளியலாம்? என்பதையும் அவனே தானேயாகி எப்படி அவனுடன் ஒன்று பட்டுப் பேரானந்தம் அடையலாம்? என்பதையும் இத்திருவாசகம் தெளிவு படுத்துகின்றது. இதன் முடிவில் அவர் நம்மை நோக்கி விடுக்கும் வினா நமக்கு விழிப்புணர்வைத் தருகிறது. சிவனுடைய தன்மையை உணர்ந்தறிவார் யாரும் இல்லையே என அவர் விசனப்படுவதாகப்புலப்படுகிறது. அதன் மறை பொருள், சிவயோக சாதனையைச்சரிவரச்செய்வார் அரிது என்பதாகும். அதனை வழுவற அனுட்டித்து வந்தால் நம்மிடம் ஓர் அற்புதமான ஆற்றல் உண்டாகும். அந்த ஆற்றலை மாணிக்கவாசகர் பெற்றுள்ளதாகப் பாடுகிறார். அது என்ன அற்புதமான ஆற்றல்? புரிகிறதா? ஆம். அதுதான் நினைப்பற நினைக்கும் ஆற்றல் ஆகும்.

அந்த ஆற்றலை அவர் எவ்வளவு அழுத்தம் திருத்தமாக "ஞாயிறே போன்று நின்ற நின்தன்மையை நினைப்பற நினைந்தேன்" எனக் குறிப்பிடுகிறார்! நினைப்பற நினைக்கும் ஆற்றலைச்சிறிதேனும் இன்றைய சைவசமய கல்வி, மாணவர்களிடம் வளர்ப்பதாகத் தெரியவில்லை. சிந்தனை ஆற்றலை மாணவர்களிடம் வளர்ப்பதிலேயே கவனம் செலுத்தப்படுகிறது. சிந்தனை ஆற்றலைப் பரீட்சிக்கும் நோக்கத்துடனேயே சமயபாட வினாத்தாள்கள் கொடுக்கப்படுகின்றன. சைவ ஆலயங்களில் வழிபடும் அடியார்கள் கூட நினைத்து நினைத்து பாகாய் உருகி மனஉணர்ச்சி வசப்பட்டு இறைவனை வழிபடுதலைக் காண்கிறோம்.

இவ்விடத்தில் நாம் மன உணர்ச்சி வேறு, தெய்வீக மெய் உணர்வுவேறு, என்பதை நன்கு தெளிந்து கொள்ளுதல் அவசியமாகும். மன உணர்ச்சியை விருத்தி செய்வதன் மூலம் ஒருபோதும் தெய்வீக மெய்யுணர்தலைப் பெறுதல் இயலாது. நினைப்பற நினைத்தல் தான் மெய்யுணர்தலாகும். அதுவே சிவஞானபோத மலர்ச்சியும் ஆகும் என்பதை வலிஉறுத்துகிறோம். அழுக்கினால் அழுக்கைப் போக்குதல் போல நினைப்பினால் நினைப்பை அறுக்கலாம் என்பது சைவசித்தாந்தத் தத்துவம் ஆகும். உலகில் சைவசமயத்தை விடவேறு எந்தக் சமயமும் இவ்வுண்மையைத் தெட்டத்தெளியக் கூறி வழிகாட்டுவதாக இல்லை. நினைப்பு அறுந்து போகும்படி நினைத்தல் எப்படி ஆகும்? என்பதைப் பெரும்பாலும் இன்றைய சிவனடியார்களே தெளிவுறாது மயங்குவதைக் காண்கிறோம். கற்பனைப் புராண இதிகாசங்களைப்படிப்பதிலும் ரசிப்பதிலும் போற்றுவதிலுமே அவர்கள் காலத்தைச் செலவிடுகின்றனர். கற்பனைக் காவியத்தலைவனாகிய கம்பன் பெயரில் மன்றங்கள் அமைந்து விழாக்கள் எடுத்துக்கொண்டாடுகின்றனர். மாணிக்கவாசகர் கூறியவாறு கற்பனை கடந்த சோதியாகிய சிவனை நினைப்பற நினைந்து அறிவார் யாரோ? என விசாரணை செய்கிறோம். இதிற்தவறு ஏது?

## *நினைப்பற நினைத்தல் எப்படி ஆகும்?*

நினைப்பற நினைத்தல் நம்மால் இயலாத காரியம் என்றும் நினைக்க, நினைக்கத் நமது நினைவுகள் மேலும் மேலும் விருத்தி ஆகின்றனவே அன்றி அவை அறுந்து போவதைக் காணோம் என அலுப்புற்று எடுத்த முயற்சியை பெரும்பாலானோர் கைவிடுகின்றனர். உளவியல் ரீதியில் முதலில் நினைவு என்பதனை யாது என விளங்கிக் கொள்ளுதல் முக்கியமாகும். நினைப்புப் பற்றிய உண்மைவிளக்கம் பெறுதல் அதனை அறுந்து போகும்படி தியானிப்பதற்குப் பேருதவியாகும். மனத்தினுடைய சிறந்த இயல்பு ஒன்று யாதெனின் மனவிருத்தி உண்டாகும் நினைவுகளைப்பற்றியசரியான உண்மை விளக்கம் பெறும் போது அது ஒய்ந்து மௌனமாகி விடுதலாகும். அவ்வாறு மௌனம் ஆகும் நிலையே நினைப்பு அறுந்து போகும் நிலையாகும்.

ஆகவே நாம் இப்பொழுது நினைவைப்பற்றி விசாரணை செய்து உண்மை விளக்கம் பெறுவோம். நினைவு என்பது யாது? அது எவ்வாறு உண்டாகிறது? என்பதை விசாரணை செய்வோம். நமது மனம் இருபகுதிகளைக் கொண்டதாகும். ஒன்று நினைவுப்புலம், மற்றது அயர்வுப்புலம், பின்னையது இறந்தகால எண்ணங்களைத்தன்னிடம் சுயமாகவே பதிவு செய்து வைத்திருக்கும் அற்புதமான ஏடு ஆகும். அவ்வாறு பதியப்பட்ட எண்ணங்கள் நினைவு முத்திரைகள் எனப்படும். நினைவுப் புலமானது அயர்வுப்புலத்தில் பதியப்பட்ட நினைவுமுத்திரைகளை ஞாபகமாக மீட்டு எடுக்கும் ஆற்றல் உடையதாகும். இந்த ஞாபகமே நினைவுகளாகப்



புலப்படுகின்றன. நினைவுகளின் தொகுப்பே அறிவு எனப்படுகிறது. அறிவுடைய நமது மனங்கூட நினைவுகளின் ஒரு தொகுப்புப் பொதிஅல்லாது வேறொன்றும் இல்லை எனச் சைவசித்தாந்திகள் விளக்கம் அளிக்கின்றனர். எனவே நினைவு, அறிவு, மனம் என்பன யாவும் ஆன்மாவானது மாயையைச்சார்ந்து செயற்படும் போது உருவாகும் திரோதான சக்தியின் புலப்பாடாகும்.

திரோதான சக்தியானது அணு சக்தியைப் போன்று தன்னுள்ளே இருவகையான எதிர்ப்புச் சக்திகளைக் கொண்டதாகும். அதன் செயற்பாட்டினாலேயே ஆன்மாக்கள் இருவினைக்கு உள்ளாகின்றன. அதனால் அறிவு அறியாமை என்னும் இருவகைக்கு ஆன்மாக்கள் உட்படுகின்றன. இவ்வுண்மைவிளக்கம்பெறாத சைவமக்கள் அறிவைப் பெருக்குவதனால் அறியாமை நீங்கும் என நம்பி ஏமாறுகின்றனர். சைவசித்தாந்த சாத்திரங்கள் அறிவு அறியாமை இரண்டையும் நீக்கினாற்றான் சிவஞானபோத மலர்ச்சியை ஆன்மாக்கள் பெறும் என நெறிப்படுத்துகின்றன. இவ்விடத்தில் ஆன்மாக்களின் இயல்பு சாந்ததன் வண்ணம் விளங்குதலாகும் என்பதை நாம் நன்கு உணர்தல் வேண்டும். மாயாமனதைச் சாரும் போது அவை அறிவு அறியாமை இரண்டையும் பெற்று விளங்குகின்றன. அச்சார்பு கெட்டு இறைவனைச்சாரும் போது மெய்யுணர்தலாகிய சிவஞானபோதம் மலரப்பெறுகின்றன.

இறைவழிபாட்டில் திருவடிவழிபாடு சிறந்ததாகும். தில்லை நடராஜனின் ஊன்றியதிருவடி திரோதான சக்தியையும், தூக்கிய திருவடிசுத்த சக்தியையும் உருவகமாகக் கொண்டனவாகும். அதன் உண்மைவிளக்கம் பெறாதமக்கள் புறக்காட்சியளிக்கும் காலடிகளே திருவடிகள் எனநம்பி அவற்றுக்குப்பூசைசெய்வதில் காலத்தைக் கழிக்கின்றனர். அதனால் இலவுகாத்த கிளிபோலச் சிவஞானபோத மலர்ச்சி பெறாது ஏமாறுகின்றனர். திரோதான சக்தியும், சுத்தசக்தியும் நம்மிடம் ஒரே வேளையில் ஒன்றாக ஏற்படமாட்டா. ஒன்றன் முடிபிலேதான்மற்றது ஆரம்பமாகும். அறிவு அறியாமையின் முடிபிலேதான் சிவஞானபோதம் ஆரம்பமாகி மலரும். மனச்சார்பினாலேதான்நாம் அறிவும் அறியாமையும் நல்வினை தீவினையும் பெற்றும்பிறவிப் பிணிக்கு ஆளாகிறோம். மனவிருத்திதான் அவற்றுக்கு மூலகாரணமாகும்.

நாம் மனதைப் பற்றி எவ்வளவு ஆய்ந்து உண்மை விளக்கம் பெறுகிறோமோ அவ்வளவுக்கு மனதைச் சாந்தியடையச்செய்யும் வாய்ப்பு உண்டு. மனத்தால் இறைவனையோ அல்லது ஆன்மாவையோ ஆய்ந்து உண்மைவிளக்கம் பெறுதல் அரிதாகும். அதனாலேயே மெய்கண்ட தேவனார்பொய்யான மனப் புலப்பாட்டைப் பொய் எனக் காண்பதே மெய் உணர்தல் பெறுவதற்கு உத்தம நெறியென உபதேசித்துள்ளார். எனவே மனத்தின் பொய்யான செயற்பாட்டின் உண்மை

நுட்பங்கள் சிலவற்றை மேலும் ஆராய்ந்துணர்வோம். சாத்திர தோத்திர முதல் நூல்களில் மனதைப் பற்றிய முழுமையான உண்மை விளக்க நுட்பங்கள் போதியளவு கொடுக்கப்பட்டுள்ளதாகப் புலப்படவில்லை. ஜிட்டுக் கிருஷ்ண மூர்த்தியும் இலண்டன் சர்வ கலாசாலைப் பௌதிக இயற்பேராசிரியர் கலாநிதி டேவிட் போம் என்பவரும் நடாத்திய நீண்ட கலந்துரையாடல் "காலத்தை முடிபு செய்தல்" – Ending of Time எனும் அற்புதமான நூலாக வெளிவந்துள்ளது. அதில் வெளியிடப் படுள்ள சில நுட்பமான மனத்தின் பொய்மையைப் பற்றியஉண்மை விளக்கத்தை இவண் தருகிறோம்.

"காலத்தை முடிபு செய்தல்" என்பதன் மறை பொருள் மன இயக்கத்தை முடிபு செய்தல் என்பதாகும். இங்கே பொய்யான உளவியற் காலத்துக்கும் சூரியனைக் கொண்டு கணிக்கப்படும் உண்மையான காலத்துக்கும் இடையே பலவேற்றுமைகள் இருப்பதைக் காணலாம். உளவியற் காலமும் மனமும் ஒன்றேயாகும். மனதிலே பதிய வைக்கப்பட்டுள்ள நினைவுகள் யாவும் இறந்த காலத்தனவாகும். ஆனால் மனவாசக விளக்கத்தை மனமானது நிகழ்காலத்தன வென்று திரித்துக் கட்டுகின்றது. மனவாசக விளக்கத்தை உண்மையென நம்புவோர்கானலை நீர் என்றும் நிழலை உண்மையெனவும் நம்புவோர் போலாவர். நமது மனமானது ஒரு சினிமாப் பட எறிவை யந்திரம் போன்றதாகும். அதனால் வெள்ளித் திரையில் எறியப்படும் படநிழல் இயக்கத்தை உண்மையானதென எவராவது நம்புவதில்லை. ஆனால் காவிய ஆசிரியர்கள் செய்யும் கற்பனைச் சிந்தனைகளை உண்மையென நம்பிப் பெரும்பான்மையான மக்கள் ஏமாறுவதைக் காண்கிறோம்.

உண்மை விளக்கம் என்பது ஒவ்வொருவரும் தனக்குத்தானே உள்ளொளியாக நின்று ஒரு புலப் பாடாகப் பெறுதல் வேண்டும். அது அறிவு விருத்தியினால் சம்பாதிக்கப்படுவதில்லை. விவேகப் படைப்பு மலர்ச்சியினாலேயே அது ஒரு புலப்பாடாகப் பெறப்படுவதாகும். அப்புலப்பாடு உளவியற் காலத்தை முடிபு செய்தல் மூலமே பெறப்படுதல் வேண்டும். விவேகப் படைப்புச் சக்தியை சைவ சித்தாந்திகள் சிவஞான போதம் என வர்ணிக்கின்றனர். மனவாசகம் கடந்த சிவபெருமானை மனவாசகத்தினால் கண்டு தரிசிக்க முடியாதென்பது சிவமெய்ஞ்ஞானிகளின் துணிபாகும். பெரிய பணம் படைத்த கோடீஸ்வரன் பரலோக இராட்சியம் செல்லுதல் அசாத்தியம் என்பது கிறீஸ்தவ விவிலிய நூல். சைவ சித்தாந்தமோ எனின் பெரும் சுட்டறிவுச் சம்பாத்தியம் பெற்ற பேரறிஞர் மெய்யுணர்தல் பெறுதல் தையல் ஊசித்தொளையின் ஊடாக ஒட்டகம் புகுதல் போன்றதாகும் என்கிறது. உளவியற் காலத்தை முடிபுசெய்தல் என்பதும் நினைப்பற நினைத்தலும் ஒன்றுதான் என்பதை நாம் கிரகித்து உணர்கிறோம். இவ்விளக்கம் நூற் கல்வி மூலம் சம்பாத்தியமாகப் பெறக்கூடியதன்று.



கிரகிக்கும் ஆற்றலையும் உண்மை விளக்கம் பெறும் திறமையையும் நாம் எவ்வாறு பெறலாம்? எனும் பாரிய பிரச்சனை எழுகின்றது. அவற்றை வினா விடைகள் மூலம் பெறலாம் என நினைத்தல் பேதைமையாகும். அவ்வாற்றலும் திறமையும் பெறுதற்கு வேண்டிய சாதனா முறைகளைத் தெளிந்து அதற்குத்தக உரிய அனுட்டானம் செய்யாததினாலேயே இன்று சைவ உலகில் சான்றோர் எனப்படும் மெய்ஞ்ஞானியர் சிலரேனும் தோன்றாது உள்ளனர். திருமுருகாற்றுப்படையைப் படைத்த நற்கீரர் போன்ற சான்றோர் பலர் பண்டைத் தமிழ்ச் சங்க காலத்தில் இருந்ததாக அறிகிறோம். நவீன விஞ்ஞானம் பெருகிவரும் இன்றைய தமிழ் நாட்டில் உத்தம சான்றோர்களுக்கு ஏன் இந்தப் பஞ்சம்? இப்பஞ்சம் சிவஞானபோத மலர்ச்சி சைவ மக்களிடையே ஏற்படாததால் நிலவுவதாகும்.

அதைப் போக்குவதற்கு ஒருவழி காட்டியாக இச்சிறு நூல் வெளிவருகிறது. இதை வெளியிடும் இரா மயில்வாகனம் J. P. அவர்களுக்கு அநேக நன்றி. இதனைப் படிப்பதனால் மட்டும் எவராலும் சிவஞானபோத மலர்ச்சி பெறுதல் இயலாதென்பதை நேயர்களுக்கு உணர்த்துகிறோம். சிவஞானம், சிவபோதம் ஆகிய சொற் றொடர்களுக்கு உரிய வழுவற்ற தமிழ் விளக்கம் அகராதிகளில் கொடுக்கப் பட்டுள்ளதாகத் தெரியவில்லை. சைவ சித்தாந்த அறிஞர்களும் அதில் அக்கறைகாட்டி ஆய்வு செய்து வேண்டிய விரிவான விளக்க உரை வழங்கி உள்ளதாகப் புலப்படவில்லை. இந்நிலையில் சைவ சமயத்தைப் பயில்வோர் ஞானம் எனப்படும் கல்வி அறிவும் போதம் எனப்படும். விவேகப்படைப்புச் சக்தியும் ஒன்றுதான் என மயங்குகின்றனர். அவ்வாறு மயங்கி நிற்கும் நமது சைவ சமுதாயத்தில் சிவபோத மலர்ச்சி நிகழ்தல் எவ்வாறு ஆகும்? போதத்துக்குரிய சுத்த தமிழ்ச் சொல் மெய்யுணர்தல் எனத் திருவள்ளுவர் தெளிவு படுத்துகிறார். அதை ஆங்கிலத்தில் Wisdom – விஸ்டம் என வழங்குவர். சம்பாத்தியமாகப் பெறப்படும் அறிவை Knowledge – நொலெஜ்– எனக் கூறுவர். திருவள்ளுவர் தாம் அருளிய தூய திருக்குறளில் கல்வி, கேள்வி, அறிவுடைமையைப் பொருட்பாலிலும், மெய்யுணர்தலை முதலாவதான அறத்துப்பாலிலும் வெவ்வேறாக அமைத்துள்ள காரணம் யாது? என்பது நமது ஆய்வுக்கு உரியதாகும்.

இந்த அடிப்படையிலே தான் மெய்கண்டதேவரும் தாம் அருளிய சிவஞான போதத்தில் உள்ள தடத்த இலக்கணத்தில் கல்வி கேள்வி அறிவுடைமையும், சொரூப இலக்கணத்தில் மெய்யுணர்தலாகிய சிவஞான போதத்தையும் அமைத்து வேறுபடுத்திக்காட்டி உள்ளார். சைவ சித்தாந்தம் விசேடமாக வலிஉறுத்தும் அறம் சிவதர்மம் எனப்படும். அறத்துக்கு இன்றியமையாத ஆதாரம் அளிப்பது மெய்யுணர்தலாகும். அறம் என்பது மனத்துக்காண் மாசு இல்லாமை என்பது வள்ளுவமாகும். மனம் மாசு அற்று விளங்கும் போதுதான் நாம் மாணிக்கவாசகர் அறிவுறுத்தியவாறு நினைப்பற நினைத்தல் இயலும். அவ்வாறு உளவியற்

சிந்தனைகளுக்கு முடிபு கண்டவர்களாற்றான் மெய்கண்டார் அருளியபடி இறைபணி நிற்றல் இயலும் இறைபணி நிற்றல் என்பது இறைவனுக்குச் சேவை செய்ய வேண்டியது அல்ல. இறைவனுக்கு மனித சேவை வேண்டியதில்லை. பூரணமாக இறைவனுடைய அருளை நினைப்பற நினைந்து பெற்றவர்களாற்றான் உண்மையான இறைபணி நிற்றல் இயலும். மனவிருத்தியுடன் செய்யப்படும் ஆலயபணி பசு புண்ணியம் ஆகுமே அன்றி அது ஒரு போதும் சிவபுண்ணியம் ஆகாது. பலன் கருதிச் செய்யப்படுவது பசு புண்ணியமாகும். எவ்வித பிரதிபலனும் கருதாது செய்யப்படும் சேவையே சிவ புண்ணியம் ஆகும்.

என்ன மனநிலையில் இருந்து இறைபணி செய்தல் வேண்டும் என்பதைச்சற்று ஆராய்வோம். மனவிருத்தி நிலையில் இருந்து பணியாற்றும் போது மனமானது ஒரு கூரிய கருவி போலச் செயற்படுகிறது. அது ஒருவரைக் கொலை செய்யவும் உதவும் இனிய கரும்பை வெட்டவும் உதவும். அது சைவ சன்மார்க்க சாதனை முறைப்படி நினைப்பற நினைக்கும் போது திருவருட் பாத்திரமான நிலை அடைகிறது. மனத்தில் நினைவுகள் நிறைந்திருக்கும் போது அங்கு திருவருள் பரிணமிப்பதற்கு இடம் இருக்காது. அதன் நினைவுகள் அறுந்துபோகும் போது அது ஒரு வெற்றுப் பாத்திரம் போலக் காலியாகிறது. அவ்வாறு காலியாகும் போது அதில் திருவருள் நிறைகிறது. அவ்வாறு திருவருள் நிறையப்பெற்ற மனோ நிலையில் இருந்து செய்யப்படும் தூய பணியே இறைபணி நிற்றலாகும். திருவருள் நிறைவு பெற்ற தன்பேறாகவே எழுத்தாளர் இதைப் பொற்குடத்துக்கு மெருக்கு ஊட்டுவது போல் விளக்க முற எழுத முடிகிறதென்பதை வாசக நேயர்கள் தெளிவுறுமாறு பணிவன்புடன் வேண்டுகிறார். சைவ உலகில் சான்றோர்க்கு ஏற்பட்டுள்ள பஞ்சம் இந்நூல் வாசக நேயர் மூலம் நீங்குதல் வேண்டும் என்பதே நமது பக்தி சிரத்தையுடன் கூடிய தாழ்மையான பிரார்த்தனையாகும்.

அதற்கு அனுசரணையாகச் சைவச்சித்தர்களின் தலைவரான திருமூல நாயனாரால் அருளப்பட்ட இரு திருமந்திர அருட்பாடல்களை இங்கு தருகிறோம். ஓதி உணர்ந்து செயற்படுங்கள்.

1. *பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்*
   *சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது*
   *ஓவியம் போல உணர்ந்தறி வாளர்க்கு*
   *நாவி அணைந்த நடுதறி யாமே.*

2. *மொட்டித் தெழுந்ததோர் மொட்டுண்டு மொட்டினைக்*
   *கட்டுவிட் டோடின் மலர்தலும் காணலாம்*
   *பற்றுவிட் டம்மனைப் பாழ்பட நோக்கினாற்*
   *கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண் ணாதே.*



பூக்கள் யாவற்றிலும் மிகவும் சிறந்தது தாமரையெனக் கருதப்படுகிறது. இச்சா சக்தியாகிய இலக்குமி தேவி செந்தாமரையிலும் ஞான சக்தியாகிய சரஸ்வதி தேவி வெண்தாமரையிலும் வீற்றிருப்பதாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. நமது இதயம் கூடத்தாமரை மொட்டுப்போல இருப்பதைக் காணலாம். மலர்ந்து விரியாத தாமரை மொட்டில் நறுமணம் வீசுவதில்லை. நமது இதய தாமரையிலும் மலர்ந்து விரியாத போது சிவமணம் வீசுவதில்லை. அதில் சிவமணம் மறைந்துள்ளது. நம்மிடம் சிவஞானபோத மண மலர்ச்சி ஏற்பட வழியில்லையே எனச் சிவபெருமானிடம் முறையிட வேண்டியதில்லை. அது எப்பவோ முடந்த காரியம் அதை நாம் ஒரு ஓவியப்படக் காட்சிபோல உணர்ந்து தெளிதல் வேண்டும். நாவி எனப்படும் பிராணி முதிர்ச்சி அடையும் போது அதனுள்ளேயே புனுகுவாசம் உண்டாகிறது என்பதை உணர்ந்து நாமும் நடுவுநிலை நின்று சிவசெப தியானம் செய்து பக்குவ முதிர்ச்சி அடைவோமாக.

நமது இதய தாமரை மொட்டு மலராது கட்டுண்டு இருத்தல் பந்த பாசத்தினாலாகும் அந்தக் கட்டு நீங்கினால் சுயமாகவே சிவமணமாகிய சிவஞான போத மலர்ச்சி நிச்சயமாக ஏற்படும். அதற்குப் பிறருடைய உதவி பெற வேண்டியதில்லை. சங்க காலத்தில் வாழ்ந்த சான்றோர்கள் செய்து சிறந்த சாதனையைச் சிவஞானபோதத்தில் உள்ள சொரூப இலக்கணம் விளக்குகிறது. அதில் உள்ள சாதனை இயலை மட்டும் இங்கு தருகிறோம். அதில் வரும் மூன்று குறுகிய சூத்திரங்களும் இதோ:–

*7ம் சூ. யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர் ஆதலின்*
*சத்தே அறியாது சத்திலது அறியா(து)*
*இருதிறன் அறிவுளது, இரண்டலா ஆன்மா.*

*8ம் சூ. ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதற் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவி*
*விட்டன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.*

*9ம் சூ. ஊனக்கண் பாசம் உணராப் பதியை*
*ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி*
*உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்*
*தண்ணிழலாம் பதிவிதி எண்ணுமஞ் செழுத்தே!*

கடிப்பதற்கு முடியாத கடினமான இரும்புக் கடலை போல இச்சிவஞான போதச் சூத்திரங்கள் படித்து உண்மை விளக்கம் பெறுவதற்கு மிகவும் கடினமாக இருப்பதைக் கண்டு நேயர்கள் அலுப்பு அடைதல் கூடும். இவற்றை மீண்டும் ஓதி

உணர முடியாது பயிலுவதை நிறுத்துதலும் கூடும். அதனால் நேயர்கள் விளங்கிக் கொள்ளும்படி நம்மால் இயன்றளவு அருட்கண் கொண்டு முயற்சித்து ஓர் அரும்பத உரையை அவற்றுக்குச் சுருக்கமாக இங்கே கொடுக்கிறோம்.

**7ம் சூ. உரை :-**

இச்சூத்திரத்தில் பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள் உண்மை முதலாவதாகக் கூறப்படுகிறது. பதி, பசு, பாசம் ஆகிய பதங்களுக்குப் பதிலாக, சத் – சதசத் – அசத் எனும் சொற்கள் உபயோகப்படுத்தப் பட்டுள்ளன. சத் எனப்படும் சிவத்தின் முன்பு அசத்தாகிய உயிரும், அறிவும் அற்ற பாசப் பொருள்கள் யாவும் சூனியமான பாழாகும். சூனியம் என்பதன் மெய்ப்பொருள் விளங்கித் தோன்றாதது ஆகும். அதை இல்பொருள் எனக் கொள்ளுதல் தவறாகும். எனவே பாசப் பொருளை உள்பொருள் என நாம் கொள்ளுதல் வேண்டும். அசத்தாகிய பொருள் சத்தாகிய பதிமுன் விளங்கித் தோன்றாது என்பதற்கு உதாரணம் சூரிய ஒளிக்கு முன்பு மின்மினியின் ஒளி விளக்கித் தோன்றுவதில்லை என்பதாகும். சத்தையும், அசத்தையும் அறியக் கூடிய பொருள் ஒன்றுண்டு. அதுதான் சத சத்தாகிய ஆன்மாவாகும். அதன் இயல்பு சார்ந்ததன் வண்ணம் விளங்குதலாகும். அது பாசத்தைச் சார்ந்து இருக்கும் போது சுட்டறிவு பெற்று விளங்கும் அதைவிட்டு அது பதியைச் சாரும் போது சிவஞான போத மலர்ச்சி பெற்று விளங்கும். எண் குணத்தானாக விளங்கும் பதி சுயாற்றலும் மெய்ஞ்ஞானமே சொரூபமாகவும் கொண்டு விளங்குபவராவர். எனவே அவர் சாதனை செய்து சிவஞான போதம் பெற வேண்டியதில்லை. அசத்தாகிய பாசம் சாதனை செய்யும் அறிவு இல்லாததாகும். அதனால் சாதனை எதுவும் செய்தல் இயலாது. ஆகவே சத சத்தாகிய ஆன்மாகவே சாதனை செய்யும் தன்கைமை உடையதாகும்.

இந்த அறிமுகத்துடன் மெய்கண்டதேவர் நம்மைச் சைவ சித்தாந்தச் சாதனை உலகுக்கு அழைத்துச் செல்லுதல் அற்புதமாக உள்ளது. இதனை அனுசரித்துச் சாதனை செய்யும் சிவனடியார்கள் ஓர் உண்மையை உணர்ந்து கொள்ளுதல் அவசியமாகும். இன்றேல் செய்யப்படும் சாதனை சித்தி பெறாது. அதாவது ஒரே நேரத்தில் ஆன்மாவால் பதியையும் பாசத்தையும் சார்ந்து இருக்க இயலாதென்பதாகும். கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை என்ற நிலையில் நாம் வாழுதல் கூடாது. பதியைச் சேர முற்படுவோர் பாசத்தின் சார்பை விட்டு நீங்குதல் வேண்டும். இதை வேறொரு விதமாக விளக்குவதாயின் சுட்டறிவை விட்டுத்தான் சிவஞானபோத மலர்ச்சி பெறுதல் வேண்டும். அறிவாளிகளுடைய சமய உபந்நியாசங்களைக் கேட்பதனாலும் புராண இதிகாச நூல்களைப் படிப்பதாலும் எவராலும் மெய்யுணர்தல் பெறுதல் முடியாது. ஆனால் அவற்றின் மூலம் சாதனை நெறிகளை உணர்ந்து அனுட்டித்து ஒவ்வொருவரும் சுயமாக மெய்யுணர்தல் பெறுதல் வேண்டும்.



**8ம் சூ. உரை :-**

ஆன்மாக்கள் சிவயோக தவசாரணையில் பக்குவம் அடையும்போது, பரம் பொருளாகிய முதல்வன் குருவடிவாய் நேரில் வந்து விசேட தீக்கையும் சரியான சாதனை உபதேசமும் கொடுத்து அருள்வான். அப்பொழுது குருவடிவில் தோன்றும் சிவன் எவ்வாறு வழி நடத்துவான் என்பதை இச்சூத்திரம் சிறப்பாகப் படம் பிடித்துக் காட்டுகிறது. அதாவது ஆன்மாவாகிய நீ ஐம்புலன் எனப்படும் வேடுவர்களால் கவரப்பட்டு அவர்களுடைய சமுதாயத்தில் வளர்க்கப்பட்டுள்ளாய் அதனால் உன்னையும் உனது உண்மையான தந்தையையும் யார்? என்பதை அறியாது மயங்கி உனது பெருந்தன்மையை உணராது மறந்து வாழ்கிறாய். ஆகவே ஐம்புல வேடரை விட்டு நீங்கி எனது புத்திரனாக வேற்றுமை இன்றி என்னுடன் ஒன்றுபட்டு இனிது வாழ்வாயாக!'' என்பதாகும். இவ்வுண்மையை உணர்ந்த ஆன்மா இறைவன் திருவடிகளை வழிபட்டு அவனை அணைந்து சத்சித் ஆனந்தம் அடையும்.

இவ்விடத்தில் நாம் திருவடி வழிபாட்டைப் பற்றிய மறைஞான உண்மை விளக்கம் பெறுதல் அவசியமாகும். ஆனந்த நடராஜனுடைய ஊன்றிய திருவடி திரோதான சக்தியாகவும், தூக்கிய திருவடி சுத்த சக்தியாகவும் உருவகப்படுத்தப்பட்டு உள்ளன. திரோதான சக்தி மூலம் நாம் ஞானமாகிய அறிவையும் சுத்த சக்திமூலம் போதம் எனப்படும் மெய்யுணர்தலையும் பெறலாம். உலகியலுக்கு ஞானமும், ஆன்ம பாசவிடுதலைக்குச் சிவபோதமும் வேண்டியனவாகும். சிவபோதமலர்ச்சி பெறுவதற்கு வேண்டிய சாதனைகளாவன:

1. இருவினை ஒப்பு
2. சிவோகபாவனை
3. பஞ்சாட்சர செப தியானம்

என்பனவாகும். இவற்றின் சாதனை நுட்பங்களைச் சமயரீதியாகப் பெறும்போது சமயகுருவிடம் இருந்து விசாரித்து தெளிந்து செயற்படுதல் உத்தமம் ஆகும். இச்சாதனைகளில் பக்குவம் அடையும் அடியார்களிடம் சிவகுரு நேரில்த்தோன்றி விசேடதீக்கை கொடுத்து மேலும் சாதனை நுட்பங்களை உபதேசித்து அருள்வார்.

**9ம் சூ. உரை :-**

ஊனக்கண் எனப்படுவது சுட்டறிவாகும். அது பாசத்தின்பாற்பட்டது. அதனால் இறைவனை உணர்தல் இயலாது. அவனுடைய சொரூபதரிசனத்தை நாம் பெறுதல் வேண்டுமாயின் நாம் சுட்டறிவை விட்டு வியாபகமான சிவபோதம் எனப்படும் மெய்ஞ்ஞானக்கண் திறக்கப்படுதல் வேண்டும். மெய்ஞ்ஞானக்கண் காட்சி சிவக்காட்சி ஆகும். சமயாதீத நிலை அடைந்த திருவள்ளுவர் அதனை மாசறு காட்சி எனக்குறிப்பிடுகிறார். சிவஞான போத மாபாடியம் (சிறப்புரை) எழுதிய சிவஞானமுனிவர் காட்சிகளை நான்காகப்பகுத்துள்ளார். அவையாவன :–

1. இந்திரியக் காட்சி
2. மானதக் காட்சி
3. ஆன்மீகக் காட்சி
4. சிவக் காட்சி

என்பனவாகும். இவற்றுள் சிவக்காட்சியானது மற்றும் மூன்று காட்சிகளையும் கடந்ததாகும். அவன் அருட் கண்கோண்டே அக்காட்சியைக் காணுதல் இயலும், ஆலயத்தில் அச்சகர் காட்டும் கற்பூரத்தீபத்தில் சிவதரிசனம் பெறமுடியும் எனக்கற்பனை செய்தல் பேதைமையாகும்.

கற்பூரதரிசனம் அடியார்களுக்கு நல்லதொரு மறைஞான எடுத்துக்காட்டாக உள்ளது. சிறந்த விளைவு கற்பூரம் எரிந்து முடியும் போது அதன் சாம்பரைக்கூடக் காணஇயலாது. அதுபோல மாணிக்கவாசகர் அருளிய நினைப்பற நினைப்பதில் வெற்றிகாணும் போது மனவாசனை என்னும் சாம்பர்கூடக் காணக்கிடையாது. பஞ்சாட்சர செபதியானத்தில் பக்குவ நிலை அடையும் போது மனவாசனையும் அற்றுப்போகும். அப்பொழுதுதான் சாதகர்களிடம் சிவஞானபோத மலர்ச்சியும், உண்மையான சிவசொரூப தரிசனமும் கிடைக்கும். நாம் ஒவ்வொருவரும் நமக்கு நாமே உள்ளொளியாக நின்று பெறும் தூயதரிசனமே சிவக்காட்சியாகும். புறக்காட்சி ஏதுவும் மாசறு காட்சிஆகமாட்டா.

பஞ்சாட்சர செபதியானத்தைச் சைவசாத்திர விதிமுறைப்படி ஒழுங்காக ஓதி அதிற்சித்திஎய்தும் போது திருவருள் மலர்ந்து பாசத்தை நீக்கி உதவும். மாசநீக்கமானது சிவனருளால் கானல்நீர் போலவிலகிவிடும். பாசநீக்கம் என்பது பந்த தொந்த பற்றுக்கள் யாவும் நம்மை விட்டு அகலுதலாகும்.

## அனுபவமும் அனுபூதியும் வெவ்வேறாகும்

அறிவுக்கும் மெய்யுணர்தலுக்கும் உள்ளவேறுபாடுபோன்றதே அனபவத்திற்கும் அனுபூதிக்கும் இடையே உள்ள வித்தியாசமாகும். சுட்டறிவுச் சம்பாத்தியத்தினாற் பெறப்படுவது அனுபவம் என்பதையும் மெய்யுணர்தல் மலர்ச்சியினால் சிவப்பிரகாசமாகவும், சுயப்பிரகாசமாகவும் பெறப்படுவதே அனுபூதி என்பதையும் வழுவறத் தெளிந்து கொள்ளுதல் அவசியமாகும். இத்தெளிவறிவு இல்லாத அறிஞர்களும் உரையாசிரியர்களும் அனுபவமே மெய்யுணர்தல் பெறுதலுக்கு அவசியமாகும் எனச் சமயப்பிரசாரம் செய்து வருவதைக் காண்கிறோம். பாடசாலை ஆசிரியர்கள்கூடச் சைவசமயப்பாடத்தில் கல்வி, கேள்வி, அறிவுடைமை, அனுபவம் ஆகியவற்றுக்கே முக்கியத்துவம் கொடுக்கின்றனர். அதனால் சைவசமுதாயத்தில் அனுபவசாலிகள் பெருகி வருவதையும், நாயன்மார்கள் போன்ற அனுபூதிமான்கள் அருகிவருவதையும் காணக்கூடியதாக உள்ளது. இன்று சான்றோர் பலர் வாழும் நாடு நமது சைவத்தமிழ் நாடு எனப் பெருமைப்படுவதற்கு இல்லை.



சைவத்தமிழ் மும்மணிகள் மூவர்களாகிய திருமூலர், திருவள்ளுவர், மாணிக்கவாசகர் ஆகியோர் ஒன்று பட்டுக், கற்றனவிட்டோம், கழல் பணிந்தோம் என்றும், சுட்டறிவுச்சார்பு கெட்டோம் என்றும், கல்வி எனும் பெருங்கடல் பிழைத்தோம் என்றும் கூறி உள்ளதைக்காண்கின்றோம். அவர்கள் அவ்வாறு கூறிஉள்ளதற்குக் காரணம் யாது? என்பதை நடுவு நிலை நின்று ஆய்ந்து தெளிவோர் குதிரைக் கொம்பாகும். இன்று நமது சமுதாயத்தில் அனுபவம் என்பதே பேச்சும் மூச்சுமாக உள்ளது. இந்நிலையில் அனுபூதிமான்கள் உருவாகுதல் எவ்வாறு ஆகும்?

இப்பொழுது நாம் அனுபவத்தைப்பற்றிய உண்மை விளக்கம் பெறுவோம். அது வேஅனுபூதிபெறுவதற்கு வழிகாட்டி ஊக்கமும் உற்சாகமும் அளிக்கும் என நிச்சயிக்கிறோம். சுட்டறிவின் முதிர்ச்சியில் விளைவதே அனுபவம் ஆகும். அனுபவம் என்பது, அறிபவன் என்றும் அறிவு என்றும் இருமைவகை உடையதாகும். இதைத் தெள்ளத்தெளிய உணர்ந்த திருவள்ளுவர், இருமை வகைதெரிந்து ஈண்டு ஒருமைப்பாட்டுடன் அறம் செய்யுமாறு வலியுறுத்துகிறார். அவ்வாறு அறம் செய்வதனால் நாம் யாவரும் ஒப்பற்ற பெருமையும் அனுபூதியும் பெறலாம். அறம் என்பது மனதில் இருவகை இல்லாது இடைவிடாது தொடர்ந்து செய்யப்படும் மாசில்லாத சிவபுண்ணியம் ஆகும். பரோபகாரமும், பலன்கருதாது செய்யப்படும் பணியும் அதன்சிறப்பாகும். அனுபவசாலிகளாற் செய்யப்படும்பணி பசு புண்ணியமாகும். அது இறைபணி நிற்றலாகாது. உலகியலில் அனுபவத்துக்கு முக்கியமான இடம் உண்டு. அதைமறுப்பதற்கில்லை, ஆனால் அனுபவத்தைப் பெருக்குவதனால் அனுபூதிபெறலாம் எனும் நம்பிக்கை பேதைமையாகும்.

இவ்விடத்தில் அனுபூதியைப்பற்றிய உண்மைவிளக்கம் கொடுத்தல் அவசியமாகும். திருமந்திரத்தில் மோனசமாதி எனும் தலைப்பில் 2940வது செய்யுளில் அனுபூதியைப்பற்றிய சிறு விளக்கம் வருகிறது. கேட்டல், சிந்தித்தல், தெளிதல் ஆகிய சாதனைமுறையில் கடைசியாகச் சைவசித்தாந்தம் காட்டும்நெறி சமாதி கூடுதலாகும். மாணிக்கவாசகர் சமாதி நிலையில் இருந்தே நினைப்பற நினைக்கும் ஆற்றலைப் பெற்றார். அவ்வாறே திருமூல நாயனாரும் மோன சமாதி நிலையில் தாம் பெற்ற அனுபூதி சிவனருளால் எவ்வாறு கிடைத்தது என்பதை விளக்கும் அற்புதமான திருமந்திரம் இதோ :-

*துரியங்கள் மூன்றும் கடந்தொளிர் சோதி*
*அரிய துரிய மதில்மீது மூன்றாய்*
*விரிவு குவிவு விழுங்கி உமிழ்ந்தே*
*உரையில் அநுபூ திகத்தினுள் ளானே !*

இச்செய்யுளின் உண்மைப் பொருள் யாதென்பதை ஆய்து உணர்வோம். துரியங்கள் மூன்றாவன மனதின், விழிப்பு, கனவு உறக்கம் ஆகிய நிலைகளாகும்.

இந்நிலைகளில் மனமானது விரிவதும், குவிவதும், சொற்பம் ஒய்வதும்மாக உள்ளது. இம்மூன்று நிலைகளிலும் நினைப்பற நினைக்கும் ஆற்றல் எவருக்கும் ஏற்படுவதில்லை. மனதின் சிந்தனைவிருத்தி அதன் மூன்று பரிமாணங்களாகிய துரிய நிலையிலும் நிகழ்கின்றது. சிந்தனை விருத்தி அற்றுப்போகுதல் வேண்டும் ஆயின் துரிய அதீதமான பூரண அமைதிநிலை ஏற்படுதல் வேண்டும். துரியாதீத நிலையே மோன சமாதி நிலையாகும். அதிலேதான் சிவஞான போதமலர்ச்சி உண்டாகிறது. மனதின் விரிவு குவிவு அற்ற நிலையே திருமூலர் மனவாசகம் கடந்த அநுபூதிகம் என விளக்குகிறார். அந்த அநுபூதிகத்திலேதான் மாசற்ற சிவக்காட்சி புலப்படும். அதை இன்னும் அழுத்தம் திருத்தமாக உரைப்பதாயின் சிவன் வெறும் பாழைப்பெற்ற வெறும்தனியாகிய தில்லை அம்பலத்தில் உள்ளான் எனலாம்.

## சைவசித்தாந்தம் ஒரு முடிந்த முடிபா?

**சத்** எனப்படும் சத்தியப் பொருளாகிய சிவன் காலம், இடம், காரணம் யாவற்றையும் கடந்து உள்ளான். ஆகையினால் அவனைக் கடவுள் எனச் சைவசித்தாந்தம் போற்றி வணங்குகிறது. சத்தியத்தின் சொரூபமான ஆனந்த நடராஜன் என்றும் ஓயாது இயங்கிய வண்ணம் உள்ளான். அதனால் அவனை இயவுள் எனநாம் வர்ணிக்கிறோம். உலகப் பொருள்கள்கூட யாவும் இயங்கிய வண்ணமே உள்ளன. சடப்பொருளாகிய இரும்பு கூடஇயங்கிய படியே உள்ளது. நமது ஊனக்கண் பார்வைக்கு அது இயங்காது இருப்பதுபோல் புலப்படுகிறது. உண்மையில் அதன் ஏகு மின்னாகிய எலத்திறோன்கள் ஓயாது இயங்கியவண்ணம் உள்ளன. பிடித்து வைத்த பிள்ளையார் கூட இயங்கிய வண்ணம் உள்ளார்.

சத்தியம் என்பது என்றும் உயிர்ப்புள்ளதாக இருக்கிறது. அதைச்சில சைவசித்தாந்த உரைஆசிரியர்கள் கொள்கைகளுக்கும், கோட்பாடுகளுக்கும் உட்படுத்தி, முடிந்த முடிபு என வாதாடுகின்றனர். சைவசமயநூல்களில் வெளியிடுகின்றனர். மேடைகளில் நின்று மார்புதட்டி முழங்குகின்றனர். முடிந்த முடிபு என்பதன் உண்மைவிளக்கம் இல்லாது ஓலம் இடுகின்றனர். அவர்கள் முடிபு எய்தும் போதுதான் பிணம் ஆவார்கள். பிணத்தை உயிர்ப்புள்ளதெனப் பறைசாற்றுவோர்பேதைகள் ஆவர், ஆம் ! உயிர்ப்புள்ள சைவ சித்தாந்தத்தை முடிந்த முடிபாகத் தீர்மானித்து வெறும் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் வெளியிட்டு அதை நிலை பெறச்செய்ய எத்தனிப்போரும் பேதையராவர்.

சைவசித்தந்தம் கூறும் முப்பொருள்களும் நிலை பேறு உடையனவாகும். அவை அழியாது என்றும் உள்ளனவாகும். நிலைபேறுடைய பொருள்கள் இயங்காது இருத்தல் வேண்டும் என்பது விதண்டாவாதம் ஆகும். அளவை



இலக்கணத்துக்கு முரண்பட்டதாகும். கொள்கைகளும் கோட்பாடுகளும் சத்தியத்தைப்போல நிலைபேறு உடையன அல்ல. ஆனந்த நடராஜனே என்றும் இயங்கும் போது, கொள்கைகள் மாறாது இருத்தல் இயலுமா? கொள்கைகளையும் கோட்பாடுகளையும் ஆங்கிலத்தில் (தியறீஸ்) theories என வழங்குவர். அவை மாற்றத்துக்கு உட்பட்டனவாகும். மாறுபடாத சத்காரியவாதத்தை Law of the Conservation of mass - energy - என விஞ்ஞானிகள் வர்ணிப்பர். கொள்கைகள் ஒருபோதும் சைவ நீதி நியதி ஆகமாட்டா. சத்காரியவாதம் எந்த ஒருகொள்கையும் அல்ல. அது ஒரு சைவ நீதி நியதியாகும். மாறக்கூடிய கொள்கைகளையும் கோட்பாடுகளையும் முடிந்த முடிவு என்றும் சைவ நீதி நியதி என்னும் விதண்டாவாதம் செய்தல் சைவ சமுதாயத்தில் விபரீத விளைவுகளை உருவாக்குதல் புலப்படுகிறது.

இத்தகைய விவாதிகளால் பிரேதபரிசோதனை செய்தல் இயலுமே அன்றிப் பிரேதத்துக்குப் புத்துயிர் கொடுக்க முடியாது, சிவஞான போதமலர்ச்சி அறிவுச் சம்பாத்தியமானது கொள்கை விருத்தியினாலோ அல்லது விவாதத்தினாலோ பெறக் கூடியதன்று. எனவே நாம் கொள்கைகளை வாதப் பிரதி வாதம் செய்து ஆன்மசக்தியை வீணில் விரயம் செய்தலை விட்டுச் சைவ தோத்திரமும் சாத்திரும் ஒன்றுபட்டுக் காட்டும் இருவினை, ஒப்பு சிவோகம் பாவனை பஞ்சாட்சர செபதியானம் முதலிய சாதனைகளைச் செய்து பாச நீக்கம் பெறுவோம். பாசநீக்கம் இல்லாத வெறும் கொள்கை விவாதம் உமிகுத்துதல் போன்றதாகும். பாசநீக்க சாதனை செய்வோர் சிவனிடம் சரணாகதி அடைந்து பக்திசிரத்தையுடன் கூடிய விழிப்புணர்வும், அவதானமும், கவனமும் உள்ளவர்களாகச் செயற்படுதல் வேண்டும் என்பதை வலியுறுத்தி நிற்கிறோம்.

## நாம் காணும் உண்மையான முடிவு

இதன் மெய்ப் பொருள் "சித்தாந்தம்" என்னும் பதத்தைப் பகுந்து ஆயும் போது சுலபமாகப் புலப்படுகிறது. இப்பதத்தைப் பகுக்கும் போது சித்த+அந்தம் என வருகிறது. சித்தம் என்பது உள்ளம் ஆகியமனமாகும். அந்தம் என்பது முடிவு ஆகும். ஆகவே மன இயக்கத்தினால் ஆக்கப்படும் சிந்தனைகளுக்கு ஒரு முடிவு காண்பதே சித்தாந்தமாகும். அது மாணிக்க வாசகர் அருளிய நினைப்பற நினைத்தல் மூலமே கைகூடும். அதைவிட்டு மனத்தினால் ஆக்கப்படும் கொள்கை விளக்கத்தினால் ஏற்படும் என நினைத்தல் அசாத்தியமாகும்.

சித்த விருத்திக்கு ஒரு முடிவு காணும் பொழுதே சிவஞானபோத மலர்ச்சி உள்ளிருந்து உண்டாகும். அதற்குவேண்டியசிறந்த சாதனை சிவஞானபோதப் பத்தாவது சூத்திரத்தில் தெளிவு படுத்தப்பட்டுள்ளதைப் படித்துப்பாருங்கள் :-

*அவனே தானே ஆகிய அந்நெறி*
*ஏகன் ஆகி இறைபணி நிற்க*
*மலமாயை தன்னொடு வல்வினை இன்றே.*

இச்சூத்திரம் பாசநீக்கம் பண்ணுவதனால் ஏற்படும் திருவருட் பேறாகிய சிவஞானபோத மலர்ச்சியை உணர்த்துகிறது. உயிர்கள் பந்த பாசமாகிய கட்டு அற்ற காலத்திலே, இறைவன் உயிர்களோடு அத்து வித மாகக் கலந்து நிற்பான். சிவனோடு ஒன்றித்து அவனே தான் ஆகும் நிலையே அத்துவிதமாகும். அதுவே அத்துவித சிவநெறியாகும். அந்நெறிக்குரிய சாதனை சிவோகம் பாவனையும் அதனாற் பெறப்படும் திருவருள் கொண்டு இறைபணி நிற்றலும் ஆகும்.

சிவோகம் பாவனை செய்வதற்கு ஆதாரமாக உள்ள திருமந்திரம் "**சோகம்**" ஆகும். இதைப் பகுக்கும்போது சோ+அகம் என வருகிறது. சோ என்பது அவனாகிய இறைவனையும் அகம் என்பது நானாகிய ஆன்மாவையும் குறிப்பனவாகும். இவ்விளக்கத்துடன் வேறு சிந்தனை இன்றி அல்லும் பகலும் சோகம் எனும் மந்திரத்தை உச்சரித்துத்தியானித்து வந்தால் நாம் அத்து விதம் அடைவோம். அந்நிலையில் ஆற்றப்படுவதே இறைபணியாகும், அதுவே பாசநீக்க சாதனையாகும்.

*சிவம் - சோகம் - சாந்தி*

*சைவ நன்மணி,*
*கலாநிதி,*
நா. செல்லப்பா



உ

அம்மை அப்பர்:

# திருக்களிற்றுப் படியா[illegible]டிவம்

**மெய்யியல்**
**பகுதி I**



**1. முன்னுரை:**

*உந்திகளிறு உயர்போதம் சித்தியார்*
*பிந்திருபா உண்மை பிரகாசம் – வந்தவருட்*
*பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு*
*உண்மை நெறி சங்கற்ப முற்று.*

திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞானசித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் ஆகிய பதினான்கு நூல்களும் தமிழில் வெளிவந்த சித்தாந்த சாத்திரங்கள் எனப்படும். மெய்கண்ட சாத்திரங்கள் என்ற பெயரும் வழங்கப்படுகிறது.

இவற்றுள் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் ஆகிய இரண்டும் சிவஞான போத ஆசிரியர் மெய்கண்டார் காலத்துக்கு முந்தியன என்பது பலபேரறிஞர்கள் தங்கள் ஆராய்ச்சியாற் கண்ட முடிபு.

திருவுந்தியார் (கி. பி. 1147 – 1148) திருவியலூர் உய்ய வந்த தேவநாயனாரால் இயற்றப்பட்டது. இவர் வடநாட்டிலிருந்து சேது ஸ்நானஞ் செய்ய வந்ததாகவும், செய்து திரும்புங்கால் சோழநாட்டிலே திருவியலூரிலே ஆளுடைய தேவநாயனார் என்பவர் இவரையணுகி உபதேசம் பெற்றதாகவும், அவருக்காகவே திருவுந்தியார் என்ற மெய்கண்ட சாத்திரத்தை இவர் அருளிச்செய்ததாகவும், பின்னர் வடநாட்டுக்குச் சென்று விட்டதாகவும் பழைய வரலாறு ஒன்று உண்டு.

எனினும், இந்நூலின்கணுள்ள பொருள்கள் பழைய தமிழ் முறையிலி ருத்தலாலும், இந்நூலின் நடையும், திருமந்திரத்தின் நடையை நினைவூட்டு வதினாலும், இந்நூலும் இவ்வாசிரியரும் தமிழ் நாட்டில் தோன்றியவர்களேயென்று ஊகிக்க இடமுண்டு.

இவ்வாசிரியரது மாணவராகிய மேற்கூறிய ஆளுடைய தேவநாயனார் தமது மாணவர் ஒருவருக்குத் தமது ஆசிரியர் பெயரைச் சூட்டி இந்நூலின் அனுபவப் பொருளை உபதேசித் தருளினார். அவரே திருக்களிற்றுப்படியார் என்னும் நூலை இயற்றிய (கி. பி. 1177–1178) திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனாராவர்.

அவர் தமது நூலை, தில்லைச் சிதம்பர நடராஜர் சந்நிதியில் அரங்கேற்ற முற்பட்டபோது தில்லை வாழ் அந்தணர்கள் அங்கீகரிக்கவில்லை. அவர் அந்நூலைத் தில்லையம்பலத்திலுள்ள பஞ்சாக்கரப் படியில் வைத்தார். உடனே அப்படியிற் செதுக்கப்பட்டிருந்த களிறு (யானை) தனது துதிக்கையை நீட்டி அந்நூலையெடுத்துத் தில்லைத் திருக்கூத்தன் திருவடியில் வைத்தது. இதனால் அந்நூல் திருக்களிற்றுப்படியார் என்ற காரணப்பெயர் பெற்றது.

திருக்களிற்றுப்படியாரில் நால்வர் அற்புதங்கள், மலநாயன்மார் செய்திகள், சேந்தனார் களி நிவேதனஞ் செய்தமை முதலிய குறிப்புக்கள் வருதலால் இந்நூல் சேந்தனார் காலம் பெரியபுராண காலம் இரண்டிற்கும் பிற்பட்டதென்றே யெண்ணலாம்.

இந்நூலின் தொண்ணூற்றாறாவது செய்யுளில்,

*ஆளுடையான் எத்தரமும் ஆளுடையானே யறியும்*
*தாளுடையான் தொண்டர் தலைக்காவல் – நாளும்*
*திருவியலூர் ஆளுஞ் சிவயோகி இன்றென்*
*வரு விசையை மாற்றினான் வந்து*

என்று இவ்வாசிரியர் கூறுவதால் ஆளுடைய தேவ நாயனார் என்பவர் மாணாக்கர் என்பதும் அவ்வாளுடைய நாயனார் திருவியலூரில் வசித்தார் என்பதும் விளங்க இருக்கிறது. மேலும் திருவுந்தியாரிலுள்ள சொற் றொடர்களை அப்படியே எடுத்து வைத்துப் பல செய்யுள்களில் விளக்குவதால் இவ்வாசிரியர் கருத்து, திருவுந்தியாரை விளக்கவேண்டும் என்பதும், அவ்வாசிரியரையே இவர் பரமகுருவாகக் கொண்டார் என்பதும் வெளிப்படை.

திரு ஆளுடைய தேவநாயனார் தாம் அருளிய திருவுந்தியாரை மூன்று அடிகள் கொண்ட நாற்பத்தைந்து செய்யுள்களில் ஆக்க, அதை விரித்துத் திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார் நான்கு அடிகள் கொண்ட நூறு வெண்பாச் செய்யுள்களாகத் திருக்களிற்றுப்படியாரை ஆக்கியுள்ளார்.

திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் ஆகிய இரு நூல்களுக்கும் உரைகண்டவர் திருவாவடுதுறை ஆதீனத்துத் தில்லைச்சிற்றம்பலவர் எனப் பெயரிய சிவப்பிரகாசர் என்பது பின்வரும் செய்யுளால் விளங்கவிருக்கிறது.



*சேடன் படிபுரக்கும் தென்கடவூர் உய்ய வந்தான்*
*பாடுங் களிற்றுப்படி தனக்கு – நீடிமைசேர்*
*தேடும் புகழ்ச் செஞ்சொற் சிவப்பிரகா சன்திருந்த*
*நாடியுரை நாடா நயந்து*

திருக்களிற்றுப்படியார் ஆசிரியர் அம்மை, அப்பர், குரு தரிசனத்தை வியந்து கூறுவது.

தன்னுடைய திருவடியானது என்னுடைய தலையிலும் இருதயத்திலும் பொருந்தும்படி திருமேனி கொண்டெழுந்தருளி வந்த கர்த்தாவான அம்மையப்பரை, பூமியின் கண்ணே யான் பிறந்திறந்து திரியாதபடி பரமானந்தத்தை அளித்தவனை, எப்பொழுதும் வாழ்த்துமளவில் எல்லைப் படாதாகையால், தன்னைவிட்டு நீங்காத ஞானசத்தியுடனே எவ்விடத்தும் வாழ்ந்திருக்க என்று சொல்லுவதல்லால் எப்படி வாழ்த்துவேன்.

*சிந்தையிலும் என்றன் சிரத்தினிலும் சேரும்வகை*
*வந்தவனை மண்ணிடை நாம் வாராமல் – தந்தவனை*
*மாதினுடன் எத்திறமும் வாழ்ந்திருக்க என்பதலால்*
*ஏது சொல்லி வாழ்த்துவேன் இன்று*

இக்கருத்தமையவே திருவுந்தியார் ஆசிரியரும் கூறுகின்றார்.

*சிந்தையி னுள்ளும் என் சென்னி யிலுஞ் சேர*
*வந்தவர் வாழ்வென் றுந்தீபற*
*மடவாளுடனேயென் றுந்தீபற*

இவ்விரு ஆசிரியர்களதும் கூற்றுக்களால் ஞானகுருவின் தரிசனமும் அவர் உபதேசமும் இறவாமற் பிறவாமல் வாழும் சச்சிதாநந்தப் பெருவாழ்வை நல்கு மென்பது புலனாகின்றது. இத்தோடு திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் சாதனை உபதேச நூல்கள் என்பதும் தெளிவாகின்றது. திருக்களிற்றுப்படியார் ஆசிரியர் முதற்கண் கூறும் செய்யுள்.

*அம்மையப்பரே உலகுக்கம் மையப்பர் என்றறிக*
*அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர் – அம்மையப்பர்*
*எல்லாவுலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்*
*அல்லார் போல்நிற்பர் அவர்*

கர்த்தாவினதும் அவரது சத்தியினதும் சர்வஞ்ஞத்துவத்தைக் கூறப்புகுந்த ஆசிரியர் அம்மையப்பரே யுலகுக்கம்மையப்பர் என்று தேற்றேகாரங் கொடுத்து முதற்கண் கூறத் தொடங்குகின்றார். எனவே, திருக்களிற்றுப்படியார் படிவம் என்ற விளக்கக் கட்டுரைக்கு அம்மை அப்பர் என்ற தலையங்கம் இடப்பட்டுள்ளது.

சாதனை உபதேச நெறியில் அமைந்தது திருக்களிற்றுப் படியார் நூல். அதன் வரலாறு தரப்பட்டுள்ளது. அதன்கணுள்ள பிரதான உபதேச நெறிகளைத் தொகுத்து திருக்களிற்றுப்படியார் படிவப்பொருள்கள் எனக் குறிப்பிட்டு விளக்கங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன.

சைவ சாதனங்களாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் சைவ நாற் பாதங்களுள் சரியை, கிரியை இரண்டையும் சிவ தருமம் (இறை பணி) என ஒன்றாக்கி சிவ தருமம், சிவயோகம், சிவஞான மெனமூன்று பாதசாதனை நெறிகளில் அடக்கி நூல் ஆசிரியர் உபதேசஞ் செய்கிறார். அவர் கூறும் மூன்று சாதனையையும் விளக்கவே கட்டுரை அமைந்தது.

பண்டைநற்றவத்தால் தோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும் தொண்டர்கட்கு மெய்யியல் நூல் தேவையன்று. மெய்யியல் தெரிந்து அம்மை அப்பரைத் தரிசித்து வீடு பேறடைய விரும்பும் சாதனையாளருக்கு இக்கட்டுரை நன்மை பயக்குமென எண்ணுகிறோம். குற்றம் நீக்கிக் குணம் கொள்க.

### அம்மை அப்பர் திருக்களிற்றுப்படியார் படிவப் பொருள்கள்:

# 2. அம்மையப்பரே யுலகுக்கு அம்மை அப்பர் என்றறிக

*திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார்*
*கூற்று – திருக்களிற்றுப் படியார்*

இறை உயிர் உலகு மூன்றும் அநாதியான உள்பொருள்கள். இம்முப் பொருள்களும் தோற்ற ஒடுக்கங்களையுடையன. இத் தோற்ற ஒடுக்கங்கள் முறையே தூல சூக்குமம் எனப்படும். இம்முறையை சற்காரிய வாதம் என்பர். சற்காரியவாதம் என்றுமுள்ளதன் செயற்பாடு.

இச்செயற்பாடு காரணமாக உயிர் தோற்ற ஒடுக்கமடைகிறது. கன்மத்துக்கீடாக உடம்புத் தோற்றத்திற்கு ஏற்புடைத்தாக, தந்தை தாயர் ஏற்படுகின்றனர். அவர்கள் உடம்புத் தாய் தந்தையர் ஆவார்கள். இவ்வாறு உயிர் மாறிமாறி உடம்பெங்கும் போதெல்லாம் வெவ்வேறு தாய், தந்தையர்கள் ஏற்படுவார்கள்.

உயிர்கள் அநாதியே மலகன்ம பந்தமுடையன. உடம்புகள் எடுக்குங் காலத்து அவ்வுடம்புகளோடு தொடர்புடைய தாய் தந்தையர்கள் அவ்வுயிர்களின் ஆக்கங் கருதி ஆவன செய்வர். உடம்போடு அத்தாய் தந்தையர்களின் ஆக்கமும் நின்றுவிடும். இவ்விதம் உயிர்களுக்குத் தோன்றும் தாய் தந்தையர்கள் பலர்.

உயிர்களுக்கு அநாதியே பந்தித்து நின்ற மலத்தைப் பக்குவப்படுத்தி பேரானந்தப் பெருவாழ்வு அளிக்கும் நிலையான தாய் தந்தையர் இறையும் இறைசத்தியும் ஆவர்.

*"தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தருஞ் சத்தி*
*பின்னமிலான் எங்கள் பிரான்...."*

*(உமாபதி – சிவாசாரியர் கூற்று – திருவருட்பயன்)*

தன்னிலைமை மன்னுயிர்கள் சார – தனது நிலையாகிய கர்த்தாவினுடைய திருவடித் தாமரையிலே நிலைபெற்ற ஆன்மாக்கள் பொருந்த; தரும் சத்தி – அவனுடைய சத்தியானது கொடுக்கும்; சத்தியென்றும் அவனென்றும் பின்னமோ, அப்பின்னமோ வெனின் – பின்னமிலான் – வேறாயிருக்கிறவனல்லன்; எங்கள் பிரான் – எங்கள் கடவுள் வேறாயிருக்கிறவனல்லன் எனவே சத்தியோடு சமவேதமாய் நிற்பன் என்பது.



சத்தி – அம்மை, பிரான் – அப்பர்

இவர்களே சகல உயிர்களுக்கும் என்றும் நீங்காத உண்மை அம்மை, அப்பராவர். இருவகை அம்மை. அப்பர் தொடர்பை சீர்காளித் திருக்குளத்தில் நீராடிய அப்பாவைக் காணாது குளத்துப்படியில் இருந்து சம்பந்தப் பிள்ளை அம்மையே அப்பா என்று அழ இறைவியும் இறைவனும் அம்மை அப்பராக வந்து பிள்ளைக்கு ஞானப்பால் கொடுத்த சம்பவத்திலிருந்து பிரத்தியட்சமாக அறிய இருக்கின்றது.

*"அந்தம் ஆதி என்மனார்"*

மெய்கண்டார் கூற்று – சிவஞானபோதம் மகா சங்காரத் தொழிலைச் செய்யும் கடவுளே உலகிற்கு முதற் கடவுள் என்பர்.

## 3. உயிர்களின் தன்மை கருதி அம்மை அப்பர் செய்யும் ஐந்தொழில்கள்.

(அ) *(1) சங்காரம் – அழித்தல்*
*(2) சிருஷ்டி – படைத்தல்*
*(3) திதி – காத்தல்*
*(4) திரோபவம் – மறைத்தல்*
*(5) அநுக்கிரகம் – அருளல்*

(1) சங்காரம் - அழித்தல்

இறைவன் சங்கார காலத்து மல சகிதரான மூன்று வகைப்பட்ட ஆன்மாக்களையும் மாயைகளினாலே ஒடுக்கி. இந்த மலமாயை கன்மங்களுடனே ஆன்மாக்களையும் சிவ சக்தியில் ஒடுக்கி. இந்தச் சத்தியையும் தம்மிடத்திலே கரந்து கொண்டு சிவமொன்று மேயாய் நிற்பர்.

(2) சிருஷ்டி - படைத்தல்

பின்பும் இந்தக் காலமானது சென்று சிருஷ்டிகாலமான அவசரத்திலே, தம்முடைய காருண்ணியத்தின் மிகுதியாலே இருந்த ஆன்மாக்களைப் பக்குவப்பட்ட கன்மமலத்தைக் கூட்டிப் புசிப்பிக்கவும் ஆணவ மலத்தைப் பக்குவமாக்கும் பொருட்டும் அந்தச் சத்தியை மீண்டும் பிரகாசிப்பித்து அந்தச் சத்தியிடத்திலே தாம் பொருந்தி அந்தச் சத்தியில் ஒடுங்கிக் கிடந்த மலசகிதரான ஆன்மாக்களையும் தோற்றுவித்து இவர்களுக்கு முன்பு விட்ட குறைகளான தனுகரணபுவன போகங்களையும் தோற்றுவிப்பார்.

(3) திதி - காத்தல்

தானும் முதல் கெடாமல் நின்று தோற்றுவிக்கப்பட்ட தனுகரணபுவன போகங்களை நிறுத்துதல் செய்து. ஆன்மாக்களைக் கன்மமலங்களுக்கீடாக நின்று புசிப்பிப்பர்.

(4) திரோபவம் - மறைத்தல்

மேற்கூறியவாறு செய்கின்ற உபகாரங்களையும் செய்கின்ற தம்மையும் தெரியாமல் ஆன்மாக்களை இருவினைப் பயன்களாகிய போக்கியப் பொருள்களில் அழுத்துவர்.

(5) அநுக்கிரகம் - அருளல்

மேற்கூறிய போந்த நான்கு கிருத்தியங்களினாலும் ஆன்மாக்களின் கன்மமும் துலையொத்து மலபாகமுண்டாய் இவர்கள் முந்திக்குப் பக்குவராவது எப்போதென்று அநவரதமும் திருவுள்ளத்தாலே அனுக்கிரகமே செய்து நிற்பர் இப்படிப்பட்ட ஐந்தொழில்களை தம்முடைய அருளாலே நடத்திப் போதராநின்ற காலங்களிலே பக்குவப்பட்ட ஆன்மாக்களையறிந்து அவர்கள் அளவுக்கான தீக்கைகளாலே இரட்சித்துக் கூட்டிக் கொள்வர்.

ஆகையால் இந்தச் சத்தியையுடைய சிவனே சர்வலோகங்களுக்கும் தாயுந் தந்தையும் – அம்மை அப்பர் என்று தெட்டத் தெளிவாய் அறிந்து கொள்க.

பக்குவப்பட்ட ஆன்மாக்களைத் தன்னுடைய அருளாலே நடத்திப் போதரா நின்ற காலங்களிலே அநுக்கிரகிக்கும் முறை எப்படி எனில்?

*"அம்மையப்பர் அப்பரிசே*
*வந்தளிப்பர் என்றறிக."*

*திருக்களிற்றுப் படியார்.*

அம்மையப்பர் பக்குவப்பட்ட ஆன்மாக்களை அறிந்து முன் கூறப்பட்டவாறே அநுக்கிரகித்து நிற்பர் என்க.

அநுக்கிரகிக்கும் முறை:–

*"சித்தாந்தத்தே சிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திச்*
*செனன மொன்றிலே சீவன் முத்தராக*
*வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாரி*
*மடுத்தானந்தம் பொழிந்து வரும் பிறப்பையறுத்து*
*முந்தாந்தப் பாத மலர்க்கீழ் வைப்பன் என்றும்"*

*அருணந்தி சிவாசாரியர் சிவஞான சித்தியார்.*





சித்தாந்த நெறியின் கண்ணே நிற்பவர்களுக்கு திருநோக்கம் செய்து அவர்கள் எடுத்த பிறப்பொன்றிலே அவர்களைச் சீவன் முத்தர்களாகச் செய்து ஆண்டுகொண்டு மலங்களை நீக்கி ஞான வெள்ளம் அருந்தவும் செய்து, ஞான வெள்ளம் பெருகவுஞ் செய்து, அவர்களுக்குப் பின்வரும் பிறப்பையும் நீக்கி, சிவசாலோகம், சிவசாமீப்பியம், சிவசாரூப்பியம், சிவசாயுச்சியம் என்று சொல்லபடும் நால்வகை முத்திகளுள் இறுதி முத்தியான சிவசாயுச்சிய பரமுத்தியைக் கொடுக்கும் தமது திருவடித் தாமரைக் கீழ் என்றும் இருக்க வைப்பன்.

எனவே சித்தாந்த நெறியே உயிர்களுக்குச் செந்நெறி ஏனைய சமய நெறிகளில் நிற்பவர்களுக்கு அவரவர் பக்குவ நிலைகளுக் கேற்ப அவரவர் வசிக்கும் தத்துவ முத்தி பதம் அநுக்கிரகித்தருளுவர்.

குருவடிவம்

*"அகளமாய் யாரும் அறிவரிது அப்பொருள்*
*சகளமாய் வந்தென்றுந் தீபற*
*தானாகத் தந்த தென்றுந் தீபற"*

*(உயவந்ததேவ நாயனார் கூற்று திருவுந்தியார்)*

அகளமாய் யாரும் அறிவரிதப் பொருள்:–

அநாதியே நிர்மலமாய்த் தன்னைக் கூடினவர்களாலும் கூடாதவர்களாலும் அறிதற்கரிய பரிபூரணமான அந்தப் பரம்பொருள்; என்றுந் தீபற – உமது அநாதி குற்றத்தை விளைக்கும் மும்மலங்களையும் கருவி கரணாதிகளையும் தேகாதிப் பிரபஞ்சங்களையும் என்றும் விட்டுப் போம்படி சகளமாய் வந்தது – ஒரு திருமேனி கொண்டு எழுந்தருளிவந்ததென்றும்; தானாகத்ததந்தது. இவ்விதம் எழுந்தருளி வந்த அப்பரம் பொருள் தீட்சையிலே சஞ்சிதத்தையும் ஒழித்து பிராரத்தம் புசிக்கச் செய்து அதில் அழுந்தாதபடியுங் காட்டி ஆகாமியம் ஏறாதபடி நிலையிலே நிறுத்தி மாயா படலத்தையும் உரித்து, மூலமாகிய நிகளத்தையும் விடுவித்து அருளாகிய அமிர்தத்தைப் புசிப்பித்து தன்னுடைய திருவடியிலே கூட்டி வேறற நிற்கத் தந்தது.

(ஆ.) அம்மையப்பர் மூவகை உயிர்களுக்கும் அநுக்கிரகிக்கும் முறை:–

உயிர்கள் மூவகையினர்.

(1) விஞ்ஞானகலர் – ஆணவம் ஒன்றேயுடையவர்கள் அறிவுக்கு அறிவாகி நின்று அநுக்கிரகிப்பார்.

(2) பிரளயாகலர் – ஆணவம், கன்மம் ஆகிய இரு மலங்களுமுடையவர் திருமேனி கொண்டு அநுக்கிரகிப்பார்.

(3) சகலர் – ஆணவம், கன்மம், மாயை மூன்று மலங்களுமுடையவர் பக்குவர்க்கு அவர்களைப் போன்ற திருமேனியுடனே எழுந்தருளி வந்து சத்திநிபாதத்துக்கீடாக நான்கு வகைப்பட்ட தீட்சைகளாலும், திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால், பாவனையால், மிகுநூலால், யோகப்பண்பால் என்கிற பிரமாணப் படியே அறுவகைப்பட்ட காருண்ணியத்தாலும் அனுக்கிரகிப்பர்.

## 4. அம்மையப்பர் திருமேனி கொள்வாராயின் அவரும் இந்த உலகங்களிலே உள்ளாரிலே ஒருவராகாரோவெனில்,

*"அப்புறத்தாரென்றறிக"*

*"அண்டங்கடந்த பொருள் அளவில்லாததோர் ஆனந்த வெள்ளப் பொருள்*
*பண்டுமின்றும் என்றுமுள்ள பொருளென்றே பல்லாண்டு கூறுதுமே.*

*சேந்தனார் கூற்று – திருப்பல்லாண்டு.*

அம்மையப்பர் அருளாலே திருமேனி கொண்டு அநுக்கிரகிப்பதை யொழிந்து அவருண்மையை ஒருவரும் அறியார். அறியுமிடத்து பிருதுவி முதல் நாத மீறானதத்துவங்களுக்கு அப்பாற்பட்டு நின்றே அறிய வேண்டும். அறியப்பட்ட சத்தியையுடைய சிவனும் இந்தச் சர்வலோகங்களுக்கும் அப்பாற்பட்டே இரா நிற்பர்.

## 5. அம்மையப்பர் எல்லாவுலகிற்கும் அற்புறத்தாராய் நிற்கும் முறை

அண்டமென்று சொல்லப்பட்ட சக்கரவாளகிரியும் மகாமேருவும், அண்டகோளகையும் அட்டகுலபர்வதங்களும், திக்கயங்களும் அட்ட நாகங்களும், சத்த சமுத்திரங்களும், சத்த மேகங்களும், பதினான்கு புவனங்களும், தேவர் அசுரர், சித்தர், வித்தியாதரர், கின்னரர், கிம்புருடர் மற்றுமுண்டான அண்டர் முதலாக உள்ளிட்ட பேதங்களும், சந்திராதித்தரும், பஞ்சபூதபரிணாமங்களும் பேய்த்தேர் போன்ற வியாபாரங்களும் பொதிந்த திரட்சி ஓர் அண்டமாக வளர்ந்த கோடியண்டங்கள் உள.

இவ்விதம் ஒவ்வோர் அண்டங்களைப் பத்து மடங்கு பொதிந்த சலமும் அந்தச் சலத்தைப்பத்து மடங்கு பொதிந்த அக்கினியும், இந்த அக்கினியைப் பத்துமடங்கு பொதிந்த வாயுவும், இந்த வாயுவைப் பத்து மடங்கு பொதித்த ஆகாசமும் இவை எல்லாவற்றையும் சேரப் பொதிந்த பேரண்டமும் உள.



இவை எல்லாவற்றிற்கும் மேம்பட்டு நிர்மலமாய் எல்லைப்படாத பரமாகாசமான பெருவெளியாய் நிற்பர்.

இவ்வாறு அம்மையப்பர் அண்டங்கடந்து நிற்கும் முறைமையினை அறிவீர்களாக.

## 6. அம்மை அப்பர் பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டே நிற்பாராகில் பிரபஞ்சமானது தானே நடந்ததோவெனில்?

*"அம்மையப்பர் இப்புறத்தும்"*
*அல்லார் போல் நிற்பரென்றறிக. (திருக்களிற்றுப் படியார்)*

அம்மையப்பர் தம்முடைய அருளாலே சர்வலோகங்களையும் நடத்தும் பொருட்டு தம்முடைய சொரூபம் தோன்றாதபடி அறுவகைப்பட்ட அத்துவாக்களே திருமேனியாகக் கொண்டு தத்தம் பிரச்சினையாலே பிரபஞ்சம் நடவாநிற்கத் தாம் அவை அவராய் அசைவின்றியே ஒரு பணியற நில்லா நிற்பர்.

*"அத்துவா மூர்த்தியாக அறைகுவ தென்னையெனின்*
*நித்தனாய் நிறைந்தவற்றின் நீங்கிடா நிலைமையானும்*
*சித்துடன் அசித்திற் கெல்லாம் கேட்டிதனாதலானும்*
*வைத்ததாம் அத்துவாவும் வடிவெனமறைகளெல்லாம்".*

*அருணந்தி சிவாசாரியர் கூற்று*
*சிவஞானசித்தியார்.*

முதல்வனுக்கு கருணைவடிவேயன்றி மாயைவடிவு இல்லையாயின். ஆகமங்களில் அத்துவாக்களாறும் முதல்வனுக்கு வடிவம் என்றதென்னை யெனின்

முதல்வன் நித்தனாயும் எல்லாவற்றிலும் கலந்து நிற்கின்ற நிலைமையினை உடையனாயும் சித்து அசித்து யாவற்றினதும் விருத்திக்கு காரணமாய் இருப்பவனாதலாலும் இவற்றை நிகழ்த்துவதற்கு மாயையுடன் கலந்த தனது திரோதான சத்தியோடு இயைவதாலும் அவ்வியல்பு பற்றி அத்துவா மூர்த்தி என்று வேதங்கள் உபசாரமாகக் கூறும். அத்துவா மூர்த்தங்கள் திரோதானசத்தி மூர்த்தங்களே.

அத்துவாக்கள் :-

1. மந்திரங்கள் 2. பதங்கள் 3. வன்னங்கள் 4. புவனங்கள் 5. தத்துவங்கள் 6. கலைகள் இறைவனுக்குரிய அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூவகைத்தடத்தத் திரமேனிகளும் அத்துவாக்களுக்குட்பட்ட திருமேனிகளே.

அம்மையப்பர் இப்புறுத்தும் அல்லன்போல் நிற்கும் முறைமையினை அறிவீர்களாக.

## 7. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்

ஔவை கூற்று – கொன்றை வேந்தன். எம்மைப் பெற்றதாய் தந்தையர் முன்னர் அறியப்பட்ட கண்கண்ட தெய்வங்களாவர். இவர்களை அன்போடு வழிபட்டுவர வேண்டும். அந்த வழிபாட்டு நெறியில் நின்று உயிர்கள் எல்லாவற்றிற்கும் அனவரதமும் ஏக அம்மை அப்பராய் விளங்கும் இறைவனை மன மொழி மெய்களால் அன்போடு வழிபட வேண்டும். அவர் சர்வவியாபகர் ஊனக்கண்களால் காண முடியாதவர்.

எனவே அவரைக்கண்டு வழிபடுவதற்கு அத்துவா மூர்த்தங்கள் கொண்டு எழுந்தருளி இருக்கின்றார். அத்துவா மூர்த்தங்களை வழிபட்டு வரும் முதிர்ரினாலே தன்பணி தீத்து இருவினையொப்பு கைகூடும். அவ்வமயம்,

*"மன்னுமருட்குருவாகிவந்து மலமகற்றித்*
*தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்"*

வேறறாப் பேரின்பகூடல் – உலகுக்கு அம்மையப்பராயிருந்து அளிக்கும் பேரின்பப் பேறு இப்பேறு.

*"எங்ஙனிருந்த தென்றெவ் வண்ணஞ் சொல்லுகேன்*
*அங்க னிருந்த தென்றுந்தீபற*
*அறிய மறிவதென் றுந் தீபற"*

*திருவுந்தியார்.*

*"அம்மையப்பரே உலகுக் கம்மையப்பர் என்றறிக*
*அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர் அம்மையப்பர்*
*எல்லா உலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்*
*அல்லார் போல் நிற்பர் அவர்".*

*திருக்களிற்றுப் படியார்.*

*திருச்சிற்றம்பலம்.*



# 8. அம்மையப்பரைத் தரிசித்துக் கூடும் முறைமை

**அ**ம்மையப்பரே யுலகுக்கம்மையப்பர் என்றதனாலே சர்வ உலக ஏக தந்தையும், தாயும், கர்த்தாவும், சத்தியும் மூன்று வகைப்பட்ட ஆன்மாக்களும், மலங்களும், பஞ்சகிருத்தியங்களும், மூன்று வகைப்பட்ட ஆசாரிய மூர்த்தங்களும், தீட்சாக் கிரமங்களும், பதமுத்திகளும், சாயுச்சியமும், கருத்தா ஏகதேசியுமல்லர் பரி பூரணருமல்லர் பூவிற்கந்தம் போலப் பக்குவங்களிலே பிரகாசிப்பவர் என்னும் முறைமையும், அவர் கிருபாமூர்த்தி என்னும் முறைமையும் சர்வத்தையும் கூடிநிற்பினும் ஒன்றோடும் தோய்விலர் என்னும் முறைமையும் அறிவிக்கப்பட்டன.

*"சித்தாந்தே சிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்தி*
*முத்தாந்தப் பதமலர்க்கீழ் வைப்பன் என்றும்".*

*என்பது சிவஞானசித்தியார்.*

*சித்தாந்தம் – சிவஞானம், ஏனை ஞானங்கள்:– விந்துஞானம் (சுத்த மாயைக்குட்பட்ட ஞானங்கள்) முடிந்த முடிபு சிவஞானம்*

*"ஓவிட விந்து ஞானம் உதிப்பதோர் ஞானமுண்டேல்*
*சேவுயர் கொடியினான் தன்சேவடி சேரலாமே".*

*சிவஞானசித்தியார்.*

சித்தாந்த நெறிப் பக்குவம், அம்மையப்பரை ஞானாசாரியராகக் கண்டு கூடும் முறைமையைத் திருக்களிற்றுப் படியார்.

*"தம்மில் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத்*
*தம்மில் தலைப்படுதல் தாமுணரில் – தம்மில்*
*நிலைப்படுவர் ஓரிருவர் நீக்கி நிலை யாக்கித*
*தலைப்படுவர் தாமத்தலை"* *என்று கூறுகின்றது.*

தம்மில் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டு, தத்தமிடங்களில் பக்குவமறிந்து எழுந்தருளிவந்த ஞானாசாரியரிடத்திலே தாமுங்கூடி வழிபட்டு, தம்மில் தலைப்படுதல் தாமுணரில் – ஆசாரியர் அனுக்கிரகத்தினாலே முன்பு தாமாக அபிமானம் செய்திருந்த தேகாதிகளைத் தமக்கு வேறென்றறிந்து நீங்கித் தம்மையும் தரிசித்துத் திருமேனி கொண்டெழுந்தருளி வந்துணர்த்தின தம்பிரானார் தம்மிடத்திலே நின்று பிரகாசிக்கிற முறைமையையும் தாம் அறிந்து தம்மில தலைப்படுவர் ஓரிருவர் – தம்மிடத்திலே அநாதியே தோன்றாமல் நின்று, நடத்தி பக்குவமாக்கி, அந்தப்

பக்குவத்திலே இப்படித் தரிசிப்பித்த இந்த ஞானஞேயங்களாகிய சத்தி சிவமான (அம்மை அப்பரை) இரண்டு முதலும் தோன்றா நிற்கும் நீக்கி அத்தலைதாம் நிலையாகத் தலைப்படுவர். இப்படித் தரிசிக்கின்றோம் என்ற நம்முடைய சுட்டான போதத்தைவிட்டு அந்த ஞானத்திலே பொருந்தி நிற்கில் அப்பொழுதே அந்த ஞேய சொருபமாகியே சிவமுங்கூடி அந்த சிவமாகியே பிரகாசியா நிற்பர்.

தரிசனத்தின் போது நிகழ்வு மூன்று

| | | | |
|---|---|---|---|
| (1) | காண்பான் | ஆன்மா | ஞாதுரு |
| (2) | காட்சி | (அம்மை) சத்தி | ஞானம் |
| (3) | காட்சிப் பொருள் | (அப்பர்) சிவம் | ஞேயம் |

ஞாதுரு ஞான ஞேயங்கள் தோன்றாமல் அந்த ஞேயத்தில் மிகவும் பொருந்தி, தோன்றாத இன்பத்தை என்னென்று சொல்வது ஞாதுரு ஞான ஞேயம் மூன்றும் வேறுபாடின்றி ஒன்றாய்க் காணும்நிலை திரிபுடி, சகிதம், சீவன் முத்தர்கள், திரிபுடிக் காட்சியாளர்கள்.

*"மூன்றாய தன்மைவர் தம்மின் மிகமுயங்கித்*
*தோன்றாத இன்பமதென் சொல்"* –

*திருவருட்பயன்.*

"குறியொடுதாம் அழியும் நெறியதனால்
சிவமேயாய் நின்றிடுவர்" – என்று சிவஞானசித்தியார் கூறும்.
தாம் – ஆன்மா – குறி, ஞானம், அறியும் நெறி – ஞேயம்
தாள் + தலையென்று நின்றவிடத்து.

ள், என்றளகர மெய்யும் த் என்ற தகர மெய்யும் கெடாமல் தாடலை என்றே சீவித்து ஒன்றாய் நின்ற தன்மை போல "ஆன்மாவும் சிவமும்" வேறறக்கலந்து இன்பமாய் நின்றதை ஒன்றெனக் கொள் இரு பொருளின் ஒரு தன்மைத் தா தான்மியம்.

*"தாடலை போற் கூடியவை தான் நிகழா வேற்றின்பக்*
*கூடலை நீ ஏகமெனக் கொள்"*

## 9. அம்மையப்பரது ஞான சாரிய தரிசனம் பெற்றவர்கள் பூரணர்: அம்மையப்பரது ஞான சாரிய தரிசனத்தைப் பெற்றவர்கள் கண்டதைக் கொண்டு கருமம் முடித்த பரிபூரணர்கள்.

தரிசனம் பெற்றவர்கள்:

| | | | |
|---|---|---|---|
| அ. | கண்டது | ஆ. | கொண்டது |
| இ. | கருமம் முடிந்தது | ஈ. | பரிபூரணரானது |



### அ. கண்டது

அநாதியே பூரணமாய்த் தோன்றாமல் நின்ற சிவன் (அம்மையப்பர்) காருண்யத்தினாலே நம்மைப் போல எழுந்தருளி வந்த ஞானா சாரிய மூர்த்தியையும், அவனாலே இது, நான், அன்றாயிருந்த தென்று கண்ட தன்னுடைய உடம்பையும் இந்த உடம்பை வேறென்றறிவிக்க அறிந்ததனையும் ஆகப்பதி, பாச, பசு என்று சொல்லப்பட்ட மூன்று பொருள்களையும் காணல்.

### ஆ. கொண்டது

ஞானா சாரிய சொரூபத்தை அண்டத்துக்குள்ளே என்றும் புறம்பேயென்றும் கொள்ளாமல் அந்த ஞான தத்துவாதீதமாக இருக்கிற முறைமையையும் அந்தத் தத்துவங்களுக்கு தத்துவமாயிருக்கின்ற முறைமையையும் ஆன்மாக்களுக்கு ஆன்மாவாயிருக்கும் முறைமையையும் உணர்ந்து கொள்ளல்.

### இ. கருமம் முடிந்தது

கன்மமானது சஞ்சிதமென்றும், பிராரத்தமென்றும், ஆகாமியம் என்றும் மூன்று வகைப்பட்டு இருக்கையால் இவற்றை ஞானசாரியார் செய்யும் தீக்கையிலே அத்துவ சோதனை பண்ணும் தீக்கையினாலே சஞ்சிதமான கன்மத்தையும் தேகமுள்ளளவும் பிராரத்த முண்டாகையால் இந்தத் தேகத்துடனே கூடபிராரத்தமான கன்மத்தையும் அவன் அருளிச் செய்த உபாயத்திலே தான் நின்று ஆகாமிய கன்மம் ஏறாமலும் முடித்தல்.

### ஈ. பரிபூரணரானது

தாமும் இந்தப் பரிபூரணமான ஞானமேபாய் நிற்கவே அவர்களுக்கு இந்த ஞானத்தின் ஐக்கியத்தினாலே இப்படியானோம் என்ற கருத்து மழியாமலிருக்கும் அப்பொழுதே அவர்கள் சிவமேயாய் நிற்பார்கள். அவர்களே இப்பொழுது எல்லாப் பொருள்களையும் உணர்ந்த பரிபூரணர்கள்.

*"கண்டதைக் கொண்டு கருமம் முடித்தவரே*
*அண்டத்தின் அப்புறத்த தென்னாதே – அண்டத்தின்*
*அப்புறமும் இப்புறமும் ஆரறிவு சென்றறியும்*
*எப்புறமும் கண்டவர்கள் இன்று"* *(திருக்களிற்றுப் படியார்.)*

கண்டதைக் கொண்டு கருமம் முடித்தவர்களுக்கு பிறப்பில்லை.

*"கண்டதைக் கொண்டு கருமம் முடித்தவர்"*
*பிண்டத்தில் வாரா ரென்றுந்தீபற*
*பிறப்பில்லை யென்றுந் தீபற"* *(திருவுந்தியார்.)*

அம்மையப்பர் தரிசனம் கண்டவர்களைப் பின்பற்றி அம்மையப்பர் தரிசனம் கண்டு கொண்டு கருமம் முடித்து பரிபூரணராக சாதனை செய்வாம்.

# 10. அம்மை அப்பர் தரிசனம் அடைவிக்கும் சைவ நன்மார்க்கங்கள்

*"சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம்*
*தாதமார்க்கம் மென்றுஞ் சங்கரனையடையும்*
*நன்மார்க்க நால்வகைத்தாம் ஞானயோக*
*நற்கிரியை சரியையென நவிற்றுவதுஞ்செய்வர்*
*சன்மார்க்க முத்திகள் சாலோக்கிய சாமீப்பிய*
*சாரூப்பிய சாயுச்சிய மென்று சதுர்விதமாம்*
*முன்மார்க்க ஞானத்தால் எய்துமுத்தி*
*முடிபென்பர் மூன்றினுக்கும் முத்தியதமென்பர்"*
*– சிவஞான சித்தியார்.*

ஆன்மாக்களுக்குச் சுகத்தைச் செய்பவராதலால் சங்கரன் என்னும் நாமத்தைப் பூண்ட அம்மை அப்பர் தரிசனத்தை அடைவிக்கும் சைவ நன்மார்க்கங்கள் :–

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | தாதமார்க்கம் | – | சரியை, சிவலோகம் | – | பதமுத்தி |
| (2) | சற்புத்திர மார்க்கம் | – | கிரியை, சிவசாமீப்பியம் | – | பதமுத்தி |
| (3) | சகமார்க்கம் | – | யோகம், சிவசாரூப்பியம் | – | பதமுத்தி |
| (4) | சன்மார்க்கம் | – | ஞானம், சிவசாயுச்சியம் | – | பதமுத்தி |

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று சொல்லப்படுகின்ற நால்வகை மார்க்கங்களும், உண்மை, உபாயம் என இருவேறு வகைப்பட்டு உண்மைச்சரியை, கிரியை, யோகம், ஞானமெனவும், உபாயச்சரியை, கிரியை, யோகம், ஞானமெனவும் அமையும்.

உண்மைமார்க்கம் பரபோகத்தையும், உபாயமார்க்கம் உலக போகத்தையும் அடைவிக்கும். உண்மைமார்க்கம் சிவப்பணி. உபாயமார்க்கம் தன்பணி, எனவே, இங்கு சைவநன்மார்க்கங்கள் என்றது உண்மை மார்க்கத்தையே. அதுவே, அம்மை அப்பரைத்தரிசிக்கும் நன்மார்க்கம்.

ஆகமங்கள், அதன் சாரமாயமைந்த திருமுறைகள், சித்தாந்த சாத்திரங்கள் யாவும் சைவநன்மார்க்கங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று நால்வகைப்படுத்திக் கூறுகின்றன.



# 11. திருக்களிற்றுப்படியார் ஆசிரியர் கொண்ட மூவகைச் சைவ நன்மார்க்கங்கள்.

பதின்னான்கு சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றான திருக்களிற்றுப்படியார், நான்கு சைவமார்க்கங்களில் சரியையும் கிரியையும் ஒன்றாக்கிச் சிவதன்மமென்றும், யோகத்தைச் சிவயோகம் என்றும், ஞானத்தைச் சிவஞானம் என்றும் மூன்று மார்க்கங்களாகக் கூறுகின்றது.

*"நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்*
*நல்லசிவ ஞானத்தால் நானறிய – வல்லதனால்*
*ஆரேனும் அன்புசெய்யின் அங்கே தலைப்படுங்காண்*
*ஆரேனுங் காணாத அரன்"* *– திருக்களிற்றுப் படியார்.*

சிவனை நோக்கிய சைவசித்தாந்தத்தலே, சிவதன்மத்தாலேயாதல், சிவயோகத்தாலேயாதல், சிவஞானத்தாலேயாதல் அம்மை அப்பரைக் கூடும்படி சாதிக்குமவர், தங்களாலே செய்யப்பட்டதாகக் கருதாதே, அம்மை அப்பரின் ஏவல் என்றேயறிந்து, தம்முடையசுகத்தைவிட்டு, அவர்கைப்பட்டு வரவல்லவர் ஆவர். அவர்களே அந்த அம்மை அப்பர்மேலே மிக்க அன்பைவைக்கில் பிரம விஷ்ணுக்களாலும், இன்றளவுங் காணப்படாத அம்மையப்பர் தரிசனமாவார்.

### I சிவதன்மம் - சிவதருமம் - இறைபணி

*"அறஞ்செய்யவிரும்பு"*

தருமஞ்செய்ய விரும்புங்களென்று மக்களுக்குக் கட்டளையிடுகிறார் ஔவை மூதாட்டியார். தருமமே செய்யத்தக்கது, அது மக்களை உய்வடையச் செய்வது. தருமஞ் செய்வோரின் கருத்து வேறுபாட்டுவகையால் அது இரு வகைப்படும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1). | பசு தருமம் | – | பசுபுண்ணியம் | – | தன்பணி |
| (2). | சிவதருமம் | – | சிவபுண்ணியம் | – | சிவப்பணி |

பசு புண்ணியம் இகவாழ்வைத்தருவது. சிவபுண்ணியம் பரவாழ்வைத் தருவது. சிவதருமமே சைவநன்மார்க்கமாதலால் அது செய்யத்தக்கது.

சிவதருமம், சிவஅறம், சிவபுண்ணியம், சிவப்பணி, இறைபணி, சைவப்பணி, சைவநீதி என்பன ஒருகருத்துடையன.

☆ சைவம் சிவத்துடன் சம்பந்தமாவது
☆ சைவம் தனையறிந்தே சிவம்சாருதல்
☆ சைவம் சிவாநந்தம்
☆ சைவம் சாயுச்சியம்

என்பன திருமந்திரப் பொன் மொழிகள்.

பெரியபுராணத்திற் கூறப்படும் மெய்யடியார்கள் சரியை, கிரியை நெறிகளில் நின்று சிவப்பணி – சிவதருமம் ஆற்றியவர்கள் தன்பணி நீத்தவர்கள் அவர்கள்.

- ☆ இறைபணியாளர்கள்
- ☆ பாரம் ஈசன் பணியெனக்கொண்டவர்கள்
- ☆ ஓடுஞ்செம்பொனும் ஒக்கவே நோக்குபவர்கள்
- ☆ பூசுநீறுபோல் உள்ளும் புனிதர்கள்
- ☆ மாதோர் பாகர் மலர்த்தாள் மறவாதவர்கள்
- ☆ செயற்கரிய செய்த தொண்டர்கள்

செயற்கரிய செயல்களைச் செய்த தொண்டர்களாகிய பெரியார்களைப் பற்றிக் கூறும் நூல் பெரியபுராணம் – தொண்டர்புராணம்

பெரியபுராண மெய்யடியார்கள் சரியை, கிரியை மார்க்கங்களில் நின்று சிவதருமம். சிவப்பணியாற்றி பக்தியோகஞ் செய்து ஞானங்களைப் பெற்று அம்மை அப்பர் தரிசனம் நேரிற் கண்டவர்கள். இதுபற்றியே திருக்களிற்றுப் படியார் ஆசிரியரும், சைவநாற்பதங்களிலுள்ள சரியை கிரியை இரண்டினையும் ஒன்றாக்கிச் சிவதருமம் என்றும், யோகத்தைச் சிவயோகம் என்றும், ஞானத்தைச் சிவஞானம் என்றும் மூன்று பாதங்களாகக் கூறினர் போலும்.

உமையம்மையார் காஞ்சிப்பதியிலிருந்து அறநெறிகளை வளர்த்துக் காட்டியிருக்கின்றார் பெரியபுராண நாயன்மார் ஒரேவிதமான சரியை, கிரியை சிவதருமங்களைச் செய்யவில்லை. நினைத்தற்கரிய வன்முறைச் சிவ தருமங்களையும் செய்திருக்கிறார்கள். இதனால்சிவதருமம் மெல்வினையென்றும், வல்வினை என்றும் திருக்களிற்றுப் படியாரில் இருவகைப்படுத்திச் சிவதருமம் கூறப்பட்டிருக்கிறது.

*"மெல்வினை யென்ன வியனுலகிலாற்றரிய*
*வல்வினையே யென்ன வருமிரண்டும் – சொல்லிற்*
*சிவதன்மம் ஆமவற்றிற் சென்றதிலே செல்வாய்*
*பவகன்மம் நீங்கும் படி"* – *திருக்களிற்றுப் படியார்.*

பிறப்புக் கேதுவாகிய வினைவிட்டு நீங்கும்படி பயன்களைக்கருதிப் பதங்களையடையாமல், சாயுச்சியமேபெறுகைப்பொருட்டாக உண்மையான சிவஞானத்தைப்பெற மெல்வினையென்றும், உலகத்தாராலே செய்தற்கரிய வல்வினையென்றும் சிவனை வழிபடத்தக்க இந்த இரண்டு வகையுஞ் சொல்லுமிடத்து, சிவதரும மென்றே சொல்லப்படும். ஆகையால் இவ்விரண்டினுள் உன்னுடைய கருத்துக்குப் பொருத்தமானது ஒன்றை வேறொருபயனுங் கருதாதே செய்வாயாக.



## (அ) மென்தொண்டர் - மெல்வினை

ஆகமங்களில் அருளிச்செய்தபடியே, அம்மை அப்பரை உள்ளபடி அருச்சிந்து வழிபடத்தக்க கிரியாவிதிக்கும் பக்குவனாம்படி, இவனுடைய அவையவங்களினாலே அந்தந்த அவசரங்களிலே செய்யத்தக்க திருவலகு, திருமெழுக்கு, திருவிளக்கு, திருநந்தவனம், திருப்பள்ளித்தாமம், திருமஞ்சனம், திருமாலை, கூத்து, பாட்டு முதலாகவுள்ள தொழில்களும், திருவேடத்தாரை வழிபடுகையும், சிவ பக்தருக்குவேண்டுவன செய்கையும், திருமந்திரம் செபிக்கையுமாக இப்படியே செய்யப்பட்ட குற்றமற்ற வழிபாடான சரியையும், இந்தச்சரியையின் முதிர்ச்சியினாலே திருவுள்ளத்தடைத்து அம்மையப்பரை அர்ச்சித்து வழிபடுகிறகிரியாவிதியும் நல்ல செயற்பாடென்று நமக்கு எளிதாகச் செய்கையாகையாலே இவையிரண்டையும் மெல்லினையென்று திவ்விய ஆகமங்கள் கூறும்,

*"ஆதியை அர்ச்சித்தற் கங்கமும் அங்கங்கே*
*சீரில் திறம் பலவும்செய் வனவும் – வேதியனே*
*நல்வினையாம் என்றே நமக்கெளி தானவற்றை*
*மெல்வினையே யென்றது நாம் வேறு"*

*திருக்களிற்றுப் படியார்.*

சிவப்பணி நின்ற மெல்வினை, வல்வினையாளர்கள் பெரிய புராணத்திற் கூறப்பட்டுள்ளார்கள்.

சரியை வழி நின்று மெல்வினையாற்றிய அப்பரடிகளும் கிரியை வழிநின்று மெல்வினையாற்றிய சம்பந்தரடிகளும் பெற்றுச் செய்த அற்புதங்கள் பல. அவ்வற்புதங்களைத் திருக்களிற்றுப்படியார் கூறுவது,

அப்பரடிகள்,

*"கொல்கரியின் நீற்றறையின் நஞ்சிற்கொலை தவிர்த்தல்*
*கல்லே மிதப்பாய்க் கடல் நீந்தல் – நல்ல*
*மருவார் மறைக்காட்டில் வாசல் திறப்பித்தல்*
*திருவா மூராளி செயல்"*

சம்பந்தரடிகள்,

*"ஓடஞ்சிவிகை உலவாக் கிழியடைக்கப்*
*பாடல்பனை தாளம் பாலை நெய்தல் – ஒடெதிர்வெப்*
*பென்புக் குயிர் கொடுத்தல் ஈங்கிவைதாம் ஓங்கு புகழ்த்*
*தென்புகலி வேந்தன் செயல்"*

### (ஆ) வன்றொன்டர் - வல்வினை

சரியையினையும், கிரியையினையும் மெல்வினையாக்கி இந்தநிலைகளின் முதிர்ச்சியினாலே பின்உண்டான சனத்திலே அம்மையப்பரோடு மிகுந்த சிநேகமாகி விளைந்த வல்வினை இருக்கும் முறைமை திருக்களிற்றுப்படியார் கூற்று,

*"வரங்கள் தரும் செய்ய வயிரவர்க்குத் தங்கள்*
*கரங்களினால் அன்று கறியாக்க – இரங்காதே*
*கொல்வினையே செய்யும் கொடுவினையே யானவற்றை*
*வல்வினையே யென்றதுநாமற்று".*

நல்ல வரங்களைத்தருகின்ற வயிரவ வேடங்கொண்டே முந்தருளிய கடவுளுக்குக் கறிய முது செய்யும் பொருட்டு முன்னே இரக்கமின்றித் தமது திருக்கரங்களாலே பிள்ளையைக் கொலை செய்த சிறுத்தொண்ட நாயனாரது கொடுவினை போன்றவை வல்வினை. சரியை வல்வினை.

*"பாதகமென்றும் பழியென்றும் பாராதே*
*தாதையை வேதியனைத் தாளிரண்டும் – சேதிப்பக்*
*கண்டார் தாமாம் பரிசளித்தார் கண்டாயே*
*சண்டீசர் தன்செயலால் தான்".*

பாவம் பழிகளை நோக்காமல், பிதாவும் பிரமணனுமாகியோனது பாதங்களை, திருமஞ்சனப்பாற்குடத்தை உடைத்தமைக்காகச் சேமாதித்த சண்டேசுரநாயனாரது வல்வினையை நோக்கி, அம்மையப்பர் தாமாந்தன்மையை யருளினார். கிரியை வில்வினை.

சாத்திரங்களிற் சொன்ன வழியன்றியே அளவற்ற அன்பின் பெருமையாலே, உலக இயற்கையை விட்டு யாவராலும் செய்ய வொண்ணாத செயல்களைச் செய்தமையாலும், இவற்றை ஒரு பிரமாண நூல்களாலுஞ் சொல்ல அரிதாகையாலும், இவை வல்வினை யென்று சொல்லப்பட்டன.

இப்படிக் கொடிதானவல் வினையைச் செய்யும் போதே இந்தக்கொடிய செய்கைகளால் அகிதம் வராமல் அம்மையப்பரை நோக்கியே நின்று அவரில்வைத்த அன்பின் பெருமையாலே இந்தச் செயல்களையும் முறையையான செயல்கள் என்றே கொண்டு, தம்மையும் மெள்ள அம்மையப்பர் கையிலே கொடுத்துப் பரங்கெட்டு நிற்கையாலே அவர்கள் அம்மையப்பர் கைப்பட்டு முத்தியே பெறாநிற்பர்.



# II சிவயோகம்

அகத் தொழிலின் மாத்திரையானே அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு சிவயோகம் எனப்படும். சரியை, கிரியைகளில் நின்று சாதித்து முற்றும் பெற்றவர்களே சிவயோகத்திற்கு அதிகாரியாவர்கள்.

### யோக அங்கங்கள் எட்டு
### அட்டாங்க யோகம்

| | | | |
|---|---|---|---|
| 1. இயமம் | 2. நியமம் | 3. ஆசனம் | 4. பிராணாயாமம் |
| 5. பிரக்தியாகாரம் | 6. தாரணை | 7. தியானம் | 8. சமாதி |

இயமம் = தீயவற்றை நீக்கல், நியமம் = நற்காரியங்களைச் செய்தல், ஆசனம் = அமரும் நிலை பிராணாயாமம் = மூச்சையடக்கல், பிரத்தியாகாரம் = புலன்களையும் மனத்தையும், உலகியலிற்
செல்லவிடாது தடுத்தல்

தாரணை = மனதை கடவுள்பாற் செலுத்துதல். தியானம் = மனதை இறை நிலையில் நிறுத்தல்,
மீளநினைத்தல்
சமாதி = ஆன்மீக அனுபவம், இறைநிலைவில் ஒன்றல்

யோகம் வெகுவிதம் எனினும் இதனைச் சுருங்கக் கொண்டு ஆதார யோகம், நிராதார யோகம் என்ற இரண்டினுள் அடக்குவர்.

ஆதாரங்களிலே ஒவ்வொரு திவ்விய ரூபங்களை ஆசாரியரிடத்திலே பெற்று அந்த அந்தத் தானங்களிலே தியானிக்கப்படுவது ஆதாரயோகம்.

ஆதாரயோகம் கைவந்தவாறே ஆதாரங்களிற் பார்த் திருக்கும்படி கற்பித்துக் கொண்டு நிற்பது போலாகாது சைதன்னிய சொரூபத்தைப் பாராதே பார்த்து நிற்பது நிராதார யோகம்.

*"ஆதாரயோகம்" நிராதார யோகமென*
*மீதானத் தெய்தும் விதியிரண்டே – ஆதாரத்து*
*ஆக்கும் பொருளாலே ஆக்கும் பொருளா மொன்று*
*ஆக்காப் பொருளே யொன்றாம்"*

*திருக்களிற்றுப் படியார்.*

## (அ) ஆதாரயோகம் :- ஆறு ஆதாரங்கள்.

| ஆதாரங்கள் | ஆதார இடங்கள் | பிரணவ பஞ்சாக்கரங்கள் | அதி தெய்வங்கள் |
|---|---|---|---|
| 1. மூலாதாரம் | மூலம் | பிரணவம் | கணபதி |
| 2. சுவாதிட்டானம் | மூல உந்தி | அகரம் | பிரமா |
| 3. மணிபூரகம் | உந்திக்கமலம் நடு | உகரம் | விஷ்ணு |
| 4. அனாகதம் | இருதயகமலம் | மகரம் | உருத்திரன் |
| 5. விசுத்தி | கண்டம் | விந்து | |
| மகேஸ்வரன் | | | |
| 6. ஆஞ்ஞை | புருவமத்தி | நாதம் | சதாசிவன் |

அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் என்கின்ற பஞ்சாக்கரமான பிரணவத்திற்குப் பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன், சதாசிவன் இவர்கள் ஐவரும் முறையே அதிதேவதைகளுமாய், மந்திரமூர்த்திகளுமாய், ஓங்காரமாயே நின்று நடத்துகின்ற இந்த ஐந்தெழுத்தே சத்தியுடைய சிவன்.

சிவன் திருமேனி கொண்டு சுழுமுனை வழியாக நிற்கின்ற முறைமையை குரு உபதேசத்தாலே பெற்று இந்த ஐந்தெழுத்தையும் மூலாதாரத்திலே பிரமரந்திரத்திற் செல்ல உச்சரித்தலால் இந்தப் பிரணவ ரூபமும் கரைந்து அதி தெய்வங்களும் ஒரு நீர்மையாய் உனக்கு நாதரூபமாய் நாதாந்தத்திலே அருளைப் பெறுவாயென்று ஆசாரியன் அருளிச் செய்யவறிந்து இந்த ஐந்தெழுத்தையும் உன் தத்துவமான உச்சரிப்புக்கு விந்து நாதம் முடிந்த விடத்திலே ஆன்ம போதமுங்கெடில் அம்மையப்பர் உண்மையான சொரூபத்திற் கூடியருளுவார்.

*"அஞ்செழுத்துமே அம்மை அப்பர்தமைக் காட்டுதலால்*
*அஞ்செழுத்தை ஆறாகப் பெற்றறிந்து – அஞ்செழுத்தை*
*ஓதப்புக்குள்ள மதியுங் கெடிலு மைகோன்*
*கேதமற வந்தளிக்குங் காண்"*

*திருக்களிற்றுப் படியார்.*

## (ஆ) நிராதார யோகம்

ஆன்ம போதத்தாற் கற்பிக்கக் கூடாத அர்த்தமாய் எல்லாப் பொருள்களிலும் தான் தோயாமல், ஆன்மாவுக்கு முத்திக்கு விரோதமாய் நிற்கத்தக்க பொருள்களையும் தாமேயறிந்து நீக்கி அநாதியே இப்படி நீங்கப்படாத



அந்த ஞானசொரூபத்துடனே தன்னுடைய போதம் ஒழிந்து இதனைக்கூடி தானும் அந்த ஞான சொரூபமாய் பற்றற நிற்பது நிராதார யோகம்.

*"ஆக்கப்படாத பொருளாய் அனைத் தினிலும்*
*தாக்கித்தான் ஒன்றோடும் தாக்காதே – நீக்கியுடன்*
*நிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாம்*
*நிற்க நிராதார மாம்".*

*திருக்களிற்றுப் படியார்.*

எல்லாவற்றையும் அறிந்து அறிவித்து நிற்கிறதாகிய ஞானத்தை அது கண்ணாகக் காண்கின்ற சிவயோகிகளே, சிவனை இரண்டறக் காண்கின்ற பரிபூரணர்கள். இப்படிக் காண்கின்றவர்கள் தன்னாலே காணப்பட்டதாகவும், காணப்பட்ட பொருள் தனக்கு வேறாகவும் காணாமல் அந்த ஞானமாகவே நின்று காண்கையாலே, இந்த ஞானமே சொரூபமாகவுமுடைய சிவனை அப்பொழுதே பெற்று வேறற்றிருப்பார்கள்.

*"காண்கின்ற தோர் பொருளைக் காண்கின்ற யோகிகளே*
*காண்கின்றார் காட்சியறக் கண்ணுதலைக் – காண்கின்றார்*
*காண்பானும் காணப்படும் பொருளும் அன்றியே*
*காண்கையினாற் கண்டனரே காண்"*

*திருக்களிற்றுப் படியார்.*

நிராதாரத்தைச் செய்கின்ற யோகிகள் சிவனைப் பெறும் பொருட்டுத் தேகேந்திரிய அந்தக் கரணங்களாயுள்ள ஆரவாரங்கள் ஒடுங்கும்படி ஞானத்தினாலே தம்முடைய இச்சா ஞானக் கிரியைகளைக் கழித்த அவசரத்தினாலே ஆனந்த திருத்தப்பணி அருளுகின்ற தம்பிரானார் ஸ்ரீ பாதத்திலே பரவிந்து என்கின்ற திருச்சிலம்பிற் பரநாதம் என்கின்ற ஓசைதோன்றா நிற்கும் அந்த ஓசை வழியே சென்று நாடிக்கூடி அந்த ஓசை முடிந்த விடத்தே தன்னுடைய போதமும் ஒக்க முடிவில் அப்பொழுதே அந்த ஓசை முடிந்த இடமே இடமாகவுடைய தம்பிரானார் காகுண்ய சத்தியுடனே அம்பலமாகிய ஞானப் பிரகாசத்திலே வந்து இவனைப் பிரியாது கூட நிற்பர்.

சேரமான் பெருமாள் நாயனாரது சிவபூசை வழிபாட்டின் முடிவிலே கூத்தப் பெருமான் தனது பரநாத சிலம்பொலியை அவருக்களித்த வரலாற்றைப் பெரிய புராணவாயிலாக அறிகிறோம்.

*"ஓசையெலாம் அற்றால் ஒலிக்கும் திருச்சிலம்பின்*
*ஓசைவழி யேசென் றொத்தொடுங்கில் – ஓசையினின்*
*அந்தத்தான் அத்தான் அரிவையுடன் அம்பலத்தே*
*வந்தொத்தான அத்தான் மகிழ்ந்து"* திருக்களிற்றுப் படியார்.

## (இ) பிரணவ யோகம்

ஞானத்தையுடைய மேலோர் கண்டநெறி பிரணவ யோகமேயாகும். இது சங்கற்பமற்ற நிலைக்குச் செல்ல மனதை ஜெயிக்கும் உபாயத்திலுள்ளது. ஆகாய மண்டல ஜோதியில் (துவாத சாக்தத்தில்) ஞானத்தினால் பராசக்தியை அறிந்து வழிபடுவதென்பதாம்.

ஞானத்தையடைய சோகம் பாவித்தல் என்பர். சோகம் (சக + அகம) பாவித்தல் என்பதின் பொருள் "அவன் நான்" என்பதேயாகும். இந்நெறியை "சிவோகம்பாவனை" என்றும் கூறுவர்.

சிவயோகம் என்பது சிவகுணங்கள் ஆன்மாவிற் பதியுமாறு செய்யப்படும் "சிவசாமிய பாவனாரூபம்" சிவனுக்குரிய சர்வஞ்ஞதை (முற்றறிவு) முதலிய குணங்கள் சார்ந்ததின் வண்ணமாம் இயல்புடைய ஆன்மாவுக்குரிய குணமாம்படி பதிதலாலெய்தும் சிவாநந்தமே சிவசாமிய பாவனாரூபம் கிரியை வழிநிற்போர் பிரணவத்தை உபாசனை செய்யும் நெறியைப் பிரசாத நெறி என்பர் அதில் மூலாதாரத்திலிருந்து அக்கினியைச் சிரசிற் கொண்டு சேர்க்க வழிகண்டுள்ளனர். இதுவும் பயன் தருவதேயாகும்.

எனினும் ஞான யோகிகள் தங்கள் பார்வையாலே மூலாதார அக்கினியை மேலெழுப்ப வழிகண்டுள்ளனர். இதனால் சிரசில் ஒலியையும் ஒளியையும் பெறலாம். இதுவே பிரணவத்தின் சொரூபமாகும். அதன் தடத்தமே அ, உம், விந்து – நாதம் ஆகும். சிரசிற்றோன்றும் விந்து நாதமே ஒளி ஒலிகளாகும். இதுவே சீவ சக்கரமாகும். இதுவே சிதம்பர சக்கரம், இங்கு காணும் ஒளியே பராசத்தியாகும். இங்குள்ள தொனியே கூத்தனது நடனமாகும். ஒளி – சத்தி, ஒலி – சிவம்.

*"ஓமென் றெழுப்பித் தன்னுத்தம நந்தியை*
*நாமென் றெழுப்பி நடுவெழு தீபத்தை*
*ஆமென் றெழுப்பியவ் வாறறிவார் காண்*
*மாமன்று கண்டு மகிழ்ந்திருந் தாரே".*



## (ஈ) பத்தியோகம்

திருக்களிற்றுப்படியார் சிவயோகத்தை ஞானயோகம் என்றும் பத்தியோகம் என்றும் இருவகைப்படுத்தியுங் கூறுகின்றது. மேற் கூறப்பட்ட சிவயோகங்கள், ஞானயோகங்கள், பத்தியோகங்கள் வருமாறு.

சிவனுடைய உண்மையைக் கேட்குதல், நினைக்குதல், காண்குதல் செய்த பொழுதே உன்னுடைய கருத்தை உருக்குவதானதொரு பேரன்பு கூடுமாயின் அதனாலே உன்னுடைய கருத்தானது நேராக அழிந்து சிவனுடனே ஒரு நீர்மையாய் விடுவாய். இதுவே பத்தியோகஞ் செய்யும் குறைமையாகும்.

### இவ்வாறு பத்தியோகஞ் செய்தவர்கள் பெருமை.

கண்ணப்பன் அன்பு,

*"கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்நமையால்*
*கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக் – கண்ணப்பர்*
*தாமறிதல் காளாத்தி யாரறிதல் அல்லாது மற்*
*றாறியும் அன்பன் றது".*

கண்ணப்ப நாயனாருடை அன்பை அவரும் கானத்தியப்பரும் அறிவாரன்றி மற்ற யாரும் அதனையறியார்.

சேந்தனார் கழிநிவேதனம்

*"அவிழ்ந்த துணியில் அவிழ்த அவிழை*
*அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க – அவிழ்ந்தசடை*
*வேந்தனார்க் கின்னமுத மாயிற்றே மெய்யன்பில்*
*சேந்தனார் செய்த செயல்".*

சேந்த நாயனார் வஸ்திர முடிச்சில் நின்றும் கழன்று கழித்த கழிவு அன்னத்தை அன்போடு நிவேதிக்க அது சிவபெருமான் உண்ணுதற்கு இனிய அமிர்தமாயிற்று. நாயனார் செய்கை எத்துணைச் சிறப்புடைத்து.

மங்கையற்கரசி உருகும் உள்ளம்,

*"சுரந்த திருமுலைக்கே துய்ய சிவ ஞானம்*
*சிறந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச் சுரந்த*
*தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த*
*மனமுடையாள் அன்பிருந்த வாறு".*

உமாதேவியாருடைய தனத்திலிருந்து பொழிந்த ஞானப்பாலை, சம்பந்தப்பிள்ளையார் பருகினார் என்று சொல்லக் கேட்ட மங்கையற்கரசியார் பால்பொழிகின்ற தனமுடையராயினார் அவர் பக்தி இருந்த முறை அளவிட முடியாது.

அம்மை அப்பரை உள்ளே கண்டு வாசனை தீர்த்திருப்பார் போல் புறம் புங் கண்டு வாசனை தீர்த்தவர்கள்,

கல்லினும், கமரினும், ஒளியையுடைய வாளினும், சாணைக்கல்லினும், சூதாடு கருவிப்பலகையினும், திருக்குறிப்புத்தொண்டர், அரிவாட்டாயர், ஏயர்கோன், கலிக்காமர், மூர்த்தியார், மூர்க்கர் என்னும் நாயன்மார் ஒவ்வோர் தொழில்களையும் செய்யும் போதே சொல்லப் பெற்ற சிவனை ஒரு வழிப்பட்ட கருத்தினாலேயன்றோ
புறம்பேயும் அவன் பிரகாசிக்க பிறப்புக்கு வித்தான வாசினையைப் போக்கினார்கள். ஐயனே! இந்த முறைமை பொய்யான நெறியாலன்றோ.

*"கல்லில் கமரில் கதிர் வாளில் சாணையினில்*
*வல்லுப் பலகையினில் வாதனையைச் – சொல்லும்*
*அகமார்க்கத் தாலவர்கள் மாற்றினர் காண் ஐயா*
*சகமார்க்கத் தாலன்றே தான்".*

## III சிவஞானம்

புறத்தொழில் அகத்தொழில் இரண்டுமின்றி அறிவுத்தொழில் மாத்திரையான அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூன்று திருமேனிக்கும் மேலாய் அகண்டாகார நித்தவியாக சச்திதாநந்தப் பிழம்பாய் நிறைந்து நிற்கிற சிவபிரானிடத்திற் செய்யும் வழிபாடு ஞானம் எனப்படும்.

### சிவனைக் காட்டும்

*"நன்மார்க்க ஞானத்தை நாடிஞான*
*நேயமொடு ஞாதுருவு நாடா வண்ணம்*
*பின்மார்க்கச் சிவனுடனாம் பெற்றி ஞானப்*
*பெருமையுடையோர் சிவனைப் பெறுவர் தாமே".*

*சிஞானசித்தியார்.*



*"சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் என்றமையால்*
*சார்புணர்தல் தானே தியானமாம் – சார்பு*
*கெடவொழுகில் நல்ல சமாதியுமாம் கேதப்*
*படவருவ தில்லை வினைப் பற்று".*

*திருக்களிற்றுப் படியார்.*

தெய்வப்புலமைத் திருவள்ளுவ தேவநாயனாரும் சார்புணர்ந்து சார்புகெட வொழுகின்–என்றமையால் தனக்கு அநாதியே தாரமாய் நின்ற திருவடி ஞானத்தை அது கண்ணாக வறிந்து அத்துடனே இரண்டறக் கூடி நிற்கில, மீண்டும் ஒரு ஜநநமுண்டாகைக்குக் கன்மம் உண்டாகாதென்று அருளிச் செய்துள்ளார்.

அப்பிரமாணப் படியே தனக்குத் தரிசனமான ஞானத்தைக் கூடி அசைவற நிற்கின், அதுவே சிவத்தியானமாம். அந்த நிலையில் தியானிக்கின்றோம் என்கின்ற பாவனை குலையின் அப்பொழுதே சுயரூபமான சிவனைக்கூடி நன்றான சமாதிபரனாக நிற்பன். இப்படிக் கூடின சிவஞான யோகிகளுக்குப் பின்பு ஜநநத்தை உண்டாக்குகின்ற ஆகாமிய கன்மம் உண்டாகாது.

அந்தச் சமாதி பரன்நிலை ஞானம் நேயத்திற் கரைந்த விடத்து பரமுத்தராவர்.

*"சிந்தையிலும் என்றன சிரத்தினிலும் சேரும்வகை*
*வந்தவனை மண்ணிடைநாம் வராமல் – தந்தவனை*
*மாதினுடன் எத்திறமும் வாழ்ந்திருக்க என்பதனால்*
*ஏதுகொலி வாழ்த்து வேன் இன்று."*

*திருக்களிற்றுப் படியார்.*

*திருச்சிற்றம்பலம்.*

# 12. "இன்பமே எந்நாளுந் துன்பமில்லை"

அம்மையப்பருக்கு மீளாவாளாய் அவரது மலர்ச்சேவடிகளையடைந்த அடியவர்களாகிய நம்மனோர்க்கு, "எந்நாளும் இன்பமே யல்லாது ஒரு நாளும் துன்பமேயில்லை" என்பது அப்பரடிகளின் அருள்வாக்கு. அவர் அருள் வாக்கின் உள் பொருளை நோக்குவாம்.

யாவரும் இன்பத்தையே விரும்புகின்றனர். நிறைந்த இன்பத்தை விரும்புகின்றனர். இன்பத்தைக் கெடுப்பது துன்பம், மனக்கவலை. இஃது இல்லாமல் இருக்குங் காலம் எது? குழந்தைப் பருவமேயெனலாம். பசிபிணி முதலியவை எக்காலத்தும் இருப்பினும், மனக்கவலை என்பது குழந்தைப் பருவத்தில் அறியப்படாததொன்றே என்று கூறலாம். அதனாற் குழந்தைகள் பெரும்பாலும் இன்பமாகவே ஆடியும் பாடியும் களிப்புடன் பொழுது போக்குவதைக் காணலாம்.

குழந்தைப் பருவத்தைக் கடந்து வாலிபப் பருவத்தை அடையும்போது வாழ்க்கைக்கு வேண்டிய தொழிலைப் பற்றிய கவலை; அது வழியாகப் பொருள் தேடுவதைப் பற்றிய கவலை; வருகின்ற பொருளைக் கொண்டு குடும்பத்தை நடத்த வேண்டிய கவலை; இப்படிப் பல கவலைகள் ஒன்றன்பின் ஒன்றாகத் தோற்றி விடுகின்றன.

*"அன்ன விசாரம் அதுவே விசாரம் அது வொழிந்தால்*
*சொன்ன விசாரம் தொலையா விசாரம் நல்ல தோகையரைப்*
*பன்ன விசாரம் பலகால் விசாரம் இப்பாவி நெஞ் சுக்கு*
*என்ன விசாரம் வைத்தாய் இறைவா கச்சியேகம் பனே".*

*என்கிறார் பட்டினத்தடிகள்.*

இப்படிப்பட்ட கவலைகள் ஒன்றும் குழந்தைகட்கு இல்லை. அதற்குக் காரணம் எல்லாக் கவலைகளையும் பெற்றார்கள் ஏற்றுக் கொண்டு குழந்தையை இன்பமாக வளர்ப்பதேயாம். ஆகவே, நன்றாக உண்பதும், உறங்குவதும், விளையாடுவதுமே குழந்தையின் வேலையாகிறது.

குடும்ப பாரத்தினால் அல்லலுறுகிறவர்க்கு இக்குழந்தைப் பருவத்தை நினைத்தால் என்றுமே குழந்தையாய் இருக்கும் நிலை நமக்கு வாய்க்கக் கூடாதா என்று கூட எண்ணத் தோன்றும். அவ்வாறு இருப்பதற்கு என்றும் தாய், தந்தையரும் உள்ளவர்களாயிருக்க வேண்டுமன்றோ.



தங்கள் தாய், தந்தையர் என்றும் உள்ளவராயும், தாங்கள் என்றுமே குழந்தைகளாகவும் இருக்கும் நிலை உலகில் எவருக்கேனும் இருத்தல் கூடுமோ? கூடாது என்பது தெளிவு.

ஆயினும், உலகிலுள்ள எல்லோருமே என்றுங் குழந்தைகளாகயிருக்க, அவர் தம் தாய், தந்தையரும் என்றும் உள்ளவராய் இருக்கும் நிலை உளது. அதனை அறியாது இருப்பதுதான் குறை.

*"அம்மையப்பரே யுலகுக்கம்மையப்பர்"*

என்று திருக்களிற்றுப்படியார் கூறுகிறது. அதன்படி அம்மையாகிய சத்தியும் அப்பனாகிய சிவமும் அனைவர்க்கும் தாய், தந்தையர். அவர் தங்குழந்தைகளே அனைத்துயிர்களும். ஆனால், இக்குழந்தைகள் தம் தாய், தந்தையரை அறிவதில்லை. அதனால் அல்லல் உறுகின்றன. ஒரு கூட்டத்தில் தாய், தந்தையர்களை விட்டுப் பிரிந்த குழந்தைகள் அழுது அல்லலுறுவது அனுபவத்திற் காணப்படுவதன்றோ.

உடலுக்குத் தாய், தந்தையர் இவ்வுலகத்தில் உள்ளனர். அவர்களை யாவரும் நன்கு அறிகின்றனர். ஆனால், உயிர்களுக்குத் தாய், தந்தையராகிய சத்தியையும் சிவத்தையும் ஒருவரும் அறிவதில்லை. ஏனெனில் அவர்கள் உடலுக்குரிய தாய் தந்தையரைப் போல ஊனக் கண்ணாற் காணக் கூடியவரல்லர். ஞானக் கண்ணாலேதான் காணத்தக்கவர்கள். அந்த ஞானக் கண்ணை அறியாமையாகிய இருள் மறைத்து நிற்கிறது.

ஆணவ இருள் நீங்கப் பெற்றால் ஞானக் கண் திறக்கும்; அம்மையப்பரைக் காணலாம்; அல்லல் நீங்கி இன்பத்துடன் வாழலாம். அந்த ஆணவ இருள் நீங்குவது எப்போது? ஆணவ இருள் நீங்கி அம்மையப்பரைக் கண்ட அநுபூதிமான்களது அருளுரைகளைக் கேட்டலும், அவ்வுரைகளின் வழி நிற்றலுமே அறியாமையாகிய அகவிருள் நீங்குதற்குரிய வழியாகும்.

அம்மையப்பரைக் கண்டு அகவிருள் நீங்கப்பெற்ற அருளாளராம் அப்பரடிகள் அருளுரைகள்:

தம்மைச் சார்ந்த ஓரறிவுமுதல் ஆறறிவு உயிர் வரை அனைத்துக்கும் அம்மையப்பர் இருக்க அவர் அடித்தொண்டைச் செய்யாது, பொருள் தேடிப் புகழ் தேடிச் சுழன்று உலகியல் இன்ப மொன்றிற் திளைத்து வாழ்ந்து மாளும் மனிதர்களைப் பார்த்துப் பின்வரும் தேவாரப் பாசுரக் கூற்றின் மூலம் இரங்குகின்றார்:

*"திருநமமஞ் செழுத்துஞ் செப்பாராகில்*
*தீவண்ணர் திறமொருகாற் பேசாராகில்*
*ஒருகாலும் திருக்கோயில் சூழாராகில்*
*உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணாராகில்*
*அருநோய்கள் கெடவெண்ணீ றணியாராகில்*
*அளியற்றார் பிறந்தாறேதோ வென்னிற்*
*பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்தும் செத்துப்*
*பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்றாரே".*

அவ் விரங்குதலோடமையாது, அம்மயக்க மனிதர்களது நெஞ்சை நன்னிலையில் நிறுத்த வேண்டி, அவர்களது நெஞ்சை விளித்துக் கூறும் முகமாக நெஞ்சமே! நீ நல்ல நிலையைப் பெற்று இவ்வுலகத்தில் நல்ல புகழோடு வாழ வேண்டுமென்று எண்ணுவாயேயாயின் யான் ஒரு வழி காட்டுவேன். அது மிகவும் நல்ல வழி, மெய்யன்பர்கள் நடந்து சென்ற வழி; என் பின்னேவா, அதோ தெரிகிறது அம்மையப்பர் திருக்கோயில், அதனுள் ஒரு நாளுந் தவறாது பொழுது புலர்வதற்கு முன் சென்று திருவலகாற்றுடைத்து, பசுவின் சாணியால் மெழுகி, நல்ல மணம் மிக்க பூமாலைகளைக் கட்டி, அம்மையப்பருக்குச் சாத்தக் கொடுத்து, அவர் திரு முன்பு நின்று, அவர் புகழைப் பாடிப்பரவி, இரு கரங்களையுஞ் சிரமேற் குவித்துக் கூத்தாடி, எல்லாவுயிர்களுக்கும் அளியாத இன்பத்தை யருள்பவனே! உனக்கு வெற்றியுண்டாக வென்றும், உமது திருவடிக்குப் பலகால் வணக்கம், வணக்கம் என்றும், கங்கையைத் தாங்கிய செஞ்சடா பாரத்தையுடைய முதல்வா! என்றும், பலமுறை சொல்லிச் சொல்லி அவர் முன் அழுது நிற்பாயானால், நீ நிச்சயமாக நல்ல நிலையைப் பெறுவாய்.

என்று சரியை வழிபாட்டின் மூலம் பேரின்ப நிலையாகிய முத்தி யின்ப நிலைபெறும் வழியைக் காட்டுகின்றார்.

அவ்வழிப்படுத்தும் தேவாரப் பாசுரம்:

*"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா*
*நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்*
*புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப்*
*பூமாலை புனைந் தேத்திப் புகழ்ந்து பாடித்*
*தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்*
*சங்கரா சய போற்றி போற்றி யென்றும்*
*அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீயென்றும்*
*ஆரூரா னென்றென்றே யலறா நில்லே"*

"திருநாமம் ஐந்தெழுத்தும் செப்பாராகில்" என்ற எதிர்மறைக் கூற்றால் திருவைந்தெழுத்தே இறைவனது திருநாமம்.



"நற்றுணையாவது நமச்சிவாயவே" இதனை இயன்றளவு ஓதவேண்டும் என்றும் அப்பரடிகள் அருளுகின்றார்.

*"அஞ்செழுத்துமே அம்மை அப்பர்தமைக் காட்டுதலால்*
*அஞ்செழுத்தை ஆறாகப் பெற்றறிந்து – அஞ்செழுத்தை*
*ஓதப்புக்குள்ள மதியுங் கெடிலுமை கோன்*
*ஏதமற வந்தளிக்குங் காண்".*

*– திருக்களிற்றுப் படியார்.*

"அஞ்செழுத்துமே அம்மையப்பரைக் காட்டுதலால் அஞ்செழுத்தை ஆறாகப் பெற்றறிந்து", அவ்வழிச் சென்றால் அஞ்ஞான இருள் நீங்கி ஞானக்கண் பெற்று அம்மையப்பரைக் காணலாம். அம்மையப்பரைக் கண்டு விட்டால் அப்பால் அல்லலொன்றுமில்லை. அங்ஙனம் கண்ட அருளாளர்களுக்கு,

*"இன்பமே எந்நாளும் துன்பமில்லை"*

சமண பல்லவ அரசன் இட்ட அரச கட்டளைக்குப் பணியாது, அப்பரடிகள் – நாவுக்கரசர் அருளிய பதில் திருமுறைப் பாசுரம்,

*"நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ் சோம்*
*நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம்*
*ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்*
*'இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை'*
*தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான*
*சங்கரன் நற்சங்கவெண் குழையோர் காதிற்*
*கோமார்க்கே நாமென்று மீளாவாளாய்க்*
*கொய்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே"*

*தமிழ்வேதம் – ஆறாந் திருமுறை.*

*திருச்சிற்றம்பலம்.*

# 13. "வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்"

மெய்யியல்
பகுதி II

*சிவப்பிரகாசம் உள் பொருள்*

*"புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப்*
*புகவலளவைக் களவாகிப் பொற்பணிபோல் அபேதப்*
*பிறப்பிலதாய் இருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போல்*
*பேதாபேத முமின்றிப் பெருநூல் சொன்ன*
*அறத்திறனால் விளைவதாய் உடலுயிர்கண் அருக்கன்*
*அறிவொளிபோற் பிறிவரும் அத்துவித மாகும்*
*சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ*
*சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்".*
*– சிவப்பிரகாசம், உமாபதி சிவாச்சாரியார்.*

பதிப்பொருள், புறச்சமயிகள் பாசக் கட்டுடையராகலின் முப்பொருள் நிச்சயம் அறியாமையால் அவர்கட்குத் தோன்றாமல் அந்தகாரப் பொருளாயும்; அகச் சமயிகள் முப்பொருள்களும் கொள்வோராகலின் பாச நீக்கத்துக்குரியவராகலின் அவர்கள் அறிவுக் களவுக்களவாய்த் தோன்றும் பிரகாசப் பொருளாயும்; இவ்விரு கூற்றுச் சமயத்தோர்க்கும் அவரவர் கொண்ட அளவைப் பிரமாணங்களுக்குத் தக்கதாய் அளவுபட்டு அந்தந்த இடமே அவர்கட்கு மோட்ச சாதனமாகக் கொடுப்பதாகவும்;

சிந்தாந்திகள் முத்தியென்னும் பரமுத்தியில் ஒருபொருள் பல ஆபரணங்களானது போல அபேதமும்; இருள் வெளிபோல் பேதமும், சொல் பொருள் போல் பேதா பேதமுமில்லாததாய்; விசிட்டாத்து விதம், துவிதாத்து விதம், கேவலாத்து விதங்களின்றிப் பெரிய சிவாகமத் துணிபாகிய சுத்தாத்துவிதப் பொருளாய்; உடலுயிர் ஒற்றுமை நயத்தால் ஒன்றுபட்டு உயிர் உடலேயாவும்; அஃதல்லவாயும் இருப்பது போலவும்; ஆதித்தனொளி கண்ணொளியோடு விரவிக் கூடியும் அதனோடு விரவாது இருளை நீக்குவது போலவும், ஆன்ம சிற்சத்தி இந்திரிய ஞானத்தோடு விரவிக் காட்சிப் படுங்காலத்து அது அறிந்ததென்றும், இது அறிந்ததென்றும் பிரிக்கப்படாதது போலவும்;



இவ்வாறு மூவிதமாய்க் கலப்பினால் ஒன்றாயும், பொருட்டன்மையால் வேறாயும், செயல் தன்மையால் உடனாயும் நிற்கும் சுத்தாத்துவித நயத்தைத் "தத்துவமசி" என்னும் வேதாந்த மகா வாக்கியத்தின் தெளிவு போதமாகிய சைவசித்தாந்தத்தின் வெற்றிப்பாட்டைச் சிவப்பிரகாச நூலிற் கூறுவாம்.

வேதாந்தம் – சித்தாந்தம்; வேதாந்தமாம் சித்தாந்தம் என்று கூறாது "வேதாந்தத் தெளிவாம் சித்தாந்தம்" என்று உமாபதி சிவாச்சாரியார் கூறிய கருத்து என்னையெனில்,

வேதாந்தமென்பது வேதத்தின் அந்தமாகிய உபநிடதங்களாம். முப்பொருள் உண்மை கொள்ளாதவர் கூறும் வேதாந்தம் இடுகுறிவேதாந்தமாகும். காரணக்குறி வேதாந்தமாகா.

முப்பொருளுண்மை

*"சான்றவ ராய்ந்திடத் தக்கவாம் பொருள்*
*மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன*
*ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த் தொகை*
*வான்திகழ் தழையென வகுப்பர் அன்னவே".*
*கந்தபுராணம் கச்சியப்ப சிவாச்சாரியார்.*

1. தானேயறிகின்ற பொருள் பதி (தொல் பதி)
2. அறிவிக்க வறிகின்ற பொருள் பசு (உயிர்த் தொகை)
3. அறிவித்தாலும் அறியாத பொருள் (தளை).

உபநிடதங்களும் பலவாம்; அவற்றுட் சில உபநிடதம் நாராயணனையே பிரமமெனவும், சில உபநிடதம் பிரமாவையே பிரமமெனவும், சில உபநிடதம் அக்கினியையே பிரமமெனவும் இவ்வாறே ஒவ்வோர் தெய்வத்தையும் பிரமமெனப் பல உபநிடதங்களும் கூறவும், சுவேதாசுவதம், சாந்தோந்தியம், கைவல்லியம், காலாக்கினி, அதர்வசிகை, அதர்வசிரசு முதலிய சில உபநிடதங்கள் மட்டும் சிவனையே பிரமமெனக் கூறும்.

அரசன் ஆணையைத் தாங்கியுள்ள ஒவ்வோர் அதிகாரிகளையும் அரசனென உபசரித்துக் கூறும் அவ்வளவே போலச் சிவனுடைய ஆணையைப் பெற்றுள்ள ஒவ்வோர் தெய்வங்களையும் பிரமமென உபநிடதங்கள் உபசரித்துக்

கூறினும் அதிகாரிகள் உண்மையில் அரசராகாதவாறு போல ஏனைய தேவர்கள் உண்மையில் பிரமமாக மாட்டார்கள்.

அங்ஙனமாயின் அங்ஙனங் கூறுவானேனெனில் தனக்குமேல் முதல் இல்லையென்று எண்ணுகிறவர்கட்கு ஒவ்வோர் படித்தரமாய் முதல் உண்டு என்று காட்டுவதற்கு ஆகுபெயர்ப் பொருளில் அவ்வாறு கூறப்பட்டது. படினும் அவ்வுபநிடதங்களுக் கெல்லாம் சிவம் பிரமமென் பதினாலேதான் கருத்து.

இவ்வாறு ஏனைய தேவர்களை ஆகுபெயரால் பிரமமெனக் கூறும் உபநிடதங்களும், தெளிவாகச் சிவ பரம்பொருளையே பிரமமெனக் கூறும் உபநிடதங்களும் வேதாந்தமென்று வழங்கப்படுதலால் இவ்வுபநிடதங்களுள் எது மெய், எது பொய் என்னும் ஐயம் உண்டாகுமல்லவா? இந்த ஐயத்தை நீக்குதற் பொருட்டுச் சிவபரம் பொருளையே பிரமமெனக் கூறும் சிவாகமங்களாகிய சித்தாந்தமாகும் என்னுங் கருத்தமைய,

*"வேதாந்தத் தெளிவாம் சித்தாந்தம்"*
எனக் கூறிப்போந்தார் உமாபதி சிவாச்சாரியார்.

சித்தாந்தம் போல் முப்பொருளுண்மை கொள்வதே வேதாந்தமெனவறிக.



# 14. மகாவாக்கியம்

மகாவாக்கியம் உண்மை வேதாந்தமாகிய உபநிடதங்களிலே சர்வசாத்திரமாய் ஞானோபதேச காலத்தில் ஆசாரியனால் உபதேசிக்கப்படும் ஒரு வார்த்தையாகிய "தத்துவமசி" முதலாகிய வாக்கியங்களாகும்.

வேதாந்தம் – காரணப் பெயர்; வேதமுடிபாகிய உபநிடதங்களைக் குறிக்கும்; இடு குறிப்பெயராக ஏகான்மவாத நூல்களைக் குறிக்கும். சிவம், விஷ்ணு இரண்டிலும் ஏகான்மவாத உபநிடதங்கள் உண்டு. இவ்வுபநிடதங்கள் பூர்வம்.

### வேத மகாவாக்கியங்கள்

I. இருக்கு வேதம் : "ப்ரக்ஞானம் ப்ரஹ்மம்"
சிவம் ஆன்மாவில் அறிவினில் அறிவாய் விளங்குகிறது.

II. யசுர் வேதம் : "அஹம் பிரஹ்மாஸ்மி"
நான் பிரமமாகிறேன்.

III. சாம வேதம் : "தத்துவமஸி"
அது நீயாகிறாய்.

IV. அதர்வன வேதம் : "அயமாத்மாப்ரஹ்மம்"
ஆன்மா சிவசத்தியாத்மகமாக இருக்கிறது.
சத்தி சிவான் மகம் எனினும் பொருந்தும்.

உபநிடதங்களிலும் இவ்விதமாக மகா வாக்கியங்கள் உண்டு. சாந்தோக்கிய உபநிடதத்திலே "தத்துவமசி" மகாவாக்கியம் சொல்லப்பட்டிருக்கிறது. இம்மகாவாக்கியமே பெரும்பாலும் எடுத்துக்கொள்ளப்படுவது.

### "தத்துவமசி"

| தத் | + | துவம் | + | அசி |
|---|---|---|---|---|
| பதியின் தடத்தம் | – | ஆன்மாவின் தடத்தம் | – | அருள்நிலை |
| சி | – | ய | – | வ (பஞ்சாக்கரம்) |
| காட்சிப்பொருள் | – | காண்பான் | – | காட்சி |
| ஞேயம் | – | ஞாதுரு | – | ஞானம் |

காண்பான், காட்சி, காட்சிப்பொருள் மூன்றும் வெவ்வேறாகத் தோன்றாத் திரிபுடிசகித நிலை சச்சிதாநந்த நிலை. "மூன்றாய தன்மையவர் தம்மின் மிகமுயங்கித்தோன்றாத இன்பம்.

இந்தரேய நிலையை "அத்துவிதம்" என்பர்.
வடமொழி "நத்துவிதம்" – தமிழில் அத்து விதம் எனக் கூறப்படும். நகரம், அகரம், இன்மை அன்மை மறுதலைப் பொருள்கள் குறிப்பன.

இம்முப்பொருள்களுள் ஒன்றைத் தமக்காக்கிக் கொண்டு, தங்கள் தங்கள் கொள்கையளவில் நான்கு வகை அத்து விதிகள் தோன்றினர். அவர்கள் :–

1. கேவலாத்து விதிகள்
2. விகிட்டாத்து விதிகள்
3. துவைதாத்து விதிகள்
4. சுத்தாத்து விதிகள்

மேற்போந்த "தத்துவமசி" முதலிய மகாவாக்கியங்கள் "அது நீயாகிறாய்" எனவும், "அது நான் ஆகிறேன்" எனவும், "அது இது ஆகிறது" எனவும் மூவிதம் பற்றி நிகழுவவாயின.

அம்மகாவாக்கியங்களுள்ளே "அது நீயாகிறாய்" என்பதில் அது என்பது ஒரு பொருள், நீ யென்பது ஒரு பொருளாகலின் ஒரு பொருள் மற்றொரு பொருளாவது எப்படி யென ஐயம் நிகழ்ந்தது. அவ்வையம் நீக்குதல் காரணமாக "அது இது" ஆதற்கேதுவாய் அவ்விரண்டிற்குமுள்ள சம்பந்தம் "அத்துவிதம்" என உணர்த்தப்பட்டது.

1. கேவலாத்து விதிகள்
அத்து விதத்திற்கு இன்மைப்பொருள் கொண்டு ஆன்மா ஒன்றே உளது. அதைவிட வேறு பொருள் இல்லை என்பதனால் அவர்கள் ஏகான்பவாதிகள் எனப்படுவர். (குணகுணித்தன்மை) இம்மதப் பிரவிருத்தர் சங்கராச்சாரியர்.

2. விசிட்டாத்து விதிகள்
இவர்களும் இன்மைப் பொருள் கொள்பவர்கள்.
(அ) இரமானுஷய மதத்தவர்.
வாசுதேவனே பரம் பொருள்; சடமும் சித்துமாய வெல்லாம் அவனது பரிணாமம் என்பர்.
ஆ) சிவாத்துவிதசைவர்: சிவமே பரம் பொருள்;
சித்தும் சடமுமாய வெல்லாம் அதன் பரிணாமமே என்பர்.
இவ்விருவரும் விசிட்டாத்துவிகள் எனப்படுவர். தன்னோடுடைய பசு பாசங்களாலும், தன்குணங்களாகிய சத்தி சங்கற்பம் முதலியவற்றாலும் விசேடிக்கப்பட்டு விசிட்டமாய் நின்ற "ப்ரப்பிரமம்" இரண்டில்லை ஒன்று.



3. துவை திகளாவார் பேதவாதிகள்
அவர்கள் மத்துவாசாரியர் மதத்தவர்.
மறுதலைப் பொருள் கொண்டு ஆன்மாவும் முதல்வனும் வேறு வேறு இருக்கும் என்பது அவர் மதம்.

4. சுத்தாத்து விதிகளாவார் சைவசித்தாந்திகள்
அன்மைப்பொருள் கொன்டவர்கள்;
முதல்வனும், ஆன்மாவும், மலமுமெனப் பதார்த்தங்கள் மூன்றுள்ளன. அவற்றுள் முதல்வன் சூக்கும சித்தாயும், ஆன்மா தூலசித்தாயுமிருக்கும். அவ்விரண்டிற்கும் நிலை ஒன்றுமன்று; வேறுமன்று, இரண்டற நிற்கும்; (வியாபக வியாப்பியம்) எனக் கூறுவர்.
இவ்வாறு நால்வர் மதமும் வேறுபடுவர்.

"அது இது" ஆதற்கண்ணுள்ள சுத்தாத்து வித சம்பந்தத்தையும் தத்தம் மதங்களுக் கியையப்பொருள் கொள்ளவேண்டியவராயினர்.

இவர்கள் வேத உபநிடதங்களை ஒப்புக்கொள்பவர்: வைதிகசமயத்தவர்.
ஆகமம் சிவபரத்துவத்தையே கூறும்;
ஏனைய கடவுளருக்குக் கூறப்படுபவை பூர்வ ஆகமங்களாகும்.
ஏகான்மவாதிகள் கூறும் கேவலமும், பேதவாதிகள் கூறும் மறுதலையும் சுருதியோடு மாறுபடுவன.
இராமானுஷியரும், சிவாத்து வித சைவருங் கூறும் விசிட்டம் சுருதியோடு ஒவ்வுமாயினும் "அத்துவிதம்" என்ற சொற்குப் பொருள் கொள்ளப் பொருந்தாது.

*"ஒன்றாலும் ஒன்றா இரண்டாலும் ஓசையெழா*
*தென்றாலொன்றன்றிரண்டும் இல்". – திருவருட்பயன் உமாபதி சிவாச்சாரியார்*

ஆன்மாவும் சிவமும் ஒரு பொருளாகில் ஒருவருங்கூட வேண்டியதில்லை; பெறுவானும் பேறுமில்லை;
இரண்டாய் நிற்குமென்று சொல்லுவாயானால் அங்கே சாயுச்சியமென்று சொல்ல வேண்டுவதில்லை;

எனவே, ஒன்றுமல்ல இரண்டு மல்ல வென்று வேதாகமங்கள் சொல்லு கையினாலே அத்து விதமாயிருக்கும்.

சுத்தாத்துவித மகாவாக்கியப் பொருள் உய்த்துணர்க.

# 15. ஐந்தொழில் ஆடல்

பரமசிவன் உயிர்களின் மேற்கொண்ட கருணையினால் உயிர்களுக்கு ஆக்கலாதி ஐந்தொழிலும் ஆற்றியருளுகிறார். உயிர்களின் கருமமலம் பரிபாகமாவதற்காக ஒடுக்கத்தை நிகழ்த்துகிறார் பின்னர் உயிருடன் ஒருங்கியைந்துள்ள ஆணவமலம் பரிபாக மாதற்பொருட்டுத் தோற்றத்தை நிகழ்த்துகிறார். உயிர்களின் அன்பு அறிவு ஆற்றல்களை விளங்க வொட்டாது தடைசெய்வதே பழமலம் எனப்படும் ஆணவம் ஆகும். நடக்க நடக்க வழியின் தூரம் குறைவது போலப் படைப்புத் தோறும் இது தேய்வுறும்.

உயிர்களின் மாயாமலம் பக்குவப்படுதற்காகவே நிலைத்தல் நிகழ்த்தப்படுகிறது. இதனால் 'நில்லாதவற்றை நிலையின' என்றுணரும் திரிபுணர்ச்சி தேய்ந்து செவ்வி நேரும். இங்ஙனம் உதவிபுரியும் தம்மையும், தாம் புரியும் உதவிகளையும் தெரியவொண்ணா வண்ணம் நம்மை விடையங்களில் அழுந்தச்செய்து மறைத்தலும் புரிகிறார்.

மேற்கூறிய நாற் செயல்களாலும் உயிர்கள் கன்ம ஒப்பு, மலபாரிபாகம் முதலியன விளையுமாறு தமது திருவுளத்தே அநுக்கிரகமே (அருளே) பண்ணுகிறார் இப்படி உடல்பற்றி படைத்தல், காத்தல், அழித்தல், என்னும் முத்தொழில்களையும், உயிர் பற்றி மறைத்தல், அருளல் என்னும் இரு தொழில்களையும் புரிந்து ஆன்மாக்களைக் குருமூர்த்தமாகவும் எழுந்தருளி ஈடேற்று கின்றார். இங்ஙனம் உதவுவதற்காகவே தமது சக்தியைப் பிரகாசிப்பித்து அந்தச்சக்தியிடத்தே தாமும் பொருந்தி நின்று ஐந்தொழில் அருளுகின்றார்.

இவ்வைந்தொழில்களையும் பஞ்சகிருத்தியம் – ஐந்தொழில் ஆடல் – ஐந்தெழுத்தாடல் என்பர். ஐந்தொழில் ஆடல் புரியும் அதிகார மூர்த்தத்துக்கு நடராஜ வடிவம் என்பர். நடராஜர் வடிவத்திலே உடுக்கை ஏந்திய திருக்கையிலே படைப்புத் தொழிலும், அபயத்திருக் கரத்திலே காத்தற் தொழிலும், அக்கினி ஏந்திய திருக்கரத்திலே அழித்தற் தொழிலும், உறுதியாக ஊன்றிய திருப்பாதத்திலே மறைத்தற் றொழிலும், தூக்கிய திருப்பாதத்திலே முத்தியாகிய அருளற் றொழிலும் அமைந்திருக்கின்றன என்பதை அறிந்து கொள்ளுமாறு மனவாசகங்கடந்தார். தாமருளிய உண்மைவிளக்கமென்ற நூலில்,



*"தோற்றம் துடியதனில் தோயும்திதி அமைப்பில்*
*சாற்றியிடு மங்கியிலே சங்காரம் – ஊற்றமா*
*ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோதம் முத்தி*
*நான்ற மலர்ப்பதத்தே நாடு."*

***என்ற திருப்பாடலால் உணர்த்துகின்றார்.***

மேலும் இத்திருக்கூத்தில்,

*"மாயைதனையுதறி வல்வினையைச் சுட்டுமலம்*
*சாய அமுக்கி அருள் தானெடுத்து – நேயத்தால்*
*ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்*
*தானெந்தை யார்பரதம் தான்"*

உடுக்கை ஏந்திய திருக்கையினாலே மாயையை நீக்கி, அக்கினி ஏந்திய திருக்கரத்தினாலே மலத்தைச் சுட்டு, ஊன்றிய திருப்பாதத்தினாலே மலம் மேலிடாமல் அமிழ்த்தி, தூக்கிய பாதத்தினாலே அருளே தனுவாக நிறுத்தி, கிருபையினாலே அபயதிருக்கரத்தினாலே ஆன்மாவை ஆனந்த வெள்ளத்திலே அழுத்துகிறதுதான் எம்முடைய பரமேசுவரனுடைய திருக்கூத்து முறைமை என்க என்றும் கூறியருளுகின்றார். இப்பாடலை உணர்த்தும் தலம் சிதம்பரமாகும்.

## கூத்தன் திருவுரு

சிவயோகிகட்கும், துறவிகட்கும், ஞானிகட்கும், தியானிப்போர்க்கும் தியான பூசை இவற்றின்நிமித்தம் நிஷ்களசிவம் சகளத்திருமேனி தாங்குகிறது. ஐந்தொழில் இயற்ற ஆனந்தநடராஜவடிவு தாங்குகிறது. இந்த ஐந்தொழிலும் தூலம், சூக்குமம், பரம் என்ற வகையால் மூன்றாகும்.

## பரபஞ்ச கிருத்தியம்

பரபஞ்ச கிருத்தியத்தியத்தை பராபரமாயுள்ள நிஷ்களசிவம் இலயாவஸ்தையில் தானாகவே செய்கின்றார்.

## சூக்கும பஞ்சகிருத்தியம்

சூக்குமபஞ்சகிருத்தியம் போகாவஸ்தையில் கூத்தனுருவம் தாங்கிய பரமசிவம், சிவம், சக்தி, நாதம், விந்து, வைந்தவம் இவற்றைப் பொருளாகக் கொண்டு நடிக்கின்ன்றது. இவருடைய சூக்கும நடனம் சிவதத்துவங்களின் விளக்கத்துக்காகவே யென்பது போதரும்.

## தூலமஞ்சகிருத்தியம்

தூலபஞ்ச கிருத்தியமாவது சதாசிவ தத்துவங்களுக்கு அதிபதியான சதாசிவ உருத்திரன், உருமேனி தாங்கி அதிகார அவஸ்தையில் இருக்கும் உருவாவுருவத் திருமேனிகொண்டு சாதாக்கியம்முதல் சுத்தவித்தையீறான

தத்துவங்களில் வதியும் அனந்தாதியர் பொருட்டாக அதோமாயைமுதல் மண்ணீறான தத்துவங்களைத் தோற்றுவிப்பது.

இவற்றையெண்ணும் போது சிற்சபேச மூர்த்தியான ஆனந்தநடராச மூர்த்தியும், ஏனைய தலங்களிலுள்ள அதிகாரசிவ மானமகேசுர மூர்த்தி பேதமான சபாபதியும் வேறான நிலைகளாம் என்பது தெளியப்படும்.

கூத்தன் திருமேனி ஐந்தெழுத்து மந்திர வடிவினது

*"சிட்டன் சிவாயநம வென்னும் திருவெழுத் தஞ்சாலே அவாயமற நின்றாடுவான்"*

*– உண்மைவிளக்கம்.*

ஐந்தெழுத்து மந்திரவடிவாய்த் தியானிக்கும் முறைமை.

சூக்கும பஞ்சகிருத்திய மந்திர வடிவான கூத்தன் திருமேனி.

| சூக்கும பஞ்சாக்கரம் | பஞ்சப் பிரமம் | திரு அங்கம் |
|---|---|---|
| சி.................................... | ஈசானம் ........................ | உடுக்கை ஏந்திய திருக்கை |
| வ.................................... | தற்புருடம் ..................... | வரத திருக்கரம் |
| ய.................................... | சத்தியோசாதம் ......... | அபய திருக்கரம் |
| ந.................................... | வாமதேவம் ................. | அக்கினி ஏந்திய திருக்கரம் |
| ம.................................... | அகோரம் ..................... | முயலகனை ஊன்றிய திருப்பாதம் |

இந்த ஐமுகங்களோடு கூடிய சதாசிவ நிலையைக் கடந்தது, நாதா நீதமான ஆநந்த நடேசமூர்த்தி திருமேனி.

தூல பஞ்சகிருத்திய மந்திர வடிவான கூத்தன் திருமேனி.

| தூல பஞ்சாக்கரம் | பஞ்சப் பிரமம் | திரு அங்கம் |
|---|---|---|
| ந.................................... | சத்தியோசாதம் ........... | ஊன்றிய திருப்பாதம் |
| ம.................................... | வாமதேவம் ..................... | திரு உதரம் |
| சி.................................... | அகோரம் ........................ | திருமார்பு (இருதயம்) |
| வ.................................... | தற்புருடம் ........................ | திருமுகம் |
| ய.................................... | ஈசானம் ........................... | திருமுடி (சிரம்) |

இறைவன் ஐந்தெழுத்துருவினன் ஆகும் போது அவனைவிட்டு நீங்காத அருட்சத்தியும் ஐந்தெழுத்துருவினள் ஆவள்.



| ஐந்தெழுத்து | பஞ்ச சத்திகள் | ஐந்தொழில் |
|---|---|---|
| ந.................................... | கிரியாசத்தி .................... | படைத்தல் |
| ம.................................... | ஞானசத்தி ...................... | காத்தல் |
| சி.................................... | இச்சாசத்தி ..................... | அழித்தல் |
| வ.................................... | ஆதிசத்தி ........................ | மறைத்தல் |
| ய.................................... | பராசத்தி ........................... | அருளல் |

இவ்வண்ணம் நிருத்தமூர்த்தி இலய சிவமாயும், மந்திர மூர்த்தியாக விளங்கும் போது போக மூர்த்தியாகிய சதாசிவமாயும், அதிகார மூர்த்தியாய் அனைத்துத் தலங்களிலும் சபாபதியாயும் விளங்குகின்றார். அதிகார மூர்த்தியை உபாசிக்கும் போது முறையே இலய சிவதியானம் வரையில் அநுபவத்தில் கொணர்தலே அமைவுடைத்தென்றறிக.

சிற்சபேசன் ஆடல் அகத்துக் கண்டவர் பிறப்பு இறப்பற்றபர இன்ப முடையவர்களாவர். இதுவே பரமுத்திப்பேறு.

*"ஓங்காரமே நல் திருவாகி உற்றதனில்*
*நீங்கா எழுத்தே நிறைசுடராம் – ஆங்காரம்*
*அற்றார் அறிவர் அணிதில்லை அம்பலத்தான் ஆடலிது*
*பெற்றார் பிறப்பற் றார்பின்".*

***– உண்மை விளக்கம்.***

*திருச்சிற்றம்பலம்.*

**தில்லைஊன நடனம்**

*"ஆதியாய் நடுவுமாகி அளவிலா வளவுமாகிச்*
*சோதியாய் உணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகிப்*
*பேதியா வேகமாகிப் பெண்ணுமாய் ஆணுமாகிப்*
*போதியாய் நிற்குந்தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி."*

**தில்லை ஞான நடனம்**

*"கற்பனை கடந்த சோதி கருணையே யுருவமாகி*
*அற்புதக் கோலம்நீடி அருமறைச் சிரத்தின்மேலாம்*
*சிற்பரவியோமமாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று*
*பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி."*

*சேக்கிழார், பெரியபுராணம்.*

*திருச்சிற்றம்பலம்.*

# 16. பன்னிரு திருமுறைகள் சைவசித்தாந்த நெறிக் கருவூலங்கள்

*திருச்சிற்றம்பலம்*

*திருமுறையே சைவநெறிக் கருவூலம்*
*தென் தமிழின் தேன்பாகாகும்*
*திருமுறையே கைலையின் கண் சிவபெருமான்*
*செவி மடுத்த செந்தமிழ் வேதம்*
*திருமுறையே நடராஜன் கரம் வருந்த*
*எழுதியருள் தமிழ்த் தெய்வ நூல்*
*திருமுறையே சொக்கேசன் மதி மலிவாய்*
*மலர்ந்தருளும் சிறப்பிற் றாமால்.*

*- தனிப்பாடல்.*

1. திருமுறை சைவசித்தாந்த நெறிக் கருவூலம்.
2. தென் தமிழின் தேன் பாகு.
3. சிவபெருமான் திருச்செவிமடுத்த செந்தமிழ் வேதம்.
4. தில்லை நடராஜன் திருக்கரத்தால் எழுதப்பட்ட தமிழ்த் தெய்வ நூல்.
5. சொக்கேசன் மதிமலி திருவாய் மலர்ந்த மொழித்திருமுகம்.

திருமுறைகள் உயிர்கள் வாழமுறை – நெறிவகுப்பன. இம்மை, அம்மை இரண்டிற்கும் சீரிய முறைகளை வகுக்குமேம்பாட்டால் அவற்றிற்குத் 'திரு' என்ற அடை கொடுக்கப்பட்டு திருமுறைகள் எனப்படலாயிற்று.

'திரு' என்ற பதம் சிவம், சக்தி, சைவம், செல்வம் என்னும் பொருள்களையுடையது.

'திருவே என் செல்வமேதேனே' என்பது அப்பரடிகள் தேவாரம் 'சென்றடையாத திருவுடையானை' என்பது சம்பந்தசுவாமிகள் தேவாரம்.

'சிவமே பெறும் திருவெய் திற்றிலேன்' 'சைவாபோற்றி' என்பன மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகம் முறை என்ற பதம் நீதி, உறவு, ஒழுக்கம், பழமை, வரிசை என்ற பொருள்களையுடையது.



திருமுறை, சிவநெறி, சைவநெறி, சைவநீதி என்ற பொருள்களையுடைய தாய் சைவநெறிக் கருவூலங்கள் எனப்படலாயிற்று.

### 1. திருமுறை சைவசித்தாந்த நெறிக்கருவூலம்

திருமுறைகள் பதி, பசு, பாச உண்மை, அவற்றின் பொது சிறப்பு (தடத்தம், சொரூபம்) இலக்கணங்கள், பாசநீக்கத்துக்குரிய சாதனங்கள், முத்திப்பேறு என்பன தெட்டத்தெளிவாக விளக்குவனவாகையால் அவை சைவசித்தாந்தக் கருவூலங்களாக அமைந்துள்ளன.

### 2. தென்தமிழின் தேன்பாகு

*'தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டான்'*
*'பாண்டி நாடே பழம் பதியாகக் கொண்டவன்'*
*'தென்னாடுடைய சிவனே போற்றி'*

என்ற திருமுறை சிவன் அவனையே பொருளாகக் கொண்டு அருளப்பட்டமையால் அவை தென் தமிழின் தேன்பாகு என்று சுவைத்துக் கூறப்படுகின்றது.

*"திருவே என் செல்வமே தேனே வானோர்*
*செழுஞ்சுடரே"* *– அப்பரடிகள் ஆறாந் திருமுறை.*

*"ஊனார் உடல் தலையில்*
*உண்பலி தேரம் பலன்"*

*"தேனார் கமலமே சென்றூதாய்*
*கோந்தும்பி"*

*"தேனேயின்னமுதமுமாய்த்*
*தித்திக்கும் சிவபெருமான்"* *–மாணிக்கவாசகசுவாமிகள் எட்டாந்திருமுறை.*

இவ்வடிகளால் திருமுறைகள் தேன்பாகு என்பது நோக்கத்தக்கது.

### 3. சிவபெருமான் திருக்கைலையின் கண்திருச்செவிமடுத்த செந்தமிழ் வேதம்.

பெரியபுராணத்தில் கூறப்படும் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராகிய சேரமான் பெருமானாயனார் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடன் திருக்கைலைக்கு எழுந்தருளிய போது சிவபிரான் பேரில் பாடிய திருக்கைலாய ஞான உலாப்பதிகத்தை அவர் படித்த போது சிவபிரான் செவி மடுத்துக்கேட்டார். அவ்ஞானவுலா பதினொராந் திருமுறையாக அமைந்துள்ளது.

4. தில்லை நடராஜர் திருகரத்தால் எழுதப்பட்ட தமிழ்த்தெய்வ நூல்

தில்லைச் சிதம்பரத்தில் மாணிக்கவாசக சுவாமிகள் அமர்ந்திருக்கும் போது நடராஜப் பெருமான் அவரிடஞ் சென்று அவர் பாடிய திருவாசகத்தையும் திருக்கோவை யாரையும் அவர் கூறத்தமது திருக்கரத்தால் எழுதியருளினார். இது சிவபெருமானால் எழுதிய மறை அவரால் முன்பு அருளப்பட்டது எழுதாமறை.

5. சொக்கேசன் மதிமலி திருவாய் மலர்ந்த மொழித்திருமுகம்

மதுரை சொக்கேசப் பெருமான் பாணபத்திரரின் மிடி நீங்குமாறு பொற்கிழி அளிக்கும் படி சேரமானுக்குக் கொடுத்த திருமுகப்பாசுரம் பதினொராந் திருமுறை. அத்திருமுறை வருமாறு.

*"அன்னம் பயில் பொழில் ஆலவாயின்*
*மன்னிய சிவன்யான் மொழி தரு மாற்றம்*
*பருவக் கொண்மூப்படியெனப் பாவலர்க்கு*
*உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகள்*
*செருமா உகைக்குஞ் சோலன் காண்க*
*பண்பால் யாழ் பயில் பாணபத்திரன் தன்போல்*
*என்பால் அன்பன் தன் பால்*
*காண்பது கருதிப் போந்தனன்*
*மாண் பொருள் கொடுத்து வரவிடுவதுவே"*

*–பதினொராந் திருமுறை.*

6. திருமுறைகேற்ற இறையருட் காரணிகள்

இறைவன் அருளிய வேதாகமங்களும் சைவசமயாசாரிகளானோர் அருளிச்செய்த பன்னிரு திருமுறைகளும், ஸ்ரீ மெய்சண்டர் ஆதியோர் அருளிச் செய்த மெய்கண்ட சாத்திரநூல்களும் சித்தாந்த சைவம் இன்னதென உணர்த்துவனவாகும்.

வேதம் பொது நூல் ஆகமங்கள் சிறப்பு நூல்கள். இவற்றில் முன்னதற்கும் பின்னதாக முரண்பாடுடையவை போல வாசகங்கள் காணப்படலாம். ஞானவான்களுக்கே அவ்வாசகங்களை முரணொழித்து ஒருமைப்படுத்திக் காண்டல் இயலும் சாமானியர்க்கு அங்கனங்காண்டல் அரிது. இதனாலே தான் வேதாகமங்களில் ஒருமை முடிபினைச்சாமானியரும் எளிதின் உணரும் பொருட்டு ஆளுடைய பிள்ளையார் ஆதியவர்களால் தேவாரம் ஆதிய நூல்கள் அருளிச் செய்யப்பட்டன. அப்பாடல்களை பொல்லாப்பிள்ளையார் அருள் பெற்ற நம்பியாண்டார் நம்பி திருமுறைகளாக வகுத்தார்.



முழுமுதற் கடவுள் யாரென்பதும் அவரது இயல்பும் அவரது செயல்களும், அடியார்கள் இலக்கணமும், அவர்களது செயல்களும் சரியை ஆதிவழிபாட்டு முறைகளும் இன்னோரன்ன சிவசமயச் செய்திகள் பன்னிரு திருமுறைகளிற் பரக்கக் கூறப்பட்டுள்ளன. வேதாகமங்கட்டு விரோதமின்றி உண்மையறிந் தொழுகுமாறு இசைத் தமிழாலும் இயற்றமிழாலும் இத் திருமுறைகள் சைவ நயங்களை மக்கள் புலன்கொள இசைக்கலாயின இவற்றால் தெரியாத இறைபொருள்களும் தெளிவுறுத்தப்பட்டன.

இச்சிறப்புக்கருதியே திருத்தொண்டர் புராணத்தை அருளிய சேக்கிழார் பெருமான் பன்னிரு திருமுறைகளின் முதலாவது திருமுறை அருளிய சம்பந்தப் பிள்ளையாரின் திருவவதாரத்தினை உணர்த்துகையில் 'வேதநெறி தனைத்தோங்கமிகு சைவத்துறைவிளங்க' என மந்திர தந்திர விளக்கம் தமிழால் எடுத்துக் கூறினார். திருநாவுக்கரசர் திருவவதாரங் கூறுமிடத்தும்.

'அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறி வாழ என்று காட்டியுள்ளார்.

சுந்தரமூர்த்தி நாயனார் திருவவதாரத்தைக் கூறுமிடத்து 'அருமறைச் சைவம் ஓங்க............ தீத கன்றுலகமுய்ய' என்று அருளுகின்றார்.

இவ்வாறெல்லாம் பன்னிரண்டாம் திருமுறை ஆசிரியர் பகருவதால் தேவாரம் முதலிய பன்னிருதிருமுறைகள் யாவும் திருமறை ஆகமங்களின் வழிநின்றே சைவநன்னெறியை உலகம் உய்யும் வகை ஓதுகின்றன. பன்னிரு திருமுறைகளும் வேதாகமங்களின் உண்மை விளக்கமேயாகும்.

வேதாகமங்கள் பிரணவத்தின் விரிவாகும் என்பர் அங்ஙனம்மே பன்னிரு திருமுறைகளும் அமைந்துள்ளன. முதற்திருமுறையின் முதலெழுத்து ஓகாரம் பன்னிரண்டாந்திருமுறையின் இறுதி எழுத்து மகரமெய் இவ்விரண்டையும் இணைப்பதால் பிரணவம் ஒலிக்கின்றமை காணலாம். இதனால் பன்னிரு திருமுறைக் கூற்றுகளும் பிரணவத்தின் விரிபொருளே.

பரந்த சைவசமய நோக்கினை அடிக்கடி பற்பலவகைக் கொள்கை களையுடைய சமயங்கள் தோன்றி மறைத்தெழ முயன்றன. இம்முறையில் புத்த சமயம் சில காலம் முனைந்தது. திருவாதவூரர் பெருவாதம் அதனை அடங்கச் செய்தது.

வடமொழி ஆகமங்கள் பல, முற்பட்ட சில கொள்கைகளைக் காட்டி ஒன்றுபட வியலாது மயல்லினை மலைவாற்றின சில காலம். இந்த மலைவுகளைத் திருமூலர் திருமந்திரம் ஏற்பட்டு ஒருவாறு சைவப் பொது நெறியைத் தெளிவித்து மலைவு தீர்த்தது.

தென்னாட்டில் சமணம் விரைந்து பரவி சைவநெறியை மறைக்கத் தலைப்பட்ட காலத்து இறையருளால் தேவாரமுதலிகள் அவதரித்துச் சிவநெறியினை இசைநெறியால் உணர்த்திப் பரவசச் செய்தனர்.

திருமால் அடியவர்கள் எனப்படும் ஆழ்வார்களும் தோன்றி முதற்பொருள் பற்றிய கருத்து வேறுபாடுகளை எழுப்பிவிட்டனர். இந்த மயக்கத்தை மீளவும் திருமாளிகைத்தேவர் முதலாய அருட்புலமை வாய்ந்தோர் இசை தெரியப் பாடி சைவ ஒளி பரப்பினர்.

இறைவன் அவ்வப்போதய நிலைகளுக்கேற்ப உறுதியும் ஞானமுங் கொண்ட அடியார்களை உலகில் தோற்றுவித்து அவர்களது உழைப்பால், தெய்வீகத்தால் மக்களை நன்னெறிப்படுத்தி சைவசமயத்தை சீர்தூக்கி ஆக்கம் புரிந்துள்ளான். இத்தகைய பெரு மக்களை நாம் சமய குரவர்களெனப் போற்றி வழிபடுகிறோம். இவர்களால் சைவசமயம் ஆகாயம் போல மாசற வியாபித்து விளங்குகிறது.

## 7. சைவவான்

ஆகாயத்தில் சூரியன் ஒளிருகிறான். தண்மதியும் நிலவுகிறது எண்ணற்ற தாரகா கணங்களுக்கிடையே அசுவினியாதி இருபத்தேழு நட்சத்திரங்களும் பிரகாசிக்கின்றன. இவற்றால் வானத்தினொளி எப்போதும் போற்றப்படுகிறது. இங்ஙனமே சைவவானும் போற்றப்படுகின்றது.

சைவானில் நீக்கமின்றி ஒளிதரும் கதிரோன் சிவமேயாவன். இச்சிவத்திடமாக உபதேசம் பெற்ற திருநந்திதேவரே சந்திரனுக் கொப்பாக விளங்குகிறார். வானவெளியிற் பன்னிரு இராசிகள் போலப்பன்னிரு திருமுறைகள் விளங்குகின்றன. இவற்றை அருளிச்செய்தவர்களான பெரியோர்கள் இருபத்தேழு நட்சத்திரங்களுக்கு நிகரான இருபத்தெழுவர் ஆவர். திருஞானசம்பந்தர் முதல் சேக்கிழார் வரையிலுள்ள இந்த இருபத்தெழுவரும் சைவசமய பரிபாலகர்களே யாவர் இவர்களால் சைவசமயம் அவ்வப்போது ஊட்டம் பெற்றது.

ஆகாயத்தை எவரும் மாசுபடுத்த முடியாது. ஆகாமும்மாசுபடுமியல்பின தன்று ஏனைய பூதங்கட்கு இடமளித்து எப்பொருட்கும் உள்ளும் புறம்மும் நின்று ஆதரவளிப்பதே ஆகாயம் இங்ஙனம் அமைவது சைவப் பெருஞ்சமயம் உள்பொருள் கொண்டு ஒன்றாய் வேறாய் உடனாய் மன்னி உபகரிக்கும் மெய்ச்சமயம் சைவசமயமேயாகும். இம்மெய்மையைத் திருமுறைகள் உணர்த்துகின்றன.



### அட்ட அநுட்டிப்பு

சைவசமயிகளின் அநுட்டிப்புக்கு பிரதான அம்சங்களாக விளங்குவன குருவடிவம், திருவெண்ணீறு, திருவைந்தெழுத்து, திருக்கோயில், அரன்உரு, (தடத்தம், சொரூபம்) திருவடி, அர்ச்சனை, திருத்தொண்டு என்னும் எட்டுமாம். இச் சிறப்பு அம்சங்கள் திருமுறைகளில் பரக்கக் காணலாம்.

அடங்கண்முறை முழுவதையும் பாராயணஞ் செய்ய உளங்கொண்ட சிவாலய முனிவர், அதன் தொகைகருதி அவ்விதம் செய்ய முடியாது இடருற்று மலைவெய்திய போது அகத்திய முனிவர் அடங்கன் முறையிலுள்ள தேவாரங்களை மேற்குறிப்பிட்ட எட்டு அம்சங்களிற் சுருக்கிக் கொடுத்து அவர் மலைவு தீர்த்தார். அச்சுருக்கமே அகத்தியர் தேவாரதிரட்டாகும்.

*"குருவுருவும் வெண்ணீறெழுத் தைந்துங் கோயில்*
*அரனுருவு மென்தலைமே லாக்கும் – திருவடியும்*
*சிட்டான அர்ச்சனையும் தொண்டும் சிவாலயர்கென்*
*றிட்டார் அகத்தியனார் எட்டு.*

## 9. ஞான உபதேசம் செய்யும் திருமுறை ஆசிரியர்கள் அறிவாற் சிவனேயாவார்

உயிர்கள் உள்நெக்குருதி வழிபடுவதற்குத் துணைபுரிவன திருமுறைகளே. திருமுறைகள் வேறு, அவற்றை அருளிய ஞானாசாரியர்கள் வேறு எனல் ஆகாது. ஞானப்பாலுண்டு மலர்ந்த திருமுறையும் ஞானசம்பந்தரும் வேறென்றல் முடியுமோ? அவ்வாறு எண்ணுவது பிழையே அந்த ஞானாசாரியர்களும், நம் இறைவனும் வேறின்றி நின்று உயிர்களுக்கு ஞான உபதேசம் புரிகின்றனர். அவர்கள் அறிவாற் சிவனே என்பது தேற்றம் "எனதுரை தனதுரையாக ஏறுகந்தேறிய நிமலன்" என்பது சம்பந்தர் திருமுறைப் பாசுரம்.

திருஞானசம்பந்தப்பெருமான் நாமெல்லாம் உய்வதற்காகத்தான் நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பினார்கள். "நற்றமிழ்வல்ல" என்று அடையெடுத்து அருள்பெற்ற இந்தப்பெருமான் ஞானப்பால் உண்டு தம்மோடு அமையவில்லையாம் ஞானப்பால் உண்டதனை நாவால் மறித்து நம்மனோர்க்கு செவியமுதாய் உண்ணுதற்குத் தேவாரமாக வடித்தனர்.

*"நாவான் மறித்தெம் செவியமுதாய் வார்த்தபிரான்"*
என்று சிவப்பிரகாசசுவாமிகள் கூறுங் கருத்துக் கொள்ளத்தக்கது.

எல்லோரும் உய்ய வேண்டும் என்ற கருணை திருமுறை ஞான ஆசாரியப் பெருமக்களுக்கு இருந்தது. ஆம்! அவர்கள் தான் பெருமக்கள் சேக்கிழார் பெருமக்களென்று இந்நல்லாசிரியர்களைத்தான் குறிப்பிடுகின்றார்.

## 10. ஐந்தெழுத்துச் சாதனை - தியானம்

ஐந்தெழுத்தின் பெருமைகளைத் திருமுறை ஆசிரியர்கள் திருமுறைதோறும் கூறியிருக்கின்றனர். தேவார முதலிகள் மூவரும் ஐந்தெழுத்துப் பதிகங்களைச் சிறப்புற அமைத்துள்ளனர்.

*"ஐந்தெழுத்துணராதவர் நெஞ்சின் இருளைப்போல் நீண்டவான் இருண்டது'* என்று அருளுகிறார் சேக்கிழார் பெருமானார்.

*"இரு வினைப்பாசமாம் மலக்கல் ஆர்தலின் வருபவர்க்*
*கடல் வீழ் மக்களேறிட அருள் மெய்யஞ் செழுத்து"* **என்றும்** அருளிகின்றார்.
சிவஞானசம்பந்தப் பெருமானாரும்,

*"சோதி முத்தின் சிவிகை சூழ்வந்து ஐந்தெழுத்தோதி*
*ஏறினார் உய்ய உலகெலாம்"*
என்ற பகுதியால் ஐந்தெழுத்துத் தியானம் உடையார் என்பது அறியலாம்.

*"நற்றவா உனைநான் மறக்கினும்*
*சொல்லுநா நமச்சிவாயவே"*
என்பது சுந்தரமூர்த்திப் பெருமானார் திருமொழி.

*"நாலினுங் கருங்கலம் நமச்சிவாயவே"*
என்பது நாவுக்கரசப் பெருமானின் அருள் அநுபவமொழி.

*"நானேயோ தலஞ்செய்தேன்*
*சிவாய நமலெனப் பெற்றேன்"*
என்பது மாணிக்கவாசகப் பெருமானின் அருள் திருவாக்கு.

ஐந்தெழுத்துத் தியானம் ஒன்றாலேயே இவ்வுலக துன்பங்களனைத்தையும் தொலைக்கலாம். பேரின்பவாழ்வு பெறலாம். ஐந்தெழுத்துத்தியானம் நெஞ்சில் வளரவேண்டும். வளர்ப்பதற்குத் திருமுறை துணைபுரியும் சிவதீட்சை பெற்றவர்களே திருமுறை ஓதுதற்குரியவர்கள். ஐந்தெழுத்துத்தியானமுடையவர்கள்.



## 11. திருமுறையின் இம்மை அம்மைப் பேறுகள்

திருமுறைகளின் பெருமையை நம்மனோரால் முற்ற உணர முடியுமோ? இருப்பினும் அவற்றைச் சிந்திக்க அவனருளே உற்றதுணையாய் நிற்கிறது. அவனருட்டுணையால் இப்பெருமைகளைச் சிந்திக்க முற்படுவோமாக.

திருமுறைகள் செல்வந்தரும், நிலையுடைய செல்வந் தரும் பெருஞ்செல்வந்தரும் இதனை ஆளுடைய பிள்ளையார்கள் அழகாக அருளிச் செய்கின்றார்கள். அச்சீரிய செம்மொழி பின்வருமாறு,

*"அலைபுனல் சூழ் பிரமபுரத்து அருமனியை அடிபணிந்தால்*
*நிலையுடைய பெருஞ்செல்வம் நீடுலகிற் பெறலாமே"*
இதை விட வேறென்ன வேண்டும்?
*"பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை"* என்று எண்ணியிருப்போர்க்கு
*இப்பொன்னுரையே போதாதோ?*
*"பொன்னும் மெய்ப்பொருளுந் தருவானைப்*
*போகமுந் திருவும் புணர்பானை"*
என்று ஆளுடைய நம்பிகளும் அருளிச்செய்கின்றார்கள்.

*"இம்மையே தரும் சோறும் கூறையும்*
*ஏத்தலாம் இடர் கெடலுமாம்*
*அம்மையே சிவலோக மாள்வதற்கு*
*யாதும் ஐயுறவில்லையே"*
என்று ஆளுடைய நம்பி அருளுகின்றார்.

சோறு, உடை இரண்டையும் இம்மைக்கும், சிவலோகத்தை அம்மைக்கும் அருளும் அருளிப்பாட்டை இங்கு காணலாம். இவ்வுலக வாழ்க்கையிலே தேவையெனக் கருதப்படும் எல்லாம் திருமுறையாற் பெறலாம் இது நிச்சயம்.

முப்பொருள் உண்மையை இரண்டு பெரும் பிரிவில் காட்டும் சிவஞான போதம் என்னும் சித்தாந்த செந்தமிழ் நூற்பனுவலை உபகரித்து அருளிய புறச்சந்தானத்து முதற் குரவர் ஸ்ரீ மெய்கண்டாரும், சம்பந்தப்பிள்ளையார் அருளிய இரண்டாம் திருமுறையில் உள்ள இரண்டாம் திருமுறைப் பாடலால் அவதரித்தார் என்றால் திருமுறையின் திருவருட்பெருமை எத்தகைத்து?

## 12. திருமுறைப்பனுவல்கள் தரும் பன்னிருமுறை

*"முறையென்றும் நாமம் தனக்கேயுரிய*
*முன்னான்குமறைகள்"* என்பது முதுமொழி

அவைவருமாறு

| | | |
|---|---|---|
| 1. | முடித்துக்கூறல் | முதலாந்திருமுறை |
| 2. | பதி, பசு, பாசத் தொடர்பு கூறல் | இரண்டாந்திருமுறை |
| 3. | நியதிநிகழ்த்தல் | மூன்றாந்திருமுறை |
| 4. | நெறிகாட்டல் | நான்காந்திருமுறை |
| 5. | கிரமம்கிளத்தல் | ஐந்தாந்திருமுறை |
| 6. | ஆன்மவகை அறிவித்தல் | ஆறாந்திருமுறை |
| 7. | தரம்தெரிவித்தல் | ஏழாந்திருமுறை |
| 8. | பழமைபகரல் | எட்டாந்திருமுறை |
| 9. | வேதாகமக் கொள்கைக்கு இடமளித்தல் | ஒன்பதாந்திருமுறை |
| 10. | சாலமுறை கழறுதல் | பத்தாந்திருமுறை |
| 11. | விண்ணப்பநெறி விளம்பல் | பதினொராந்திருமுறை |
| 12. | இறையடியார் புகழ் இசைத்தல் | பன்னிரண்டாந்திருமுறை |

இப்பன்னிரு முறைகளும் பன்னும் பனுவல்களே பன்னிரு திருமுறைகளாக அமைந்தன.

எனவே,

ஒரு திருமுறைக்கு ஒன்றாகவேனும் தேர்ந்து நாடோறும் பன்னிரு பாடல்களையாவது தேவராரப் பண்ணோடு பாடுவோமாயின் நமது வினைகள் யாவும் நீங்கும். பத்தியும், ஞானமும் விளங்கும். பன்னிருதிருமுறைகளும் பத்திநீர் நிறைந்த ஞானசாகரம்.

*"ஆசையறாய் பாசம் விடாய் ஆனசிவபூசை பண்ணாய்*
*நேசமுடன் ஐந்தெழுத்தை நீ நினையாய் – சீசீ*
*சினமே தவிராய் திருமுறைக ளோதாய்*
*மனமே யுனக்கென்ன வாய்"*

*தருமையா தீன முதற் குரு ஞானசம்பந்தபரமாசாரியார்.*

***திருச்சிற்றம்பலம்.***

வி. சங்கரப்பிள்ளை
*சைவ சித்தாந்த ஆசிரியர்*
*கீரிமலை சிவ நெறிக் கழகம்.*

*பன்னாலை*
*தெல்லிப்பளை*



# சுவாமி மாணிக்க வாசகரின் திருவாசகத்தில் ஒரு வாசகம்



துதி

*நாடிப் புலங்கள் உழுவார் கரமும்*
*நயவுரைகள்*
*தேடிக் கொழிக்குங் கவிவாணர் நாவும்*
*செழுங்கருணை*
*ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சும்*
*உவந்து நடம்*
*ஆடிக் களிக்கும் மயிலே! உன்பாதம்*
*அடைக்கலமே.*

பன்னிரு திருமுறைகளில் அடங்கன் முறை முதல் ஏழு திருமுறைகள் இஃது ஒன்றிலும் சேராவிட்டாலும் திருமுறைகளை ஓதி உணர்ந்தவர்கள். மாசற்றசோதி மணிவிளக்கான பெரியோர்கள் திருவாசகத்தைக் கனவிலும் மறக்கமாட்டார் என்பது எனது திண்மையான உண்மை. பரசமயப் போதகர்களும் உபதேசியார் அவர்களும் சபையைச் சிறப்பிப்பதற்கு முன்னோதுவது திருவாசகமே திருவாசகத்துக்கு உருகாதார் மற்றை ஒரு வாசகத்துக்கும் உருகார். இப்பாவின் இனிமை மேலானது சொல்லடுக்குகளால் உண்டாகிய பொருள் பொதிமை மனத்தை உருக்கும்.

"பாரொடு விண்ணாய்ப் பரந்த எம்பரனே" என்று ஒருவர் உணர்ச்சிப் பரவசத்தால் பாடினாராகில் கண்ணில் இருந்து நீர் தாரை தாரையாக வருவதைக் காணலாம் நாம் படிக்காவிட்டாலும் படிப்பவர் பரவசப்படும் போது நாமும் ஓரளவு பரவசப்பட வேண்டும்.

"அம்மையே யப்பா ஒப்பிலாமணியே" என்று அழைக்கும் போது கல்நெஞ்சம் கரைந்து உருகும். நாமும் சற்று நின்று சிந்தித்தால் தெரியும் எழுவாயில் சிவபுராணத்தை அரங்கேற்றி சிவனை எழுப்பி அதன் பின்னர் அவர் நமக்குச் செய்ய வேண்டியவற்றை நேருக்கு நேர் நின்று சொல்வதுபோல் ஒழுங்குபடுத்திய பெருமை மிக்க பதிப்பிற்குரியது.

சிவபுராணம்:–

*"தேசுறுமா ணிக்கமெனச் சிறந்ததிரு வாசகத்திற்*
*பேசதிருச் சிவபுரா ணத்தகவற் பெருமை சொலி*
*லிசர்தமக் இயல்பான திருநாம முதலெவையு*
*மாசறவே வாழ்கவென வாழ்த்துகின்ற வருட்குறிப்பாம்".*

முதலில் நாம் சைவ சமயம் காட்டிய வழிவகைகளைக் கண்டு கொண்டோம். அதன் பின் அதன் சித்தாந்தம் எப்படி இருக்கிறது. இது திருவாசகத்தை சிறப்பிப்பது எவ்வாறு அதிலும் சிவபுராணத்தில் உட்புகுந்த வழி என்ன என்பதனை நினைவு கூருவோம்.

நமச்சிவாய என்னும் பஞ்சாக்ஷரம் அல்லது இறைவனைப் பற்றிய ஐந்தெழுத்து வேதத்திற்கு (இருதயம்) ஆகிறது. உயிருடன் இயங்குகிற உடலில் நடுநாயகமாக இருப்பது இருதயமே. அது வாழ்வுக்கு இன்றியமையாதது. இதுவே வைத்தியரை இன்னமும் மருந்து செய்யலாமா? இல்லையா? என்பதை காட்டி வழிப்படுத்துவது. இருதயம் இருந்தால் எல்லாம் இருந்ததற்குச் சமம்மூளை இயங்கா விட்டாலும் வாழ்வு நடந்தேறும் ஆனால் இருதயம் வேலை செய்யாவிட்டால் ஒன்றுமே இயங்காது.

தொடக்கம் நமச்சிவாயம் இச்சொல் எல்லோர்க்கும் இலகுவாக இருக்கிறது. இதனுடைய பொருள் தொழில்படுவது வேறு வேறானது. இதை இடையறாது உச்சரிப்பவர் சிவசொரூபம் ஆகின்றார். வேதமோதுவது கஷ்டம் அதற்கு அதிகாரியாக வருவது அதிலும் கஷ்டம் எல்லார்க்கும் பொதுவான இச்சொல் எல்லோர்க்கும் சொந்தமானது. ஆனால் மானுட தன்மையில் பக்குவப்பட்டுக் கொண்டு இதை ஓதினால் பயமின்றி பலனடையலாம்.

தாயைக் கூவியழைக்க சேய்க்கு உரிமை உண்டு அதற்கு தகுதி வேண்டியதில்லை. ஆனால் அத்தாயின் அன்பு எவ்வாறிருக்கிறது என்பது தான் பிரதானம். கடல் பரந்து தன்மயமாயிருந்து கொண்டு தன்னை வந்தடைகிற நீரையெல்லாம் அது தன்மாயமாக்குவது போன்று சிவனார் தம்மை வந்தடை பவர்களையெல்லாம் சிவமாக்குகிறார்.

பரம்பொருள் நாதத்திற்கு அப்பாற்பட்டதாய் இருக்கிறது. பின்பு அதே பொருள் நாதவடிவமாய் நாதப் பிரம்மமாய் இருக்கிறது. பிரபஞ்சத்தில் ஜடப்பொருள்களாய் இருப்பவை கீழானவை. சேதனமாய் அல்லது உயிர்களாய் இருப்பவை மேலானவை. அவையாவும் வெவ்வேறு வகைப்பட்ட தோற்றங்கள். மந்திரங்கள் என்பன ஓசையின் வயப்பட்டுவிரிபடுகின்றன. நம: சிவாய: என்பது மிகமுக்கியமானது. ஆகையால் அது வேதத்தின் உட்பொருள் அதை ஓதி உய்வடைந்த மாணிக்கவாசகர் எடுத்த எடுப்பில் மூலமந்திரமாக வைத்திருப்பது மிகப் பொருத்தமானது. இம்மந்திரத்தை ஓதுவதற்கு நேரம் வாழ்க்கையில் ஒதுக்க வேண்டியதில்லை. எப்போதும் எங்கேயும் ஓதிக்கொண்டேயிருக்கலாம்.



வித்து வேறு விருஷ்சம் வேறு என்பதல்ல வித்துவே விருஷ்சமாகிறது. சூக்குமநிலையில் இருப்பது வித்து தூல நிலையில் இருப்பது விருஷ்சம் நமசிவாய என்னும் நாத வித்து அதிசூக்குமமானது. அது காரணநிலை பிரபஞ்ச மனைத்துமாய் அதை ஆண்டுவருகிற மூர்த்தியோ காரியாயகலை. அவருடைய ஆளுகைக்கு அனைத்தும் உட்பட்டிருப்பதால் அவரே நாதன் தலைவன் எனப்படுகிறாரே. இவ்வாறே ஒரு க்ஷணமும் என்மனதிலின்று பிரியாதவனது திருவடி வாழ்க.

"இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க" என்பதாகும். பரம்பொருள் நீக்கமற நிறை பொருள் என்றும் அதன் சாகசத்தை சாதகன் தனது உள்ளத்துள் உணர்ந்து உபாசிக்க வேண்டும். அரசன் ஒருவன் தனது தலைப்பட்டணத்தில் மாளிகையில் சிம்மாசனத்தில் வீற்றிருப்பது போன்று பிரமபுரம் என்றழைக்கப்படும் இவ்வுடம்பில் தவிசாசலயம் என்னும் இருதய கமலம் சிம்மாசனத்தில் பரமன் வீற்றிருக்கிறான்.

திருவண்டப் பகுதியில் 115 – 119 வரை உள்ள விளக்கம் மிகமேலானது.

*"பூவின் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்*
*ஒழிவற நிறைந்து மேவிய பெருமை*
*இன்றெனக் கெளிவந் தருளி*
*அழிதரும் ஆக்கை யொழியச் செய்தவொண் பொருள்*
*இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி"*

மலர், தோன்றும் பொருள், நாற்றம் நுட்பமாய்த் தோன்றாதுள்ளது. முகரவல்லார்க்குத் தோன்றும் அங்ஙனமே இறைவன்தோன்றாச் சார்பிலிருந்து அன்பர்க்கே புலப்படுவான். பிறபொருட் சார்பும் எளிதினறியப் படுதலுமிலன் என்பர். உயர்ந்து என்றார் திருவாசகத்திற் பிறிதோரிடத்திலும்,

"உற்ற வாக்கையினுறுபொருள் நறு மலரெழுதரு நாற்றம் போற் பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள். என்று கூறுகிறார். தனது அண்டை வியாபகப் பெருமையை இறைவன் தனக்கறிவுறுத்தியமை குறித்தார். சிவஞானத்தால் அது உணரப்படுதலின் பிறவியறுத்தற்கு ஏதுவாயிற்று. தமதுள்ளத்தே வீற்றிருந்தமை கூறுவார் எனிவந்து இருந்தனர் என்றார்.

போற்றித்திருவகவல் – (சகத்தின் உற்பத்தி)

*"நான் முகன் முதலா வானவர் தொழுதெழ*
*ஈரடியாலே மூவுலகளந்து*
*நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்*
*போற்றி செய்கதிர் முடிந்திரு நெடுமாலன் (று)*

*அடிமுடி யறியும் ஆதரவதனிற்*
*கடு முரண்ஏன மாகிமுன் கலந்து*
*ஏழ்தலம் உருவ கிடந்து பின் எய்த்து*
*ஊழி முதல்ல சயசயவென்று*
*வழுதியுங் காணா மலரடியிணைகள்*
*வழுத்துதற் கெளிதாய் வார்கடல் உலகினில்".*

தேவருட் சிறந்த திருமால் யானெனதென்னுஞ் செருக்கறாமையால் இறைவன் நிருவடிகளை காணப்பெறாமை தெரிகிறது. அரி ஒரு குள்ளப் பிராமண வடிவமெடுத்துச் சென்று மூவடிமண் வேண்டி ஈரடியாலே உலகனைத்துமளந்து மூன்றாவது அடிமண் கிடையாமையால் மாவலி தாளை தலையடிவைத்தகதை வெளிப்படை. நிலைப்புக்கடவுளாதலின ஐம்புலனும் தத்தம் நிறைவைப் பெறுமாறு இயற்றவல்லவனாதலினால் ஐம்புலன் மலர் என்று கூறினார். திருமாலுக்கு மேலாக உள்ள கடவுள் ஐயன் ஆதலில் அவன் முதலாக உள்ள பிறதேவரையும் கூறினார்.

படைப்புக்கடவுள் முதலாகவுள்ள தேவர்களெல்லாம் வழிபட்டுச் செல்லவும் வாமன அவதாரத்திலே தனது இரண்டடிகளாலும் மூவுலகத்தையும் அளந்து நான்கு திசைகளிலுமுள்ள முனிவர்களும் தமது ஐம்புலன்களும் மகிழ்ச்சியடையும்படியாக வணக்கஞ் செய்யப்பெற்ற ஒளிவீசும் திருமுடியினையுடைய பெருமைமிக்க திருமால் (இறைவன் அனற்பிழம்பாய் நின்ற) அக்காலத்திலே ஈசன் திருமேனியின் அடிமுடியைக்காணும். விருப்பமிகுதியால் வலிமை மிகுந்த பன்றி வடிவெடுக்க (ஆயனுக்கு முற்பட்டு கீழேழுலகினும் புகுந்து ஊடுருவத் தோண்டிப்பின்னர் (கீழேசெல்ல இயலாது) களைப்படைந்து (எம்பெருமானை நோக்கி) உலக முடிவுக்கு முதல்வராயுள்ளவனே உனக்கே வெற்றி வெற்றி என்று துதித்து வணங்கியுங் காணப்பெறாத திருவடிகள் வழிபடுவதற்கு எளிதாக வெளிப்படும். இந்த நெடுங்கடல் சார்ந்தவுலகினிலே.

இவ்வாறே போற்றித் திருவகவல், திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை, திருவம்மாளை, திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி போன்றவற்றில் சிவனின் பெருமையும் சிவன் அடியார்களுக்காக ஆளுடையில் வந்தார் என்பதையும் அறியலாம்.

இறைதத்துவத்தை நாம் எத்தனைகாலமிருந்து ஆராய்கிலும் அதுவரை யறையின்றி விரிந்து செல்லும் பெருமை பெற்றது. அநுபூதிமான்களின் அனுபவமும் இதுவே. தமிழ் இலக்கியங்களை முதன்முதலாக



சைவஇலக்கியங்களாக நெறிப்படுத்தியவர் நக்கீரர் ஆவர். கடைச் சங்கத்தலைவராக இருந்த நக்கீரருக்கும் தனது அடியாராகிய தருமிக்கு பொற்கிழியைப் பெற்றுக் கொடுப்பதற்காக புலவர் வேடந்தாங்கி இருந்த சிவனுக்குமிடையே நடந்த சொற்போரில் திருப்புமுனையாக எழுந்த நூல்களே நற்கீரரின் திருமுருகாற்றுப்படை கயிலைபாதி கானத்திபாதி, போற்றிக்கலி வெண்பா முதலான நூல்களாம். நக்கீரரே அடியவரை இறைவனிடம் வழிப்படுத்தும் வகையில் திருமுருகாற்றுப்படை முதலான சைவ இலக்கியங்களை நெறிப் படுத்திய வருமாவர் இவ்வனுபவங்களுக்குப் பின் திருமுருகாற்றுப்படை நக்கீரர் எடுத்தியம்பிய இறைதத்துவம்

*"பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள்"*

***(திருமுருகாற்றுப்படை. வரி 274 )***

*"நின்னில் வெளிப்படுவதே முலகும்*
*மீண்டே ஒருகால் ஒளிப்பதுவும்"*

***(கயிலைபாதி கானத்திபாதி யந்தாதி. செய் 46)***

என உலகத்தினை இயற்றி நிற்கும் தத்துவமாகும். இறைவனை "அவிரொளி" வடிவினன் என முதலில் எடுத்தியம்பியவரும் இவரே. இறைவன் உயிர்களுக்காக அறச்செயல்களையும், மறச்செயல்களையும் செய்வதற்காக எடுத்த பலவகை வடிவங்களை வடநாட்டு, தென்நாட்டு சைவ இலக்கியமரபை யொட்டிப் போற்றியுள்ளனர்.

நக்கீரருக்குப்பின் வாழ்ந்தவரான காரைக்கால் அம்மையார் பெற்றிருந்த இறையனுபவங்களும் இத்தகையதேயாம். இறைவனின் சொரூபவடிவினை (உண்மைவடிவினை) அறிய ஆவல் கொண்டவராக இறைவனிடமே

*"அன்றுந் திருவுருவங்காணாதே ஆட்பட்டேன்*
*இன்றுந் திருவுருவங் காண்கிலேன் – என்றுந்தான்*
*எவ்வுருவோன் நும்பிரான் என்பார்கட் கென்னுரைப்பேன்*
*எவ்வுருவோ நின்றுருவம்அது"*

***(அற்புதத் திருவந்தாதி)***

எனவினவுகிறார் இவ்வாறே மாணிக்கர் முதலிய சிவநேசச் செல்வர்களின் அனுபவங்களாகும்.

*"இருகை யானையை ஒதிதிருந் தென் உளச்*
*கருவையான் கண்டிலேன் கண்ட(து) எவ்வமே*
*வருக வென்று பணிந்தனை வானுளோர்க்*
*கொருவனே சிந்திலேன் சிறப்பன் உண்ணவே"*

விண்ணவர்க் கெல்லாம் தலைவனாகிய ஒருவனே இரண்டு துதிக்கை களையுடைய யானையைப் போன்றிருந்து என்னுடைய யுளத்தின் மூலத்தை அடியேன் காணாதிருந்தேன்யான் கண்டனுபவித்த தெல்லலாம் துன்பமே. அங்ஙனமாயினும் நீ என்னை வாவென்று கட்டளையிட்டருளினை நிதமும் இன்பத்தை நுகர வல்லேனல்லேன் (துன்பத்தையே) நுகரவல்லேன்.

*"உண்டோ ரொண்பொருள் என்றுணர்வார்க்கெல்லாம்*
*பெண்டிர் ஆண் அலி என்றறி யொண்கிலை*
*தொண்டனேற் குள்ளவாவந்து தோன்றினாய்*
*கண்டுங் கண்டிலேன் என்னகண் மாயமே"*

உலகிற்கு முதல்வனாகிய ஒரு அறிவொளிப் பெரும் பொருள் உண்டென்று அறிந்து உன்னை நாடுவார்களுக்லெலாம் நீ பெண்ணோ ஆணோ அலியோ என்று உறுதியாக அறியக்கூடாமலிருக்கின்றனை. ஆனால் அடியேனுக்கு நீஉண்மையாயிருக்கின்ற வாறே தானே வந்து காட்சி கொடுத்தாய் உன் திருவருட்காட்சி பெற்று உன்னை அனுபவிக்கப் பெற்றிலேன் இது என்ன கண்மயக்கமாயிருக்கிறது.

"மாற்றம்மனங்கழிய நின்றமறையோனே" (சிவபுராணம்)
"சொற்பதங் கடந்த சொல்லோன்" (திருவண்டப் பகுதி III)
"சொற்பதங் கடந்த அப்பன்" (அச்சோப்பதிகம் 6)
"நின்சீர்புகழுமா றென்றறியேன்" (சிவபுராணம்)
"உன்னை ஓலமிட்டலறி உலகெலாந் தேடியுங்காணேன்" (அருடபத்துக)
என இறைவனின் சுட்டிறந்த தன்மையைப் போற்றி நின்றனர். இந்நிலையிலேயே சம்பந்தரும். அப்பரடிகளும் இருந்தார்கள். இதனைச் சம்பந்தர்.

*"இன்னவுரு வின்னநிற மென்றிவ தேரிது நீதிபலவும்*
*தன்னவுரு வாமென மிகுத்தவ னீதியொரு தானமர்விடம்*
*முன்னை வினை போய் வகையிருள் முழுதுணர்வு முயல் கின்றமுனிவர்*
*மன்னவிரு போது மருவித் தொழுது சேரும் வயல் வைகலிலே"*

என்றும்.



திருநாவுக்கரசர்,

*"மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சி*
*மயானந்தான் வார்சடையா னென்னி னல்லான்*
*ஒப்புடையனல்லன் ஒருவனல்லன்*
*ஒரு ரனல்லனோ ருவமனில்லி*
*அப்படியு மந்நிறமு மல்வன் னமு*
*மவனருளே கண்ணாகக் காணினல்லால்*
*இப்படியனிந் நிறத்தனிவ் வண்ணத்தன்*
*இவனிறைவ னென் றெழுதிக் காட்டொணாதே"*

என்று கூறுவதனால் உய்த்துணரலாம்.

கச்சியப்பசிவாசாரியாரும்

*"ஞானந் தானுரு வாகிய நாயகனியல்பை*
*யானும் நீயும் இனசத்து மென்றாலஃதெளிதோ*
*மோனந் தீர்கலா முனிவகுந் தேற்றிலர் முழுதுந்*
*தானும் காண்கிலன் இன்னமுத் தன்பெருந் தலைமை"*

***(கந்தபுராணம் சூரமைக் 128)***

இவ்வற்றுள் இறையின் தத்துவத்தை அளத்தற்கரியது என்று கண்டோம். திருக்குறள், தொல்காப்பியம் முதலியவற்றால் மறைபுலனாக உணர்த்தப்பட்ட தென்பது புராணம்.

இறைவன் பொது இயல்புகளை வேதங்கள் இல்லை, இல்லை என்று கூறிக்கொண்டிருந்த நிலையில் மாணிக்கவாசகர் தோன்றி மறைத்தவாறு அறியாமறையோனே, வேதம் நான்கும் ஓலமிட்டு உரைக்கும் நின்னை. வேதங்கள் ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே. என்றியம்பினார் முதல்வனின் இயல்பை தொல்காப்பியம்

*"வினையின் நீங்கிய விளங்கிய அறிவின்*
*முனைவன் கண்டது முதல் நூல் ஆகும்."* ***(தொ 649)***

ஆனால் மாணிக்கவாசகரே முதல் முதலாக ஆகமங்கள் தோற்றுவிக்கப்பட்ட வரலாற்றையும் அவை கூறும் நுண்கருத்துக்களையும் எடுத்தியம்பியராவார். மற்றும் இறைவனே ஆகம வடிவில் உயிர்களுக்கு அருள் புரிகின்றான் என்பதனையும் வழியுறுத்துகிறார். இக்கருத்துக்களை "மன்னுமாமலை மகேந்திர மதனிற் சொன்னவாசகத் தோற்றுவித்தருளியும் என்று சீர்த்திருவகவல் 9–10 வரிகளில் "மறையினால் அயனால், மாலால், மனத்தினால், வாக்கால் மற்றும் குறைவிலா அளவினாலும் கூறக் வொண்ணாதாகி நின்ற இறைவனார் அருளினார் ஆகமத்தை அறியலாம்.

(என்று சி. சித்தியார்) கூறுகிறார் இந்த ஆகமங்களை தமிழில் வடிக்க இறைவன் தனக்கருளியிருக்கிறார்.

என்பதினை,

*"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்*
*தன்னை நன்றாக தமிழ் செய்யுமாறே"* *(திருமந்திரம் 81)*

இவைகளில் இருந்து சைவர் சிவத்தை முழுமுதற் கடவுளாகப் போற்றினார் என்பது வெள்ளிடை மலை மணிமேகலை காலத்திலே சைவ சித்தாந்திகள் தமது இறைத் தத்துவத்தை,

*"இருசுடர்வோடு இயமனான் ஐம்பூதமென்று*
*எட்டு வகையும், உயிரும் யாக்கைமாய்*
*கட்டி நிற்போனும் கலையுருவினோனும்*
*படைத்து விளையாடும் மாண்பினோனும்*
*துடைத்து துயர்நீர் தோற்றத் தோடும்*
*தின்றோனே இறைவன் ஆகும்".*

என எடுத்து கூறியுள்ளார்கள். இக்கருத்துக் (மணி 27 வரி 86–95) கொண்டே காரைக்காலம்மையாரும்.

அவனேயிருஞ்சுடர் ஆகாசமுமாவான் அவனே புவி, புனல், காற்றாவான் – அவனே இயமானனாய் அட்ட மூர்த்தியுமாய் ஞான, மயனாகி நின்றானும் வந்து

*(அற்புதத் திருவந்தாதி 21)*

மாணிக்கவாசக சுவாமிகளும்,

*"நிலநீர் நெருப்புயிர், நீள்விசும்பு, நிலாவப் பகலோன்*
*புலன் ஆய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்*
*உலகேழ் எனத்திசை பத்தெனத் தான் ஒருவனுமே*
*பலவாகி நின்றவா"* *(திருக்கோணக்கம் 5)*

என ஆகமங்கள் அருளிய முறையிலே எடுத்தியம்பினார். இவரை இறைவன் ஆகம வடிவிலே நின்று தடுத்தாட் கொண்டான் என்று கூறுவதனால் இவர் ஆகமகருத்துக்களை முற்றாகத் தெரிதிருந்தார் என்பது உறுதியாம்.

மாணிக்கவாசகர் கல்வி கேள் விகளிற் சிறந்திருந்தமையினால் பாண்டிய மன்னனுக்கு மந்திரியாகும் பாக்கியத்தைப் பெற்றிருந்தார் ஆடம்பர வாழ்விலும் இளமை இன்பங்களைப் பெறவேண்டு மென்ற துட்பாசம் உந்தப்பட்டிருந்தார். ஆனால் நடந்ததோ அவர் எதிர்பாராதென்று இவர் முற்பிறப்பில் இறைவனின் கணநாதர்களுள் ஒருவராக இருக்கையில் கவனக்குளிகையையிழந்ததினாலே இறைவன் அவரைப் பூமியில் அவதரிக்கச் செய்து அவரை குறிக்கொண்டு மீண்டும் பணியிலீடுபட்டிருத்தினார். இதனை மணிவாசகர்,



*"நீக்கிமுன்னென்னைத் தன்னெடு நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து*
*நோக்கி நுண்ணிய நொடியென சொற்செய்து நுகமின்றி விளானாகத்துற்*
*தூக்கி முன்செய்தபொய் அறத்துக்கள் அறுத்தெழுதரு சுடர்ச்சோதி*
*ஆக்கி ஆண்டு தன்னடியாரிற் கூட்டிய அதிசயங்கண்டாமே"*

என்று கூறுவதிலிருந்து உய்த்துணரலாம் நேரகாலம் வந்தும் இறைவன் திருப்பெருங் துறையில் குருவருள்தர நிழலின் கீழ் பழைய அடியார்கள் சூழ ஞானாசாரியார் எழுத்தருளிவந்து மாணிக்கவாசகரை ஆட்கொண்டு மெய்பொருளையும் உபதேசித்தருளித் தில்லைவருக எனப்பணித்து எரிவடிவில் மறைந்தார் அதனால் மாணிக்கவாசகர் உலகியலுக்கும் துறவறத்துக்குமிடையில் இருதலை கொல்லி எனப் பெயரும் பெற்றார்.

*"வரந்தர விருள்தள்ளி தம்மை*
*வாதவூரிறைவர் போற்றிப்*
*பெருந்துறை நகரிலன்றிப்*
*பிஞ்ஞகா புலியூர் மன்றில்*
*பொருந்துவை முத்தி யென்று*
*புகன்ற திங் கெவரினா வென்னக்*
*திருந்தியதவத்தாய் கேட்டி*
*யென்றவர் செப்பலுற்றார்"* *(புலியூர் – தில்லை)*

என்று கூறுவதனால் புலனாகும்.

இது வரை காலமும் உயிர் உணராவண்ணம் உயிருக்கு உயிராய் நின்று ஒன்றாயும், உடனாயும், வேறாயும் நின்று செலுத்தியிருந்த சிவமே ஞானாசாரியக் கட்புலனாக காட்சி கொடுத்தருளுவர். காட்சி கருதல் உரையென்னு மளவைகளால் உய்த்துணரப்பட்டது. கடவுள் உயிர், உலகம், என்ற மூன்று உண்மைப்பொருள்களில் பதியே பிரகாசமான பொருள். அது மனம், வாக்கு காயங்களுக்கு எட்டாதது. அறிவாகி நிற்கும். இந்நாளில் இறை அருவமும் அருளும் மல்லதாய் குணம் குறிகளைந்ததாய் மலமலந்ததாய் ஒன்றாய அழிவில்லாததாய் எண்ணற்ற உயிர்களின் அறிவுக்கறிவாய், சலனமலைத்தாய் ஆனந்தவடிவே வடிவினதாய மாறுபட்ட அறிவினால் உணரப்படாததாய் அணுவுக்கணுவாய் பெரிதிற்கும் பெரிதாய் சென்றடையும் பேரானந்தமாய் விளங்கும் இதனைச் சிவம என்கின்றன சிவாகமங்களில் அது சத்–சித்– ஆனந்தம் எனப்படும்.

பதி, பசு, பாசம் என்னும் மூன்று அழிவற்ற உண்மைப்பொருள்களுள் பதியும் உயிர்களும் அறிவுப் பொருள்களாம். இவற்றுள் பதி முழு வியாபகப் பொருள். உயிர்களும் சடப்பொருள்களும் அவ்வியா பகத்துள் அடங்கிய பொருள்கயளாம். இறைவனின் வியாபக நிலையை மாணிக்கவாசகப் பெருமான் திருவாய்

மலர்ந்தவற்றை கூறினால் என்னறிவுக்கு பெரும் பாரமாய் இருக்கும் ஆகவே வேண்டியளவு குறைத்து இப்பரம் பொருளின் பெருமை கூறியதை அறிந்ததினால் நான் செய்ய வேண்டிய கைமாறு என்ன வென்று கூறவும் முடியாது ஆகவே கூடியளவு சுருக்கி முடிக்க எண்ணங் கொண்டவர்களும் இருக்கிறார்கள் நான் செய்ய வேண்டியது .

*"பாடவேண்டும் நான் போற்றி நின்னையே*
*பாடிநைத்து துருகி நெக்கு நெக்நைந்*
*தாடவேண்டும் நான் போற்றி அம்பலத்து*
*ஆடும் நின்கழற் போது நாயினேன்*
*கூடவேண்டும் நான் போற்றியிப் புழுக்*
*கூடுநீக்கென்னைப் போற்றி பொய்யெலாம்*
*வீடவேண்டும் நாதந் போற்றி வீடுதான்*
*தருளு போற்றி நின் மெய்யர் மெய்யனே"* **(ஆனந்தாதீதம் 100)**

என்று விண்ணப்பிக்கிறார்கள் இவ்வாறு புத்தியுணர்வுகளோ இறைவனையும் உயிரையும் கூட்ட வல்லன என்பதனை மாணிக்கவாசகர் பதிகங்கள் தோறும் குறிப்பிடுகிறார் இப்படி உண்மையான புத்துணர்வுகளில் வெளிவந்துள்ளன.

இவ்வாறெல்லாம் சைவசித்தாந்தத் நெறி வழிபட்ட கடவுள் உயிர், தளைகள், என்பவற்றின் உண்மை நிலைகளைப் பாடியருளிய மாணிக்கவாசக சுவாமிகள் அன்றும் தன்னை ஆட்கொண்ட இறைவிற்கு பத்து உறுப்புக்களையும் கொண்ட வர்ணவைமிக்க புகழாரத்தையும் பாடியருளினார்.

கீர்த்தி திருவகலில் – பெயர், நாடு, ஊர், ஆறு, மலை, ஊர்தி, படை, முரசு, தார், கொடி என்பனவற்றை குறிப்பிடுகிறார்.

தில்லைமூதூர் ஆடிய திருவடி பல்லுயிரெல்லாம் பயின்றனருகி எண்ணில் பலகுணம் எழில்பெற விளங்கி மண்ணும் விண்ணும் வானோருலகும் அண்ணியகல்வி தோற்றியும் அழித்தும் என்னுடைய இருளை துரந்தும் அடியாருள்ளத்து அன்புமீவார குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும் மன்னுமாமலை மகேந்திரமலையிற் சொன்ன ஆகமம் சொர்ணசூகமம் தோற்றுவிக் கல்லாடத்துக்கலந்தினி தருளி நல்லானொடு நயப்புற எய்தியும் பஞ்சபள்ளியில் பால்மொழி தன்னொடு மெஞ்சாது ஈண்டு இன்னருள் விளைத்து கிராதவேடமொடு கிஞ்சுகவாயலள் விராவுகொங்கை நந்நடம் படித்தும் கேவேடராகிக் கெளிபடுத்து, மாவேட்டாகிய ஆகமம் வாங்கியும் மற்றவை தம்மை மகேந்திர திருந்து...............



திருத்தசாங்கம் :– ஏரார் இளங்கிளியே எங்கள் பெருந்துறைக்கோள், சீரார் திருநாமம் தேர்ந்துரைப்பாய்.

பேர் :– ஆரூரன், செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவனேல் எம்பெருமான் தேவபிரான் என்று ஏதமிலா இன்சொல் மரகதமே ஏற்பொழிக்கும் நாதன் நமை ஆளுடையான் நாடுரையாய் காதலவர்க்கு அன்போடு மீளா அருள் புரிவான் நாடென்றும் தென்பாண்டி நாடேதெரி.

ஊர் :– தாநாடு பூஞ்சோலை தந்தாநமையாளும் மாதாடும் பாகத்தாள் வாழ்பதியென் கோநாட்டில் பத்ரெல்லாம்பார் மேற் சிவபுரம் போற் கொண்டாடும் உத்தரகோச மங்கையூர்.

ஆறு :– கைலாயய வான்வந்த சிந்தை மலங்கழுவவந்திரியும் ஆனந்தங்காத யான் ஆறு.

மலை :– நெங்சற், திருளகல வாள் வீசி இன்பமடுத்தி அருணாமலை என்பது காண் ஆய்ந்து

ஊர்வலம் எப்போதும் :– தேன்புரையுஞ் சிந்தையராய்த் தெய்வப் பெண்ணேத் திசைப் வான்புரவியூரும் மகிழ்ந்து

படை :– ஏற்றார் ஆளுடையர் நெஞ்சுருக மும்மலங்கள் பாயும் களுக்கடையான் கைக்கொண்படை

முரசு :– அரன்பாட் பிரவிப்பகை கலங்க பேரின்பத்தோங்கும் பமிக்க லாதப்பகை

தாம் :– தீயவினை நாளுமணுகாவண்ணம் நாயனை ஆளுடையான் தானியதுகாம் உவர்ந்தார்

கொடி :– சாலவும் எதிலார் துண்ணென்ன மேல்விலங்கு றர்க்காட்டும் கோதிலா ஏராய்க்கெடும்

இவ்வாறாக இவனின் அன்பு மேலிட்டால் பாடி, ஆடி பரவி மணிமொழியால் மாணிக்கவாசக சுவாமிகள் சைவசித்தாந்த உட்பொருளை, வெளிப்பொருளை உவமானமாகக் கொண்டு விளங்கியுள்ளார்கள்.

*"புற்றில்வாள் அரவும் அஞ்சேன் பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்*
*கற்றைவார் சடை எம் அண்ணல் கண்ணுதல் பாதம் நண்ணி*
*மற்றுமோர் தெய்வம் தன்னை உண்டென நினைத்தெம் பெம்மாற்*
*கற்றில்லா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே"*
*அன்பே சிவம் ஆசையே பாசம் சைவநீதி*
*இன்பம் வேண்டுவது*
*சிவ சிவ.*

**மங்கையற்கரசி - மயில்வாகனம்**
*ஓய்வுபெற்ற அதிபர்*
*உபதலைவி*
*முன்னாள் சைவ மங்கையர் கழகம்*
*ஆனைப்பந்தி, மட்டக்களப்பு.*

# நாம் இயற்கையில் காணும் அரிய சைவ சித்தாந்தம்



ஆகாயம் அழகிய நீலநிறத்தில் காட்சி தருகிறது. எம்மைச் சுற்றிலும் நறுமணம் கமழும் வண்ணப் பூக்கள், பூக்களின் நறுமணம், காலைக் கதிரவனிடம் சௌந்தர்யம் என்பனவற்றைக் காண்கிறோம். இயற்கை வெளிப்படுத்தும் எல்லாத் தோற்றமும் எம்மை வியக்க வைக்கின்றன. மனிதன் இயற்கை அழகை அவன் தோன்றிய நாள் முதல் ரசித்தே வருகின்றான். இதைவிளக்க திருவே உருவான தொல்காப்பியர் பின்வருமாறு கூறியுள்ளார்.

*"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற*
*வடுநீங்கு சிறப்பின் முதலன முன்னூல்*
*கடவுள்வாழ் த்தொடு கண்ணியவருமே"* (தொ. புறத். 33)

கொடிநிலை = ஞாயிறு, கந்தழி = திங்கள், வள்ளி = தீ

இயற்கையை ஜகத் என்றும் அழைக்கிறோம் மனிதனின் ரசனைக்கு மாத்திரமல்ல அவன் எண்ணத்திற்கும் ஊக்கம் ஊட்டும் தன்மை இந்த இயற்கைக்கு உண்டு.

*"கதிரவன் கிரணக் கையால் கடவுளைத் தொழுவான்*
*புட்கள் சுதியொடும் ஆடிப் பாடித் துதிசெய்யும்*
*தருக்க ளெல்லாம் பொதியலர் தூவிப் போற்றும்*
*பூதன் தந்தொழில் செய்தேத்தும்*
*அதிர்கடல் ஒலியால் வாழ்த்தும்*
*அகமே நீ வாழ்த்தா தென்னே".* தேசிகவிநாயகம்பிள்ளை

மனிதனின் எண்ணத்தில் இந்த இயற்கை பற்றிய ஒரு கேள்வியும் எழுந்துள்ளது. இயற்கை என்னும் பெயர் இது யாது? எங்கிருந்து இது வந்தது? இதே கேள்வி வேதங்களிலும் கேட்கப்படுகின்றது, இந்தப் பிரபஞ்சம் எதனிடத்தில் உண்டாயிற்று என்று வேதம் கேட்கிறது. இந்தக் கேள்விக்கு பூரணமான பதில் இன்னமும் கிடைக்கவில்லை இது வரை எமக்கு பல பதில்கள் கிடைத்துள்ளன அவை ஒவ்வொன்றிலும் ஒரு உண்மை பொதிந்துள்ளது. பௌதிகவியலாளர்கள் தந்துள்ள விஞ்ஞான ரீதியான பதில்களும் உள்ளன. இவையெல்லாவற்றையும் தொகுத்துப் பார்க்கும் பொழுது ஓரளவு புரியும் படியான பதிலும் எமக்குக் கிடைக்கிறது.



இப்பொழுது நாம் காணும் பிரபஞ்சம் முன்னொரு காலத்தில் இல்லை என்ற கோட்பாட்டை இன்று நாம் அங்கீகரிக்கிறோம். நாம் வசித்து வரும் மண்ணுலகம் முன் இருக்கவில்லை. இது முன்னைய முடிவு இதனை நாம் ஏற்றுக்கொள்கிறோமா? முன்னைய மனிதன் ஏன் இந்த முடிவுக்கு வந்தான் என்று ஆராய்ந்தே நாம் முடிவெடுப்போம்.

சிறிய செடி ஒன்றை எடுத்துக் கொள்வோம் மனிதன் நிலத்துள் விதை ஒன்றை விதைக்கிறான் சில நாட்களில் முளை வருகிறது சிறிது சிறிதாக வளர்கிறது வளர்ந்து வளர்ந்து அது மரமாகிறது. பிறகு அது பட்டுப்போவதற்கு முன்னதாக புதிய விதையை உண்டு பண்ணுகிறது. பின் மறைந்து போகிறது. விதையினின்றும் தோன்றி மரமாகி விதை நிலைக்கே போய்ச் சேர்கிறது.

*"வித்தினி லன்றி முளையில்லை அம்முளை*
*வித்தினி லன்றி வெளிப்படு மாறில்லை*
*வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல*
*அத்தன்மை யாகும் அரனெறி காணுமே".*

(அதாவது சிருட்டிக் கிரமத்தில் ஒளியில் இருந்து உடல் அமைந்து வீரியம் அமைகிறது. அது போல லயக்கிரமத்தில் வீரியமாற்றம் அமைந்து ஒளியுண்டாகிறது. அதனால் வீரியம் வித்தாகலாம் ஒளி அதன் முளையாகவும் உள்ளது. முளைக்குக் காரணம் வித்து முளை நீண்டபின் வித்தில் யாதும் இல்லை. அதுபோல ஒளி மண்டலம் அமைந்த பிறகு வீரியத்தின் உருவம் இல்லாது போகும். இந்த முறையில் சிவயோகம் உள்ளது.)

இது போலவே பறவையும் முட்டையும் பறவை ஒன்றைப் பார்ப்போம், முட்டையிலிருந்து தோன்றிப் பறவையாகி முட்டையிட்டு அது மடிகிறது. விலங்குகளும், மனிதர்களும் கூட இப்படித்தான். இயற்கையில் உள்ள யாவும் ஒரு விந்து நிலையில் வாழ்க்கையை தொடங்கி, படிப்படியாக தூலவடிவம் பெற்று உச்சத்துக்கு வந்த பிறகு சூக்குமமான நிலைக்குத் திரும்புகின்றன. பிறகு காரண நிலையில் அவை ஒடுங்குகின்றன.

*"இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி*
*யியமான னாயெறியுங் காற்றுமாகி*
*அருநிலைய திங்களாய் ஞாயிறாகி*
*யாகாச மாயட்ட மூர்த்தியாகி*
*பெருநலமுங் சுற்றமும் பெண்ணு மாணும்*
*பிறவுருவுந் தம்முருவுந் தாமேயாகி*
*நெருநலையா யின்றாகி நாளையாகி*
*நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே"* (திருநாவுக்கரசு நாயனார் திருத்தாண்டகம்)

உயிர் வாழ்வன மாத்திரமல்ல ஜடப்பொருட்களைப் பாருங்கள், மழைத்துளி வீழ்கிறது இந்த மழைத்துளி எங்கிருந்து வந்தது? கடலினின்று ஆவியாக அது மேலெழும்பி வானத்தில் முகிலாக மாறியது. அதுவே மழைத்துளியாக கீழே விழுகிறது திரும்பவும் அது ஆவியாக மேலெழும். இதே போன்று சிறு மணல்துகள் மலையாகிறது. மீண்டும் உடைந்து துகளாக மணலாக மாறுகிறது.
இந்த இயற்கை நிலையான நிலக் கடவுள் இருப்பிடமாகியது இதை பழந்தமிழ் நூலாகிய தொல்காப்பியம்

*"மாயோன் மேய காடுறை உலகமுந் –*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்பலபுனல் உலகமும் –*
*முல்லை, குறிஞ்சி, மருத*
*நெய்தலென ஐவகைக் கடவுளும் – சொல்லிய*
*முறையாற் சொல்லவும் படுமே"* கூறுகிறது.

இயற்கையை ஆராய்ந்து பார்த்தால் ஓர் உண்மை வெளியாகிறது அதன் அமைப்பு ஒரே பாங்கில் உள்ளது என்பதே அந்த உண்மையாகும். ஒரு சிறிய மணல் மணியின் அமைப்பு என்ன திட்டத்தில் அமைந்துள்ளதோ அதே திட்டம் பெரிய நட்சத்திர அமைப்பிலும் கையாளப் பட்டிருப்பதைக் காணலாம். இயற்கையின் நியதி, நடைமுறை அணு முதல், அண்டம் வரை ஒன்றாகவே வியாபித்துள்ளது. இதனாலேயே ஒரு கைப்பிடி மண்ணின் அமைப்பை அறிந்து கொண்டால், அண்டத்தின் அமைப்பையே அறிய முடிகிறது. ஆனால் இயற்கைப் பொருட்கள் அனைத்தும் வெவ்வேறு தோற்றங்களைக் கொண்டிருக்கின்றன. மாறி மாறித் தோன்றுகின்றன. இதனையே சிருஷ்டி என்கிறோம். சிருஷ்டிக்கு முன்பும், சிருஷ்டிக்கு பின்பும் மூலப்பொருள் ஒரே நிலையில்தான் இருந்தது என்ற உண்மையும் இந்த ஆராய்ச்சியின் மூலம் எமக்கு புலனாகிறது. மணலிலிருந்து தோன்றிய மலை திரும்பவும் மணலாகிறது. ஆவியினின்றும் தோன்றிய நதி மீண்டும் ஆவி நிலைக்குப் போகிறது. விந்து நிலையில் இருந்த மானுட வாழ்வு மீண்டும் விந்து நிலைக்கே போய்ச் சேர்கிறது. இதிலிலிருந்து நாம் கற்றுள்ள பாடம் எது? சிருஷ்டி என்னும் தூல நிலைக்கு வந்திருப்பது காரியம், சூக்கும நிலையில் இருப்பது காரணம்.

இயற்கையை ஆராயும் பொழுது எமக்கு மற்றுமொரு உண்மை புலனாகிறது. செடி, கொடி, விலங்கு, மக்கள் என்று நாமழைப்பவை ஆதியந்தமில்லாது தோன்றிக் கொண்டும், மறைந்து கொண்டும் இருக்கின்றன. இதற்கு முடிவில்லை. தோன்றுதல், மறைதல் என்றும் இயற்கைச் சக்கரம் சுழன்று கொண்டே இருக்கிறது. அண்டம் முழுவதற்கும் ஒரு நியதி, காரிய நிலையில் சூரியன், சந்திரன், பூமி, உடல் உள்ளம் என்றெல்லாம் பகர்கிறோம். இவை காரண நிலைக்குச் செல்லும் போது பிரளையம் வந்து அமைகிறது. எல்லாம் ஒடுங்கிப் போகின்றன. ஆனால் அவை சூனியமாகி விடவில்லை. பின்னர் இவை புதிய வடிவெடுக்கின்றன.



இயற்கையின் தோற்றத்திலும், ஒடுங்கத்திலும் மற்றொரு உண்மை பொதிந்துள்ளது. மரத்தினின்றும் விதை உண்டாகிறது, இந்த விதை திரும்பவும் உடனையே மரமாவது இல்லை. அது செயலற்றுக் கிடக்கும் பருவமொன்று உண்டு. செயலற்ற நிலை என்று சொல்லிலும், கட்புலனுக்கு எட்டாத வகையில் சூக்குமமான நிலையில் செயல் ஒன்று நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. காட்சியில் மாத்திரம் பிரளயம் அல்லது ஒடுங்கிய நிலை, பிறகு விதை பூமியில் போடப்படுகிறது. தன்னைத் தானே கட்டவிழ்த்து அது முளையாக வெளிவருகிறது. சூக்கும நிலையில் இருக்கின்ற பொருளே தூல நிலைக்கு வருகிறது இந்த மாற்றத்தையே பரிணாமம் என்றும் அழைக்கிறோம் கீழ் நிலையிலிருந்து மேல் நிலைக்கு இயற்கையில் உள்ளவை பரிணமித்து வருகின்றன. பரிணாமம் நிகழ்வதற்கு முன்னர் திரோதானம் அல்லது மறைதல் நிகழ்கிறது. இயற்கையின் பரிணாமத்தை நாம் ஏற்போமானால் சமயம் புகட்டும் கோட்பாடுகளையும் நாம் ஏற்றுக் கொள்ளவே வேண்டும்.

சூன்யத்திலிருந்து எதனையும் சிருஷ்டிக்க முடியாது, எது இருக்கிறதோ அது அழிவதில்லை, அதன் நிலை மட்டுமே மாறுகிறது. சிற்றுயிர் பேருயிராகப் பரிணமிக்கும் நிலை இயற்கை முழுவதும் ஓயாமல் நடந்து கொண்டிருக்கிறது. இயற்கையின் ஒவ்வொரு பகுதியும் மற்றொரு பகுதியோடு பொருத்தமாக அமைந்து கொள்ள முயல்கிறது. இந்தப் பொருத்தத்தை ஆராய்ந்து பார்க்கும் பொழுது பேர் அறிவின் திருவிளையாட்டு இது என்பது விளங்கும் இயற்கை என்றால் என்ன என்பதற்கும் எம்மால் விளக்கம் தரமுடியும். அகிலாண்ட சொரூபமாக உள்ள அறிவுப் பொருள், வடிவங்களுள் மறைந்து போகும் பொழுது, அது இயற்கை என்று பெயர் பெறுகிறது. படிப்படியாக தன்னைப் பேரறிவுக்கு அது இயக்கிக் கொண்டிருக்கிறது. அந்தப் பேரறிவுப் பொருளையே கடவுள் என்கிறோம்.

இயற்கைப் பொருள் முழுவதிலும் நீக்கமற நிறைந்துள்ள அறிவே கடவுள் அகிலாண்டம் முழுவதும் ஒரு பேரறிவும் பொருளின் புறத்தோற்றம் என்பதையே இயற்கை உணர்த்துகிறது.

மனிதனின் இயல்பு புற உலகிலேயே சஞ்சரிக்க விரும்புவது. புற உலகைக் காணக்கண் உதவுகிறது. புற உலக ஓசையைக் கேட்க செவி உதவுகிறது. மனிதனின் எல்லா இந்திரியங்களும் புற உலகைக்காண உதவுகின்றன. இவை வாயிலாகத் தெரியும் இயற்கை அழகு மனிதனைக் கவர்கிறது. இதனால் மனிதனின் மனதில் புற உலகு பற்றிய கேள்விகளே முதலில் எழுந்தன. நட்சத்திரம் எப்படித் தோன்றியது, நதிகள் ஏன் பாய்கின்றன, மலைகள் ஏன் உயர்ந்திருக்கின்றன இப்படிப் பல பல கேள்விகளை அவன் கேட்டான். இவற்றுக்கெல்லாம், ஒரு தேவதையை, தெய்வமாக்கவும் செய்தான். இவற்றை நாம் இயற்கையின் சத்திகள் என்று இன்று அழைக்கிறோம். இந்தத் தேவதைகள் தமக்கு உண்மையை உணர்த்தும் என்று

மனிதன் முதலில் நம்பினான். அவன் நம்பிக்கை பலிக்கவில்லை. அவன் ஆராய்ச்சியை உள் மனதின் கண் திருப்பினான். இந்த ஆராய்ச்சி விரிந்து தன்னைப் பற்றியதாக மாறியது – அண்ட ஆராய்ச்சி, பிண்ட ஆராய்ச்சியாக மாறியது. வெளி உலகம் என்ற இயற்கையை முதலில் ஆராய்ந்தவன், அக உலகம் என்னும் இயற்கையை ஆராய முற்பட்டான் – இதன் பலனாக பல சித்தாந்த உண்மைகள் அவனுக்குப் புலனாகின. இயற்கை, விஞ்ஞானிக்கு மட்டுமல்ல, மெய்ஞானிக்கும் ஆய்வுக்குத் தளம் அமைத்தது. புறப்பட்ட இடத்திற்கே பொருட்கள் போய்ச் சேர்கின்றன என்பதை இயற்கை நீரூபித்து வருகிறது. ஆன்மா சூனியத்திலிருந்து வந்திருப்பின் அது திரும்பவும் சூனியத்துக்கே போக வேண்டும், ஆனால் இது ஆன்மா பற்றிய உண்மையல்ல என்ற முடிவுக்கு ஞானிகள் வந்தனர். இயற்கையில் உள்ள சக்தியானாலும், இயற்கைக்கு அப்பால் உள்ள சக்தியானாலும் சரி, ஆத்ம சக்தியை அழிக்க எந்தச் சக்திக்கும் இயலாது. ஆத்மா எடுத்துக் கொள்ளும் உடலுக்கே பிறப்பும், இறப்பும் உண்டு. ஆத்மா முன்னேற்றம் அடைவதற்கு பிறவிகள் பல எடுத்தாக வேண்டும். இயற்கையின் நடைமுறையோடு பார்க்கும் பொழுது ஆத்மா பல சரீரங்களை எடுப்பது அவசியம் என்பது விளங்குகிறது. இதனால் மறுபிறவியைக் கண்டு மனிதன் அஞ்ச வேண்டியதில்லை என்ற உண்மையையும் ஞானிகள் உணர்த்தினர். ஆனால் இறைவனை எவ்வாறு உளான் என்று அனுதியிட்டுக் கூறவில்லை தன்னைத் தானே மனிதன் அறிந்து கொள்வதற்கு வழிகாட்டியாக அமைந்தது இயற்கையே. அந்த இயற்கைக்கு கோடி வணக்கங்கள். அதனுள் வியாபித்திருக்கும் இறைவனுக்கு கோடானு கோடி வந்தனங்கள்.

*"மைப்படிந்த கண்ணாளுந் தானும்கச்சி*
*மயானத்தான் வார்சடையா யென்னி னல்லான்*
*ஒப்புடைய னல்ல றொருவ னல்லன்*
*ஒரூரனல்ல னேருவம னில்லி*
*அப்படியு மந்நிற மவ்வண் ணமு*
*மவனருளே கண்ணாக காணிக னல்லால்*
*இப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்த*
*னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே".*

*திருநாவுக்கரசு நாயனார்*
*திருத்தாண்டகம்.*

அவனன்றி அணுவும் அசையாது
சிவ சிவ.

*எழுதியவர்*
சற்சொரூபவதி நாதன்



# அரிச்சுவடி அமைப்பில் ஆன்மஞான வைப்பு

அரிச்சுவடி என்பது, அரியின் சுவட்டை உடையது எனப் பொருள்படும். அரி என்பது காக்கும் இறைவனை – இறைவனின் பண்பைக் குறிக்கும். எனவே, அரிச்சுவடி என்ற பதம் இறைவனின் சுவட்டை உடையதாக அமைக்கப்பட்ட ஒன்று என்ற பொருளைக் காட்டி நிற்கும். அந்தச் சுவட்டின் வழியே சென்றால், இறைவனை அறியலாம் என்பது ஆன்றோர் கருத்தாகும். அரிச்சுவடி கற்றால் இறை இலக்கியங்களையும், ஆன்மஞான நூல்களையும் கற்று ஈடேற்றம் பெற வழி காணலாம் என்ற பொருள் அரிச்சுவடி என்ற பதத்தில் அடங்கியுள்ளது. அன்றியும் அரிச்சுவடி அமைப்பிலே அந்தத் தத்துவத்தைப் புகுத்தியிருப்பது ஆன்றோர் அறிவின் திறனை எடுத்துக்காட்டுவதாகும்.

உயிர் எழுத்தும், மெய்யெழுத்துமென வகுத்து, உயிரும் மெய்யும் ஒன்று சேருகிற இடத்திலேயே இயக்கம் ஏற்படுகிறது என்றும், உயிர் தனித்து இயங்கினாலும், மெய் தனித்து இயங்குவதில்லை என்றும், உயிரின் முன்னேற்றம் உடலின் சேர்க்கையினால் விருத்தியாகிறது என்றும், மெய் நீங்கியவிடத்தும் உயிரின் இயக்கம் நீங்குவ தில்லையென்றும், உயிரே ஆய்தம் என்ற இறைவனை நோக்கிச் சென்றுகொண்டிருகிறது என்றும் தமிழ் மக்கள் கொண்டிருந்த ஆன்ம தத்துவத்தை அரிச்சுவடி அமைப்பிலே அடக்கி வைத்திருக்கிறார்கள். அகர முதல எழுத்தெல்லாம் என்பது, எழுத்தெல்லாம் என்பது, எழுத்துக்கள் எல்லாவற்றுக்கும் அகரம் முன்னாக உள்ளது என்பது மட்டுமன்றி, அகரமே எழுத்துக்களின் முதலாக – மூலமாக உள்ளது என்பதும் பொருளாகும். ஆதிபகவன் உலகுக்கு – அப் பொருளாயிருத்தல் போல, அகரமே எழுத்துக்களின் உயிர். எல்லா எழுத்துக்களிலும் அகர ஒலி செறிந்திருக்கிறது. அகர உயிரே எழுத்துக்களுக்கு இயக்கத்தைக் கொடுக்கிறது. அந்த அகர உயிர் ஒலியாகும். ஆ! என்ற வியப்பொலி ஆசையால் ஏற்படும் ஒன்று தானே! அந்த ஆசை நிலையில் உயிர் இன்பத்தை நாடுகிறது என்ற தத்துவத்தை இகர ஒலி குறித்து நிற்கும். இன்பத்தின் விருத்தி நிலையை ஈகார ஒலி காட்டும். இன்பத்தை நாடி நிற்கும் பற்றுள்ள உயிரைத் துன்பம் வந்து உறுத்துவதுமுண்டு என்ற உலகியல் உண்மையை அறிவுறுத்தி நிற்பது உகர ஒலியாகும். இ, ஈ என்பன இன்பத்தைக் குறிக்கும் சிரிப்பொலி போல, உ, ஊ என்பன நோவை அல்லது துன்பத்தைக் குறிக்கும் ஒலிகளாம். ஊகார ஒலி மிக குறிப்பதாகும். ஆசை அண்மிய நிலையிலே நின்ற உயிர், இன்பத்தை நாடி ஏகும் போது, துன்பம் வந்து சேர்ந்தும் என்ன காரணத்தால் இன்ப நிலையிலே துன்பம் வந்து சூழ்கிறது என எண்ணத்

தொடங்குகிறது என்ற தத்துவத்தை குறிப்பது எகர ஒலியாகும். ஏகாரம், முதிர்ந்த விசார நிலையைக் குறித்து நிற்கும் ஒலி, எகர ஏகார ஒலிகள் வினாக்குறிப்பை உடையன என்பது தெளிவு. அடுத்துள்ள ஐகார ஒலி அகர இகர ஒலிகளின் இணைவேயாகும். விசார நிலையை அடைந்த உயிர் ஆசையின் அரவணைப்பை விட்டகன்றால், இன்ப நிலையோடு இணைந்திருக்கலாம். என்ற தத்துவத்தை விளக்குவது ஐகார ஒலியாகும். ஒ, ஓ என்பன தேற்றப் பொருளை உடையன. தத்துவ விசாரத்தினால் உயிருக்கு தெளிவு பிறக்கும் நிலையைக் குறிப்பன ஒ, ஓ என்ற ஒலிகளாம். ஓ என்பது தெளிவு நிலையின் முதிர்வைக் குறிக்கும். தேற்றம் பெற்ற உயிர் (அ) பற்றற்ற நிலையிலே துன்பத்துடன் (உ) இணைத்துத் துயருராதிருக்கலாம் என்ற உண்மையை விளக்க ஔகார எழுத்துக்களின்றியே அவ்வொலிகளை பிறப்பிக்கத்தக்க வாய்ப்பிருந்தும், அவற்றை ஆக்கியதன் காரணம், அவை சுட்டும் தத்துவப் பொருளைக் காட்டுவதற்கே எனலாம்.

ஆசை அணைந்ததால் இன்ப துன்பங்களை அனுபவித்து இளைத்த உயிர், ஆசையினின்று நீங்கினால் இன்ப துன்பங்களினாற் பாதிக்கப்படாமல் அவற்றுடன் இணைந்து வாழலாம் என்று ஞானத்தைப் பெற்று இறைவனை அணுகிச் செல்லும் என்ற விளக்கத்தை ஊட்ட, உயிரின் முதிர்ச்சி நிலையைக் குறிக்கும் ஔகாரத்தை அடுத்து ஆய்தம் வைக்கப்பட்டுள்ளது. அந்த ஆய்தம் இறையின் தன்மையைக் குறிக்க, உயிருக்கும் மெய்யுக்கும் அப்பாற்பட்டதாக அமைக்கப்பட்டுள்ளது. அது உயிருமன்று, மெய்யுமன்று. இறைவனின் அருவுருவான வடிவத்தை குறிக்க அதற்குப் புள்ளியுருவங் கொடுத்திருக்கிறார்கள். ஏறக்குறைய 2500 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட தொல்காப்பியம் என்ற ஆதித் தமிழ் இலக்கண நூலில் எழுத்துக்களின் ஒலி வடிவங்கள் கூறிய தொல்காப்பியனார், ஆய்தம் ஒன்றினுக்கே ஒலிவடிவங் கூறாது வரிவடிவங் கூறியிருக்கிறார். 'ஆய்தம் என்ற முப்பாற் புள்ளி' என்று அவர் கூறுவதிலிருந்து, அது ஒலி வடிவு காட்டி உணர்த்த முடியாதது என்று தெரிகிறது. படைத்தல், காத்தல், மறைத்தல் ஆகிய முத்தொழில் கொண்ட ஒரு பொருள் இறை என்ற உண்மையை விளக்க முப்பாற் புள்ளி உருக்கொண்ட ஒரெழுத்தாய் அதனை அமைத்திருக்கிறார்கள். அது ஆய்ந்துணர்ந்து அறியப்பட வேண்டிய ஒன்று. அதுவும் தம்முள்ளே தாம் ஆய்ந்து காணவேண்டிய ஒன்றாகும் என்ற தத்துவத்தை குறிக்கவே அதற்கு ஆய்தம் எனப் பெயரிட்டுள்ளனர். அது 'கடவுள்' என்ற சொல்லை ஒக்கும். எல்லாவற்றையும் கடந்து நிற்கும் பொருள் என்றும், எல்லாவற்றிலும் உள் உறைந்து நிற்கும் பொருள் என்றும் கருத்தமையக் கடவுள் என்ற சொல் அமைந்திருந்தல் போலவே ஆய்தம் என்ற சொல்லும் அமைந்துள்ளது. உயிருக்கும் மெய்க்கும் புறம்பாகவும், அவற்றுக்கு அன்னியமாகவன்றியும், உயிரின் இன்ப துன்பம் அனுபவ முதிர்வில் ஞானத்தால் காணப்படத்தக்கதாகவும் அமைந்திருப்பதே இறைத்தத்துவம் காட்டிய ஆய்தம் என்ற எழுத்தாகும்.



'அ' என்ற ஒன்றே மூல உயிரைக் குறிக்கும் எழுத்தாக அமைக்கப்பட்டுள்ளது. ஏனைய உயிர் எழுத்துக்களென கூறப்படுவன, அம் மூல உயிரின் வெவ்வேறு வளர்ச்சி நிலையைக் குறிப்பனவாகும். உயிர் அனைத்தும் ஒன்றின் விரிவே என்ற தத்துவம் இதனாற் பெறப்படும். உயிரின் இலக்கு இறையினை அண்டுதல் என்பதையும், இறை பலவாகத் தோன்றினும் உண்மையில் ஒன்றே என்பதையும், ஆய்தம் அமைக்கப்பட்டிருக்கும் இடமும் முறையும் குறிப்பாகக் காட்டுவனவாம். உயிரின் விருத்தியினை தமிழ் எழுத்தமைப்பிற் காட்டிய முறை, தமிழ் மக்கள் கொண்டிருந்த ஆன்ம ஞானக் கருத்தினை ஒட்டியதாக இருப்பதனைக் கண்டு வியப்பெய்தலாம்.

தமிழ் மெய்யெழுத்துக்களின் அமைப்பு முறையிலும் இதனையொத்த தத்துவ நெறி விளங்கக் காணலாம். க், ச், ட், த், ப் என்ற ஐந்து வல்லெழுத்துக்களையடுத்து ங், ஞ், ண், ந், ம் என்ற ஐந்து மெல்லெழுத்துக்களை முறையே சேர்த்தும் அவற்றின் பின் ய், ர், ல், வ், ழ் என்ற ஐந்து இடையெழுத்துக்களைப் புறம்பாக அமைத்தும் காட்டியிருப்பது உலகியல் ஞானத்தை ஒட்டியதாகும். குறித்த வல்லெழுத்தைந்தும் ஆணினத்தைக் குறிப்பனவாகவும், அவற்றின் இனமாய மெல்லெழுத்தைந்தும் மெல்லியர் இனத்தைக் குறிப்பனவாயும், இடையெழுத்தைந்தும் ஆணும் பெண்ணுமற்று அவ்விருபாற்கும் இடையாய் அலியினத்தைக் குறிப்பனவாகவும் அமைக்கப்பட்டுள்ளன. மக்களுக்காகவே எழுத்தாகையால் உலகிலுள்ள முப்பாலின மக்களைக் குறிக்கும் பகுப்பினை மெய்யெழுத்துக்களின் அமைப்பிலே காட்டியிருக்கிறார்கள். ஆணும் பெண்ணும் இணையும் இனமாகையால் மெல்லெழுத்தைந்தையும் அவற்றின் இனமாய வல்லெழுத்தைந்தின் அயலே முறையாக அமைத்தும், அலியினம் அவற்றுடன் இணையாததாகையால் அதனைச்சுட்டும் இடையினத்தை வேறாக அமைத்தும் உலகியல் நெறி புலப்படுத்தப்பட்டுள்ளது.

ஒவ்வொரு இனத்திலும் முதலில் ஐந்தைந்து எழுத்துக்களை அடுக்கி, இறுதியில் இனத்துக்கு ஒன்றாத ள், ற் ன் என்ற என்ற எழுத்துக்களை அமைத்திருக்கும் முறையும், பழந்தமிழ் மக்கள் கொண்டிருந்த தத்துவ ஞானக் கருத்தினை அடிப்படையாகக் கொண்டதேயாகும். மக்கள் மெய் பஞ்சபூதங்களின் சேர்க்கையாலாகிப் புலப்படதக்க ஐந்து புலன் உறுப்புக்களைக் கொண்டுள்ளது என்ற தத்துவத்தை ஒட்டி ஒவ்வொரு இனத்திலும் ஐந்து எழுத்துக்கள்

வகுக்கப்பட்டுள்ளன. தெற்றெனப் புலப்படாது, ஓர்ந்துணர வேண்டிய ஆறாவது அறிவாய பகுத்தறிவுக்குக் காரணமான மனம் (புத்தி), ஆண், பெண், அலியாய ஒவ்வொரு இனத்துக்குமுண்டு என்பதைக் குறிக்க, 'ள்' என்ற ஆறாவது இடையின எழுத்தையும், 'ற்' என்ற ஆறாவது மெல்லின எழுத்தையும் இறுதியில் சேர்த்திருக்கிறார்கள். எனவே ஆறாவது அறிவு ஒன்று மக்களுக்கு உண்டு என்பதும், அது அவர்களுக்குள்ள ஐயறிவுக்கு அப்பாற்பட்டதென்பதும், அது ஐயறிவின் வெளிப்பாட்டின் இறுதியிலே தோன்றுவதென்பது ம், ள், ற், ன் என்ற மெய்யெழுத்துக்களின் அமைப்பிலுள்ள தத்துவப் பொருளாம். இத்தகைய மெய்கள் மீது உயிர் ஏறி ஆசை பற்ற, இன்பம், உபத்திரவம், என் எனும் விசார ஆகிய நிலைகளையடைந்து ஐ எனும் ஆசையினகன்ற இன்ப இணைவு, ஒ எனும் தனிப்பொருளை அடையும் என்ற தத்துவம் உயிர்மெய் எழுத்துக்களின் அமைப்பிலே பொதிந்து கிடப்பதை உணரலாம். அதனாலேதான் உயிர்மெய் எழுத்துக்களின் வரிசைகளிலே ஆய்தம் இணைக்கப்படவில்லை. அன்றேல், கெஃ, நுஃ, சஃ--- என்ற எழுத்துக்களை அடுத்து கஃ, ஙஃ, சஃ--- என்று அமைந்திருக்க வேண்டுமல்லவா?

ந், ர், ழ் என்ற ஒலிகள் முன்னரேயிருக்க, அவற்றை ஒரளவு ஒத்த ள், ற், ன் என்ற ஒலி பெற்ற எழுத்துக்களை அரிச்சுவடியின் இறுதியிலே சேர்த்தமைக்கு மற்றோர் காரணமுண்டு. ஒவ்வோர் இனத்திலும் ஆறாவது அறிவைக் குறிக்கும் ள், ற், ன் என்ற எழுத்துக்கள் அவ்வவ் இனங்களின் ஐயறிவைக் குறிக்கும் மெய்யெழுத்துக்களுக்குப் புறம்பாக அமைந்திருப்பினும் ஒலியில் ஒரளவு ஒற்றுமை காட்டி நிற்றல், மக்களது ஆறாவது அறிவு அவரது ஐயறிவுக்கு முற்றிலும் அப்பாற் பட்டதுமன்று என்பதைக் காட்டுவதாகும். மெய்யெழுத்துக்களை முதலில் ஐந்தைந்தாக வகுத்திருப்பதற்கு மற்றோர் காரணம், மக்கள் மெய் முக்கியமாக ஐந்து பூதங்களையும், ஐந்து பொறிகளையும், ஐந்து புலன்களையும் கொண்ட சேர்க்கையே என்பதை உணர்த்துவதற் காகுமெனலாம். மக்கள் உடலையும் உயிரையும் அடிப்படையாகக் கொண்டெழுந்ததே தமிழ் மக்கள் கொண்ட சமய தத்துவக் கோட்பாடாகும். தமிழ் நாட்டிலெழுந்த கோயில் அமைப்பு முறையும் அக்கொள்கையை ஒட்டியே மனித உடல் வடிவத்தில் ஆக்கப்பட்டுள்ளதாகும். கோபுர வாயில் பாதமாகவும், கொடித் தம்பம் பாற்குறியாகவும், பலிபீடம் வயிறாகவும், நந்தி ஆன்மாவாகவும், மகா மண்டபம் மார்பாகவும், அர்த்த மண்டபம் கழுத்தாகவும் ஆதிமூலம் தலையாகவும், இருவீதிகள் கரங்களாகவும் அமைந்த ஆலயத்திலே, இறைவனை ஆதிமூலமாய தலைத்தானத்திலிருத்தல், உடல்தோறும் இறைவன் சித்தாக உள்ளான் என்ற தத்துவத்தை விளங்குவதாகும். தமிழ் எழுத்தமைப்பிலும் இத்தத்துவத்தை விளக்குவதற்காகவே, இறையம்சமுற்ற உயிர் மெய்தோறுமேறி உயிர் மெய்யாய் விளங்குவதாய் காட்டியிருக்கிறார்கள்.



தமிழ் மக்கள் கொண்டிருந்த சித்தாந்த சமய சாரத்தினை அவர்கள் வகுத்த எழுத்தமைப்பிலே புகுத்தி மறைபொருளாக வைத்திருப்பது, அவர்களது சமயக்கிரியை முறைகளுக்கு இணைந்ததாகவே அமைந்திருக்கிறது. ஆதிதொட்டே தமிழர் சமுதாயத்திலிருந்து வந்த இலிங்க அமைப்பு, முருக தத்துவம், நடராசவடிவம், திருநீறு, நிறைகுடம் போன்றவை ஆழ்ந்த கருத்தினை உள்ளடக்கி, விசாரத்தினாலன்றி வெளிப்படுத்தாதன போலவே தமிழ் அரிச்சுவடி அமைப்பும் அமைந்திருக்கிறது. அருவுருவான இறைவனை வடிவும் வடிவுமற்றதுமான முப்பொருளின் கூட்டான தனிப்பொருளாய் காட்டப்பட்டுள்ளது. அது உயிராகவும் மெய்யாகவும் வெளிப்படாது மறைபொருளாயிருக்கும் இலிங்கத்தின் ஆவுடையார் உட்புதைந்த மறுபாதியை ஒக்கும். அப்பாதியிலே நாம் ஆய்ந்துணர்ந்து அறிய வேண்டிய ஆய்தம் ஆயபொருளாம். புலப்படத் தோன்றும் இலிங்கத்தின் மேற்பகுதியே உயிராகவும் மெய்யாகவும் இறையம்சத்தைக் குறிப்பதாயுள்ளது. அப்பகுதியே அரிச்சுவடியில் உயிர் எழுத்தாகவும், மெய்யெழுத்தாகவும், உயிர்மெய் யெழுத்தாகவும் மலர்ந்திருக்கிறது. அது இம்மைக்குரியது, ஆய்தம் குறிக்கும் பக்தி மறுமைக்குரியது.

அண்ட சராசரமனைத்தும் அணுக்களின் ஈட்டத்தினால் ஆனவையே. அணு ஒவ்வொன்றும் (Newtron) களின் ஈடாகும். நியூற்றொன் ஒவ்வொன்றும் புறோற்றொன் (Proton), இலக்றொன் (Electron) ஆகியவற்றின் சேர்க்கையாம். எனவே நியூற்றொன், புறோற்றொன், இலக்றொன் ஆகியவற்றின் தொகுப்பே அண்டசராசரத்து ஆதி அணு எனலாம். அந்த ஆதி அணுவைக் குறிக்கும் அடையாளமே ஆய்தம(ஃ) என்ற முப்பாற்புள்ளி வடிவாம். ஒரு நியூற்றொனில், புறோற்றொனானது இலிங்க வடிவில் மேல் கீழாக இயங்கிக் கொண்டிருக்கும். இலெக்றொனானது இலிங்கத்தை தாங்கி நிற்கும் ஆவுடையாரின் வட்ட வடிவத்தில் புறோற்றனைச் சுற்றி வந்து கொண்டிருக்கும். எனவே தமிழ் மக்கள் வகுத்து வணங்கிவந்த இலிங்க வடிவமானது, அண்டத்து மூல அணுவைக் குறிக்கும் அமைப்பெனலாம். அந்த மூல அணுவின் விரிவே அண்ட சராசரமாம்.

பழந்தமிழ் மக்களின் பரம்பரைத் தெய்வமாய முருகன் வழிபாட்டில் மலர்ந்த கந்தன் கதையிலும் இவ்வாறே பெருந்தத்துவப் பொருள் புதைந்திருக்கக் காணலாம். அங்கு முருகன் பரமாத்மாவைக் குறித்து நிற்க, வள்ளி சீவாத்மாவைக் குறித்து நிற்கும். சீவாத்மா ஐம்புல வேடரின் அவத்தையில் நீங்கி, அகங்காரமாகிய சூரனை ஒழிக்க வல்ல பரமாத்மாவை அடைய ஆற்றும் முயற்சியே கந்தபுராணக் கதையாம். அரிச்சுவடியிலே அகரம் சீவாத்மா – வள்ளி, ஆய்தம் பரமாத்மா – முருகன். உயிர் மெய்யிலேறி உலக அனுபவங்களைப் பெறுதலே உயிர்மெய் எழுத்துக்களின் குறிப்பு.

அனுபவ முதிர்வில், மெய்யும் பொய்யாமென உணர்ந்து, மெய்யை விட்டகன்று உயிரானது எய்த முயலும் நிரந்தர மெய்ப்பதமே ஆய்தம். உடல் நிரந்தரமற்ற பொய்யான மெய், மெய்போலத் தற்காலிகமாக மெய்ஞானம் மலரும் வரை தோன்றுவது. அதனாலே தான் மெய்யெழுத்துக்கு ஒரு புள்ளி. நிரந்தர மெய்யான பரமாத்மாவாய ஆய்தத்துக்கு மூன்று புள்ளி. பொய்யாகும் உடலும் மெய்யின் இயல்பைக் காட்டி நிற்பதால் மெய்யெனப்பட்டது. உண்மை ஞானம் உதயமாகும் போது, ஒரு புள்ளியோடு அமைவது உண்மையான மெய்யென்றும். முப்பாற்புள்ளி பெற்ற பரமாத்மாவே நிரந்தர மெய்யெனும் தெளிவு பிறக்கும். உடலிலும் பரமாத்மாவின் அம்சம் ஓரளவுண்டு என்பதைக் குறிப்பதற்காகவே, ஆய்தத்திற்குரிய முப்பாற் புள்ளிகளில் ஒரு புள்ளி மெய்யெழுத்துக்கு அளிக்கப்பட்டது. பழந்தமிழ் எழுத்துக்களில் எகரமும், ஒகரமும் புள்ளிபெற்றிருந்தன எனத் தொல்காப்பியம் கூறும். உயிரானது விசார நிலையை எய்தும் போது, அதனைத் தெய்வாம்சம் கூடுகிறது என்பது அதன் குறிப்பாகும். உயிரானது மெய்யிலேறி மெய் யெழுத்துக்குரிய புள்ளி மறைந்து விடுகிறது. அது உயிர் உடலிலே சேர்ந்து வரும் போது, அவ்வுடலிலுள்ள தெய்வாம்சம் வெளிப்படையாக இல்லாது மறைபொருளாகி விடுகிறது என்பதைக் காட்டி நிற்கும். உயிர் உடல்மேல் செறியும் போது, உயிரம்சம் கரந்தும் மெய்யம்சம் பரந்தும் தோன்றுவதையொத்து, உயிரெழுத்து மெய்யெழுத்தி லேறிவரும் போது மெய்யெழுத்தின் பகுதி மிகுந்தும் உயிர் எழுத்தின் பகுதி சுருங்கியும் அமைவதை அவதானிக்கலாம். அது வெளிப்படையாக மெய்போலத் தோன்றும் உடல் என்பதையும், அனுமானத்தாலன்றிக் கண்டு தெளிய முடியாதிருப்பது உயிர் என்பதையும் விளங்குவதாம். அதனாலேதான் உடலை மெய்யென்று கூறும் வழக்கமும் ஏற்பட்டிருக்கலாம்.

தமிழ்ச் சான்றோர் வகுத்த தாண்டவக் கோன் (நடராச) வடிவ அமைப்பிலும் இதனையொத்த தத்துவப் பொருள் பொதிந்து கிடக்கக் காணலாம். அப்பொருளின் பஞ்ச கிருத்தியங்களை உருவகித்துக் காட்டும் அவ்வடிவில், ஊன்றியகால் மாயாசக்தியாகவும், தூக்கியகால் அருட்சக்தியாகவும் உணர்ந்து, ஆன்ம ஞானமடைய மாயாசக்தியால் தூக்கப்பட்டு (மாயையகன்று), அருட்சக்திக்கால் (தெய்வ அருள்) சீவாத்மா பரமாத்மாவை நாடியேகும் முயற்சியைச் சித்தரித்துக் காட்டுவதாகும். அதே கருத்து அரிச்சுவடி அமைப்பிலும் காட்டப்பட்டுள்ளது. அகரம் சீவாத்மா, ஆய்தம் பரமாத்மா. அந்தச் சீவாத்மா ஆய்தமாகிய பரமாத்மாவையடைய முயன்று பெறும் அனுபவங்களே உயிர்மெய் வடிவங்கள்.



பசுவின் கரிய மலத்தினை அக்கினியினால் சுட்டு வெண்ணீறாக்கிய திருநீறு, ஆன்மாவாகிய பசுவின் ஆணவம், கன்மம், மாயையாகிய மலங்களைத் திருவருள் ஞான அக்கினியினால் சுட்டு நீறாக்க வேண்டுமென்ற உட்கருத்தினை மக்களுக்குத் தினமும் அறிவுறுத்திக் கொண்டிருக்க வேண்டுமென்பதற்காக அணிந்து கொள்ளும் தத்துவத்தின் உட்கிடக்கை அரிச்சுவடி அமைப்பிலுமுண்டு. அதில் அகரம் பசுவாகிய ஆன்மாவாகவும், ஆய்தம் திருவருட் பிளம்பாகவும், வல்லினம், மெல்லினம், இடையினமாக வகுக்கப்பட்ட மெய்யெழுத்துக்கள் ஆணவம், கன்மம், மாயையாகிய மும்மலங்களாகவும், உயிர் மெய்யெழுத்துக்கள் ஆன்மாவாகிய பசு ஆணவம், கன்மம், மாயையை மும்மலங்கள் வசப்பட்டுப் பெறும் உலகியல் அனுபவமாகவும் அமையும்.

குடம் உடலாகவும், தேங்காய் தலையாகவும், ஐந்து மாவிலே ஐம்பொறிகளாகவும், குடத்தக நீர் உடலுறை உயிராகவும், குடத்தைச் சுற்றிக் கட்டப்படும் நூல்பந்த பாசமாகவுங் கருதி, மனித உடலமைப்பில் ஆக்கப்படும் கும்பத்து நீரைப் பலவித பூசையின் பின் இறையுரு மீது சேர்த்து, உயிரானது உலக அனுபவங்களிலே தேறி ஆன்ம அனுபவம் பெற்று இறையோடு கலக்கும் என்ற உண்மையை கும்பாபிஷேக வைபவத்திற் பாவனை செய்து காட்டும் முறைக்கும், அகரம் உயிராகவும், மெய்யெழுத்துக்கள் ஐம்பொறியும் அறிவுங் கொண்ட உடலாகவும், உயிர்மெய்யெழுத்துக்கள் பந்தபாசங்களாகவும், ஆய்தம் இறையாகவுங் கருதிச் செய்யப்பட்ட அரிச்சுவடி அமைப்பு முறைக்கும் உள்ள நெருங்கிய ஒற்றுமையை உற்று நோக்கி உணர்ந்து கொள்ளலாம்.

இவ்வாறே பண்டைத் தமிழர் மேற்கொண்டிருந்த சமயக் கிரியை முறைகள் பலவற்றுக்கும், அவர்கள் வகுத்த அரிச்சுவடி அமைப்புக்கும் நெருங்கிய தொடர்பும் ஒற்றுமையும் இருப்பதைக் காணலாம். உண்மையில் அவர்கள் கொண்டிருந்த சமய ஞானக் கருத்தினை உள்ளடக்கியே அரிச்சுவடி எழுத்து முறையை வகுத்துக் கற்போருக்கு ஆத்ம ஞான தத்துவத்தைக் குறிப்பாக உணர்த்த முயன்றிருக்கிறார்கள். உயர்ந்த தத்துவ ஞானக் கொள்கைகளை மறைபொருளாக உரைப்பதே ஆன்றோர் மரபாகும். அதற்கிணையவே அரிச்சுவடி அமைப்பில் ஆத்ம ஞான வைப்புச் சூக்குமமாக இடம் பெற்றிருக்கிறது. தமிழ் எழுத்துக்கள் இறைத் தத்துவத்தை உணர்த்துவனவாகையாற்றான், 'எழுத்தறிவித்தவன் இறைவனாவான்' என்ற வாய்மொழியெழ ஏதுவாயிற்றேனலாம்.

இதே ஆத்ம ஞானதத்துவம் வடமொழி எழுத்துக்கும் இயைவதோ எனில், இல்லையென்றே சொல்ல வேண்டும். வடமொழியிலே உயிரெழுத்திலும்

மெய்யெழுத்திலும் எழுத்துக்கள் தமிழ் மொழியை விடப்பல மேலதிகமாய் இருந்தாலும், உயிர் எழுத்துக்களிற் சில குறிலற்றனவாயிருந்தாலும், ஆய்தம் என்றொன்றில்லை யாதலாலும், அதற்குச் சமனான விசர்க்கத்தின் வடிவு முப்பாற் புள்ளியில்லாது இருபாற் புள்ளியாயிருத்தலாலும், விசர்க்கத்துக்குரிய புள்ளி மெய்யெழுத்துக் கில்லாததாலும், தமிழ் அரிச்சுவடி அமைப்புக் காட்டும் ஆத்ம ஞான தத்துவம் வடமொழி எழுத்தாக்கத்துக்கு அமையாதென்று திடமாகக் கூறலாம். வடமொழி எழுத்தமைப்பு ஆரியரின் தனியாக்கமா அல்லது பிறிதொன்றைத் தழுவிச் செய்யப்பட்டதொன்றா என்ற சந்தேகத்தை அதன் பெயராய 'சமஸ்கிருதம்' (சம்–நான்குஸ்கிருதம்–செய்யப்பட்டது) என்ற சொல்லே தூண்டி நிற்கிறது, வடமொழி எழுத்தமைப்பு ஆரியரின் தனியாக்கமென்றால், அவர்கள் வாழ்ந்த புகுந்த பிரதேசங் களிலெல்லாம் ஆரியரின் சொந்தபந்தங்கள் செறிந்திருத்தல் போல வடமொழி எழுத்தமைப்பும் பரந்திருக்க வேண்டும். அவ்வாறன்றி வடமொழியாகிய சமஸ்கிருதம் இந்திய கண்டத்துக்கே உரியதாகையால் அதன் எழுத்தமைப்பும் ஆரியர் வருகைக்கு முன் இந்திய தேசத்திருந்த பிறமொழி எழுத்தமைப்பை ஒட்டியே ஆக்கப்பட்டிருக்க வேண்டும். அன்றியும் சமஸ்கிருத எழுத்தின் பெயர் தேவநாகரி என்றிருத்தலால் அது ஆதியில் இந்திய கண்டத்துப் பரந்திருந்த நாகரின் மொழி எழுத்துக்களைத் தழுவிச் செய்யப்பட்டுத் 'தேவ' என்ற அடையிட்டு நாகர் மொழி எழுத்திலிருந்து பிரித்தறியப்பட்டதாகத் தோன்றுகிறது. ஆரியர் இந்திய கண்டத்துட் புகுமுன், வடஇலங்கை முதல் நேபாளம் வரை வாழ்ந்தவர்கள் நாகர் குலத்தவர். ஆகையால் வடமொழி எழுத்தமைப்பு ஆரியரின் தனியாக்கம் எனல் பொருந்துவதாயில்லை. எனவே, தமிழ் மொழி எழுத்தமைப்புப் பிரதிபலிக்கும் ஆன்ம ஞான தத்துவம், வடநாட்டாக்கன்றித் தமிழ் நாட்டாருக்கே முன்னுரிமை உடையதாகும்.

*இலக்கிய வித்தகர்*
கலாநிதி கே. எஸ். நடராசா

---

*ஒய்ந்தாய்ந்து பார்க்கையிலே...... என்னும் ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பிலிருந்து) இலக்கிய செம்மல் செ. குணரட்னம் அவர்கள் தந்துதவியது.*

*பழம் நழுவி பாலில் விழுந்தது போலவும்,*
*எனக்கு மஞ்சு கண்ட மஞ்ஞை போலவும் இருக்கிறது.*
*(மஞ்சு = மேகம்) மஞ்ஞை = மயில்*

*இரா. மயில்வாகனம்*



# திருமூலரின் சமயச் சிந்தனைகள்



திருமந்திரம், கடவுள் வாழ்த்து முதலாவது பாடல் "ஒன்றவன் தானே....." எனத் தொடங்குகிறது. "ஒருவனே தேவன்....." என்று திருமூலர் மற்றொரு பாடலில் குறிப்பிடுகிறார். "சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை" எனும் திருமந்திரப் பாடல் அடி, அந்த ஒருவன், சிவன் என்பதை உறுதி செய்கின்றது. அவன் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத் தலைமகன்; மூவர்க்கும் மூத்தவன், யாவர்க்கும் அப்பன், பெருந்தெய்வம், இறையவர், பேரருளாளன் என்று திருமூலர், சிவன் பற்றிக் கூறுகின்றார்.

சிவனின் தன்மைகள் பற்றிக் குறிப்பிடும் போது "தீயினும் வெய்யன் புனலினும் தண்ணியன்"; "சேயினும் நல்லன் தாழ்சடையோனே" என்கிறார் திருமூலர். சிவன் ஞானாக்கினி; நெருப்பிலும் வெப்பம் மிகுந்தவன். அவனை வழிபடுபவர்களின் வெவ்வினைகளை எரித்துப் பொசுக்கி விடுபவன்; அஞ்ஞானத்தை நீக்கி விடுபவன்; குளிர்ந்த நீரிலும் பார்க்கத் தன்மை பொருந்தியவன். அவனின் திருவருட் கருணையை இங்கு காட்டுகிறார்.

எல்லோருக்கும் உரிய இறைவர் ஒருவரே; அதுவே சிவம்; அதுவே பரம்பொருள்; அதுவே உண்மை; என்பது திருமூலரின் முடிபு.

"இரண்டு அவன் இன்னருள்" என்று குறிப்பிடப்படுவதிலிருந்து. ஒன்றாகிய சிவம், திருவருள் சக்தியாகத் தொழில்படும் போது சிவமும் சக்தியும் இணைந்துள்ள நிலை தெளிவாகின்றது. பாதி ஆண், பாதி பெண் ஆக உள்ள அர்த்தநாரீஸ்வரர் வடிவம், திருமூலரின் சிந்தனைக்குச் சான்றாக உள்ளது.

எம் இறை, சிவம் திருமூலனாகிய என்னால் சிவம் வழிபாடு செய்யப்படுகிறது. ஆனால் சிவத்தை வழிபாடு செய்பவர்கள் யாருமே இல்லாமல் போய்விட்டார்களே, என்கிறார் திருமூலர்.

*"என்னால் தொழப்படும் எம் இறை மற்றவன்*
*தன்னால் தொழப்படுவார் இல்லை தானே."*

திருமூலர் தமிழ் நாட்டிற்கண்ட நிலைமையை இவ்வாறு கூறுகின்றார்.

சிந்துவெளியில் வாழ்ந்த மக்கள் சிவனை முழுமுதற் கடவுளாக வழிபட்டனர். அந்த வழியில் திருமூலரின் குருபாரம்பரியம் வந்திருக்கின்றது.

காலத்தால் முற்பட்ட தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் இறைவனை, "முனைவன்" எனக் குறிப்பிடுகிறது. 'சிவம்' என்ற சொல் அந்நூலில் இல்லை.

*"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்*
*முனைவன் கண்டது முதனூலாகும்"*

சங்க இலக்கியங்களில் சிவனுக்குரிய வேறு பெயர்கள் இடம் பெற்றுள்ளது. எனினும் "சிவம்", "சிவன்" போன்ற சொற்களை நேரடியாகக் காணமுடியவில்லை. எனவே திருமூலர் தமிழ் நாட்டிற்கு வந்த பொழுது, சிவத்தை வழிபடுபவர் இல்லாத நிலையைக் கண்டு அவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

சிவம், சைவம் என்பவற்றை சைவத் தமிழ் வரலாற்றிலே முதன் முதலாகக் குறிப்பிட்டவர் திருமூலரே.

*"சைவம் சிவனுடன் சம்பந்தமாகுதல்*
*சைவம் தனையறிந்தே சிவம் சாருதல்."*

எனும் பாடல் அடிகள் சான்றாகின்றன.

வேத நெறியின் செல்வாக்கு தமிழ் நாட்டில் சிவநெறியைப் பின்னடையச் செய்திருக்க முடியும். எனினும் சிவநெறியை அற்றுப் போகச் செய்யமுடியவில்லை என்பதையும் உணர்ந்து கொள்ள முடிகின்றது. ஆலமர் கடவுள் (புறம் 198); ஆல்கெழு கடவுள் (திருமுருகாற்றுப்படை, 256); முக்கட் செல்வன் (அகம் 181) என சங்க இலக்கியங்களில் சிவனைக் குறிக்கும் வேறு பெயர்கள் காணப்படுகின்றன. சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காப்பியங்களில் சிவன் பற்றிக் குறிப்புகள் உள்ளன. சிவனின் மூவகை நடனங்களான கொடு கொட்டி, விஸ்வரூபதாண்டவம், பாண்டுரங்கம் பற்றியும் திரிபுரதகனம் பற்றியும் சிலப்பதிகாரத்தில் குறிப்புகள் உண்டு. மணிமேகலையில், "ஈசன் இறைவன் என நின்ற சைவவாதி" என்னும்



பாடல் அடி இடம் பெற்றுள்ளது. இவை காட்டுவது யாதெனில் தமிழ் நாட்டில் சிவநெறி அல்லது சைவநெறி என்னும் பெயரால் சமயநெறி ஒன்று இருந்துள்ளது என்பதையேயாகும். ஆனால் திருமூலர் வந்த பொழுது சிவநெறியைக் கைக்கொள்வோர் யாருமே தமிழ் நாட்டில் இல்லை என்கிறார்.

'இமயத்தில் முக்கட் செல்வன் உறைவன்' என்னும் குறிப்பு சிலப்பதிகாரத்தில் உள்ளது. திருமூலர் இமயத்தின் ஒருபகுதியாகிய கைலையில் இருந்தே தென் நாட்டிற்கு வந்து சிதம்பரத்தில் அமர்ந்தார். அவர்தம் திருமந்திரப் பாடல் ஒன்றில் சிவபூமி என்று நான்கு இடங்களைக் குறிப்படுகிறார். மேருமலை, இலங்கை, சிதம்பரம், இமயமலையில் உள்ள கைலாயம் என்பனவே அந்நான்கு இடங்களும் ஆகும். சிந்துவெளியில் தோன்றிய சைவநெறி, திருமூலரின் கூற்றுப்படி இந்த நான்கு இடங்களிலுமே நிலை கொண்டு இருந்திருக்க வேண்டும். எனவே அவற்றையே சிவபூமிகள் என்கிறார். வேதநெறியாளரின் செல்வாக்கினாலும் தாக்கத்தினாலும் சைவநெறி இந்த நான்கு இடங்களில் மாத்திரம் ஒதுங்கிக் கொண்டது போலும். இலங்கையை ஆண்ட இராவணேஸ்வரரின் தவவலிமையும், சிவபக்திச் சிறப்பும் காரணமாக வேத இலக்கியச் சிந்தனைகளும், நெறியும் இலங்கையில் பரவ முடியவில்லை. ஆனால் வேத மறுப்பு நெறியாகிய பௌத்தம் பின்னால் இலங்கையில் பரவியது.

வேத சிந்தனையையும், நெறியும் இலங்கையில் பரப்ப அனுமதிக்காத காரணத்தால் வேத சிந்தனையாளரான வால்மீகியார் தாம் இயற்றிய இராமாயணத்தில் சிவநெறி ஒழுக்கத்தில் சிறந்து நின்ற இராவணேஸ்வரரைக் கீழ்மைப்படுத்தி மானபங்கம் செய்துவிட்டார். எனினும் திருமூலர் இராவணேஸ்வரர் ஆண்ட இலங்கைத் திருநாட்டினைச் சிவபூமி என்று சிறப்பித்துக் கூறி இராவணேஸ்வரரை மேன்மைப் படுத்தியுள்ளார்.

தமிழ் நாட்டில் சைவ நெறியைப் பரப்புதல் தொடர்பாக, வேதநெறியாளரின் பெரும் எதிர்ப்புக்கு திருமூலர் ஆளாகியுள்ளார். காரைக்கால் அம்மையார் கூட சிவனையே முழுமுதல் கடவுளாக ஏற்றிப் போற்றுகிறார். எனினும் ஈசன், இறைவன், பெம்மான் என்னும் சிவனைக் குறிக்கும் பெயர்களையே தம் தோத்திரப் பாடல்களில் எடுத்தாளுகின்றார். 'சிவகதி' என்ற சொல்லையும் பயன்படுத்துகிறார்.

*"காரைக்காற் பேய் செப்பிய செந்தமிழ் பத்தும் வல்லார்*
*சிவகதி சேர்ந்து இன்ப மெய்துவர்"*

என்ற பாடலடியில் சிவகதி என்ற சொல் இடம் பெற்றுள்ளது. காரைக்காலம்மையார் சிவபரம் பொருளை இறைவனாக ஏற்கும் அளவிற்கு துணிவு இருந்தாலும் சிவம் என்று அந்தச் செம்பொருளை அழைக்க முடியாத அளவிற்கு ஏதோ ஒன்று அவரைக் கட்டுப்படுத்தியுள்ளது என்றே கொள்ள வேண்டியுள்ளது. ஒரு வேளை, வேத இலக்கிய நெறியாளரின் எதிர்ப்பு காரணமாக, சங்க இலக்கிய நூல்களிலும், காரைக்கால் அம்மையார் நூல்களிலும் "சிவம்", "சிவன்" எனும் சொல்லாட்சிகள் இடம்பெறாது இருந்திருக்க முடியும். மேலும், வேத மறுப்பு நெறியாளர்களாகிய சமணரும், பௌத்தமும், வேத நெறியாளரின் எதிர்ப்புக்கு இசைந்து கொடுக்க மாட்டார்கள். அதனால் சமணரான சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோ அடிகளும்; பௌத்தரான, மணிமேகலை ஆசிரியர் சாத்தனாரும் சிவனைப் பற்றியோ, சைவ வாதியைப் பற்றியோ குறிப்பிடப் பயப்படவில்லை.

பக்தி இயக்க காலத்தில் வேத நெறியாளரும், சைவ நெறியாளரும் ஏதோ வகையில் இணக்கத்திற்கு வந்துவிட்டார். வேதநெறி தழைத்தோங்க, மிகு சைவத்துறை விளங்க வேண்டி நின்றனர். இருக்கு, யசுர், சாமம், ஆதர்வணம் என்னும் நான்கு வேத இலக்கியங்களைப் பொது நூலாகவும், சிவாகமங்கள் இருபத்தெட்டினையும் சிறப்பு நூலாகவும் ஏற்றுக் கொண்டு இணைந்த வைதிக சைவம் புதிய வழியில் செல்லத் தலைப்பட்டது. சைவ நாயன்மார்கள் தலைமை தாங்கினர். பக்தி இயக்கத்தின் பிரதான பணியாக வேத நெறிக்குப் புறம்பான சமணத்தையும், பௌத்தத்தையும் அழித்து ஒழிக்கின்ற தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இதுவரை மறைத்து வைத்துக் கொள்ளப்பட்டிருந்த சிவம், சிவன் என்னும் பதங்கள் பக்தி இயக்கத்துடன் வெளிப்பாடு ஆகின. தடை நீங்கியது. சொற்கள் பயன்படுத்தப்பட்டன. ஆனால் சிவம், சிவன் என்னும் சொற்களுக்குத் திருமூலர் என்ன பொருளைக் கொண்டிருந்தாரோ, அந்த மூலப் பொருள் – மூலனின் பொருள் – வைதிக சைவத்தில் மறைந்தேவிட்டது. சுருங்கக் கூறின் பொருள் அற்ற வெறும் சொல்லாகவே சிவம், சிவன் போன்ற சொற்கள் பிற்காலங்களில் கையாளப்பட்டன. சொல்லே பயன்படுத்தப்படாத நிலையிலும் பார்க்க; பொருளையும் உயிரையும் நீக்கிவிட்டு வெறும் சொல்லைப் பயன்படுத்துகின்ற நிலை மிகமோசமானது.

வேதம் ஓதி, வெண்ணூல் பூண்டு, வெள்ளை எருதேறி; பூதஞ் சூழப் பொலிய வருகின்ற ஒருவராகச் சிவன் வருணிக்கப்படும் நிலை வேதநெறி, சைவநெறி இணைப்பினால் ஏற்பட்ட மற்றொரு விளைவு யாதெனில், திருவாவடுதுறையிலே, மாசிலாமணியீசர் திருமுன்பு உள்ள பலிபீடத்தின் அடியிலே பலகாலமாக மறைத்து வைக்கப் பெற்றிருந்த திருமந்திரப் பாடல்கள்



மூவாயிரத்தையும், பக்தி இயக்கத்தின் தலைவர்களுள் ஒருவரான திருஞான சம்பந்தரினால் எடுக்கப் பெற்று வெளிப்படுத்தப் பட்டமையாகும். அத்துடன் நெடுங்காலமாகத் திருமந்திரத்திற்கு விதிக்கப்பட்டிருந்த தடையும் நீங்கப் பெற்றது. இது கி.பி. ஏழாம் நூற்றாண்டில் நிகழ்ந்தது. இதனால் சைவநெறியாளர் திருப்தியடைந்தனர். இன்னும் சில நூற்றாண்டுகளின் பின்னர், பன்னிரு திருமுறைகள் தொகுக்கப்பட்ட போது, பத்தாந் திருமுறையில் திருமந்திரம் வைக்கப்பட்டது. எனினும் திருமந்திரம் மக்களிடையே செறியவிடாமல் செய்யப்பட்டு வந்தமை புலனாகின்றது.

வைதிக சைவநெறியாளர் சிவனை முழுமுதல் கடவுளாக ஏற்றுக் கொண்டாலும், சிவனைப் பற்றியும், சிவனின் திருவிளையாடல்கள் பற்றியும் புராணங்கள் செய்து மக்களிடையே பரப்பினர். திருவிளையாடற் புராணம் இதற்கு ஓர் உதாரணம் சேக்கிழார் பெரியபுராணத்தில் மெய்யடியார்களின் வரலாறுகளை விவரித்தார். வேத, சைவநெறிகளுக் கிடையிலான இணக்கப்போக்கு அந்நூலில் தெளிவாக உள்ளது. திருமூலர் வரலாறு சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ளது. சைவநெறிப் போக்குடையவர்களைத் திருப்திப்படுத்துவதற்காக இருக்கலாம். ஆனால் திருமந்திரம் தந்த திருமூலரா இவர்? என்ற வினா எழத்தான் செய்கிறது.

எனவே திருமூலருக்கும், திருமந்திரத்திற்கும் தொடர்ந்து திரையிடப்பட்டே வந்துள்ளது.

திருமூலர் கூறும் சைவ உண்மைகள் பின்வருமாறு அமைகின்றன:

- முப்பொருள் உண்மை – பதி, பசு, சுத்தசத்தி
- மூவகை உயிர் – சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர்
- மும்மலம் – ஆணவம், கன்மம், மாயை
- முப்பத்தாறு தத்துவம் –
- நால்வகை நெறி – சரியை, கிரியை, யோகம், ஞானம்
- திருநீறு
- திருவைந்தெழுத்து
- இருள் வீழ்ச்சி
- திருக் கூத்து
- சிவலோகம்.

இவற்றை விரித்துக் கூறினால் பெருகும். திருமூலர் இவற்றுக்குக் கொடுத்த கருத்துக்கள் சரியான முறையில் ஆய்ந்து கொள்ள வேண்டியது அவசியம். பின்னர் வந்தவர்கள் திருமூலரின் கருத்தறியாதவர் போல் தோன்றுகின்றனர்.

சைவசித்தாந்தம் எனும் தத்துவக்கோட்பாடு வேதநெறியும், சைவத்துறையும் இணைக்கப் பெற்றநிலையில், வேதத்தைப் பொது நூலாகவும், ஆகமத்தைச் சிறப்பு நூலாகவும் ஏற்றுக் கொண்டு கி.பி. 13 நூற்றாண்டில் வடிவமைக்கப்பெற்றது. மெய்கண்ட சாத்திரங்கள் சைவசித்தாந்தக் கோட்பாட்டினைத் தாங்கி நிற்கும் தூண்கள்.

*"வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்*

*........................................................................................*

*ஆதிநூல் அநாதியம வன்தருநூல் இரண்டும்*

*ஆரணநூல் பொது சைவம் அருஞ்சிறப்பு நூலாம்"*

எனச் சிவஞானசித்தியார் கூறுகிறது. இந்த வகையில் நோக்கும் போது, சிவஞானசித்தியார் வேதச் சிந்தனைகளைத் தழுவியே சைவசித்தாந்தக் கோட்பாட்டை விளக்குகின்றது எனலாம். மேலும் அதன் சார்பு நூலாகிய சிவப்பிரகாசம்,

*"வேதாந்த தெளிவாம் சைவசித்தாந்தத்*

*திறன் தெரிக்கலுற்றாம்"*

என்று குறிப்பிடுவதிலிருந்து வேதநெறிச் சிந்தனை தான் சைவசித்தாந்தம் உருவாவதற்கு அடிப்படை என்பது போலத் தோன்றுகிறது. மெய்கண்ட சாத்திரங்கள் அவை தோன்றிய காலச் சூழ்நிலை, கால உணர்வுக்கு ஏற்ப வேதநெறிச் சிந்தனைக்கும் ஆகமநெறிச் சிந்தனைக்கும் இடையே ஒரு இணக்கத்தை ஏற்படுத்தி ஏற்கனவே தொன்றுதொட்டு இவ்விரண்டு நெறிகளுக்கு மிடையே இருந்து வந்த பேதங்களையும் முரண்பாடுகளையும் சமரசமாக தீர்த்து வைக்க முயற்சித்துள்ளன.

சைவசித்தாந்தம் என்ற சொற்றொடர் திருமந்திரத்தில் தான் முதன்முதலில் காணப்படுகிறது.

*"கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்*

*முற்பத ஞான முறைமுறை நண்ணியே*

*சொற்பத மேவித் துரிசற்று மேலான*

*தற்பரங் கண்டுள்ளோர் சைவ சித்தாந்தரே"* [12]

என்ற பாடல் இதற்குச் சான்று திருமூலர் கருதுகின்ற சித்தாந்தத்திற்கும், மெய்கண்ட சாத்திரங்கள் விவரிக்கும் சித்தாந்தத்திற்கும் அடிப்படையிலேயே வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆகமங்களைப் பிரமாண நூல்களாக ஏற்றவர் திருமூலர். மெய்கண்ட சாத்திரங்கள் ஆகமங்களுடன் வேத சிந்தனைகளையும்



பிரமாண நூல்களாகக் கொண்டுள்ளன. இந்த அடிப்படையிலேயே சைவசித்தாந்தத்திற்கு இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது.

திருமூலர் சைவத்தை முழுமையாகவே நோக்கினார். சைவம் ஆறுபடி நிலைகளை உள்ளடக்கியிருத்தலை தெளிவுபடுத்தியுள்ளார். அவையாவன:

1. போகாந்தம்.
2. யோகாந்தம்.
3. வேதாந்தம்.
4. சித்தாந்தம்.
5. காலாந்தம்.
6. நாதாந்தம்.

இந்த ஆறு நிலைகளையும் படிப்படியாகக் கடந்தவனே சைவத்தில் முழுமையை எய்த முடியும்; என்றும் பேரின்பத்தில் திளைத்திருக்கும் பேறு கிடைக்கும்; நாதாந்த முடிவின் அழகை, அமைதியை, இன்பத்தை அனுபவித்த அனுபூதிமான் திருமூலர். தாம் பெற்ற இன்ப அனுபவத்தைப் ஏனையோரும் பெறவேண்டுமென்ற பெருநோக்கினால் திருமந்திர நூல் செய்தார். ஆயினும் நெடுங்காலமாக மக்களிடையே பரவாமல் செய்து விட்டார்கள்.

வேத சிந்தனைகளும், சைவநெறிச் சிந்தனைகளும் தமிழ் நாட்டில் கண்ட இணக்கம் சந்தர்ப்பம் சூழ்நிலையை யொட்டி வலிந்து காணப்பட்ட ஒன்றாகவே கருதப்படவேண்டியுள்ளது. நாயன்மார்களும், மெய்யடியார்களும், சைவ புராணங்களைச் செய்தவர்களும், பின்னர் மெய்கண்ட சாத்திரங்களை ஆக்கியவர்களும் இந்த ஒருமைப்பாட்டினை ஏற்படுத்தப் பகீரதப் பிரயத்தனங்கள் செய்துள்ளனர். மறைத்து வைக்கப்பட்டிருந்த திருமூலர் திருமந்திரத்தை வெளிப்படுத்த உதவியதும் அந்த இணக்கத்தின் பயன்தான் ஆனாலும் என்ன பயன்? திருமந்திரம் மக்களைச் சென்றடையாமலும் பார்த்துக் கொண்டார்கள்.

வேதநெறிச் சிந்தனைகள் தான் படிப்படியாக பரிணாமம் பெற்று சிவாகம நெறிகளையும் உள்வாங்கி அவற்றையும் ஏதோ வகையில் வலியிழக்கச் செய்து, திருமூலர் திருமந்திரத்தையும் செயலிழக்கச் செய்து ஈற்றில் சைவசித்தாந்தம் என்று தற்போது கூறப்படுகின்ற வடிவத்தை உருவாக்க ஏதுவாகிற்றோ என எண்ண வேண்டியுள்ளது.

திருமூலரின் சமயம் தொடர்பான வேறு சிந்தனைகளை நோக்குவோம்.

கடவுள், சுத்தசத்தி, ஆத்மா என்பன அழிவற்றவை; என்றுமுள்ளவை.

இறைபரம்பொருளை முழுமையாக உணர்ந்து கொள்வதற்கு, மெய்ஞ் ஞானத்தின் பால் தாகமும் தவிப்பும் எமக்கு ஏற்படவேண்டும்.

இறைவனிடம் கேட்க வேண்டியவை அருள், கருணை, அன்பு, ஞானம் ஆகியவற்றையே.

அகவழிபாடும் புறவழிபாடும் மிக அவசியம் தவறாது செய்து வரவேண்டும்.

சமய சாதனையாக நல்லொழுக்கத்தைப் பேணல், அகப்புறத் தூய்மை யுடையவராய் ஒழுகுதல் அமைதல் வேண்டும்.

அக்கினி வளர்த்தல், அக்கினி வழிபாடு என்பன யாவர்க்கும் உரியன. வேத சிந்தனையின் பாற்பட்ட வேள்வி வேறு; அக்கினி வழிபாடு வேறு.–

அறம் செய்தல், சகல சீவராசிகளையும் அன்பு செய்தல், நடுவு நிற்றல் முதலிய ஆத்மீக சாதனைகள் சமய வாழ்விற்கு அவசியம்.

வினை என்று உண்டு. உயிரினங்களின் பிறப்பிற்கும் செயற்பாட்டிற்கும் காரணம் ஆகும்.

பஞ்சாட்சரம் என்னும் திருவைந்தெழுத்து சிவமூல மந்திரம் ஆகும். பஞ்சதசாட்சரம் என்னும் பதினைந்தெழுத்து சக்தி மூலமந்திரம்.

அன்பே சிவம்[13] என்பது திருமூலர் வாக்கு. அவரின் சமயச் சிந்தனைகளின் சாரமும் அதுவே. உண்மையான ஆர்வமும் சிரத்தையும் உடையவர்கள் இறைவனைக் காண்பர். அன்பினை முதலாக வைத்து இறைவனை வழிபாடு செய்தலே வழிபாட்டு முறைமை.[14] அதைவிட்டு, வேறு வழிபாட்டு முறைகளால் இறைவனை அடைய முடியாது என்பது திருமூலரின் உறுதியான முடிபு.

*"அன்போடு உருகி அகம் குழைவார்க்கு அன்றி*
*என் பொன்மணியை எய்த ஒண்ணாதே"*[15]

*என்பது திருமந்திரம்.*



இறைவனை நாடுவது, அடைவது ஆத்ம நேயத்தின் பொருட்டேயாகும். அவ்வாறு விழைபவர்களே உண்மைச் சமயிகள் உலக இச்சைகளை நிறைவேற்ற வேண்டியும், உடல் இச்சையின் பொருட்டும் இறைவனை நாடுபவர்கள், துதிப்பவர்கள் ஒரு போதும் சமயிகள் ஆகமாட்டார்கள்.[16] இதனை மிக அழுத்தமாகத் திருமூலர் கூறுகிறார்.

சமயச் சிந்தனைகள் போதனையோடோ, அறிதலோடோ அமையாது வாழ்வில் கடைப்பிடித்துச் சாதனையாகவும் வேண்டும் என்பது திருமூலரின் பெருவிருப்பு ஆகும். சாதனைக்குரிய மிக எளிமையான, இலகுவான, எல்லோர்க்கும் இயலுமான வழிமுறை யொன்றையும் வகுத்துத் தந்துள்ளார்.

சகல உயிரினங்களினதும் அமைதியான நல்வாழ்விற்குப் பிரார்த்தித்து;

- இறைவன் பாதத்தில் ஒரு பசுமையான இலையை வைத்து வணங்குதல்.
- ஒரு பசுவிற்கு ஒரு பிடி புல் வழங்குதல்.
- உண்ணும் உணவில் ஒரு கவளத்தைப் பசித்தோர்க்குக் கொடுத்து உண்ணுதல்.
- எல்லோருடனும் முகம் மலர்ந்து நல்ல இனிய, அன்பு நிறைந்த வார்த்தைகளைப் பேசுதல்.

இவற்றுள் எல்லாவற்றையுமோ, சிலவற்றையோ குறைந்தது ஒன்றையோ செய்து வருதல் சிறந்த ஆத்ம சாதனையாகும்.

*"யாவர்க்குமாம் இறைவர்க்கு ஒரு பச்சிலை*
*யாவர்க்குமாம் பசுவுக்கு ஒரு வாயுறை*
*யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி*
*யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரை தானே"*[1]

குமாரசாமி சோமசுந்தரம்
*ஓய்வுபெற்ற கல்வி அதிகாரி*
*தேசிய கல்வி நிர்வாக தொலைக்கல்வி ஆலோசகர்*

# மெய்கண்ட சாஸ்திரத்தின் முற்பட்ட சைவ சித்தாந்தம்



*"நேரேதான் இரவுபகல் கோடா வண்ணம்*
*நித்தம்வர உங்களை இந்நிலைக்கே வைத்தார்*
*ஆரே அங்ககவர்பெருமை என்னே என்பேன்*
*அறிக்கின்ற காற்றேகீ யாராலேதான்*
*பேராதே சுழல்கின்றாய் என்பேன் வந்து*
*பெய்கின்ற முகில்காள்எம் பெருமான் நும்போல்*
*தாராள மாக்கருணை பொழியச் செய்யும்*
*சாதகம் என்னே கருதிச் சாற்றும் என்பேன்"*
*(தாயுமானவர்)*

இரவுபகல் மாறாமல் வருகின்றன, அடிக்கின்ற காற்று திசைமாறாமல் ஆவர்த்தன ஒழுங்கில் இயங்குகின்றது. முகில்கள் மழையைக் கொண்டுவந்து பொழிகின்றன. இவை எல்லாம் ஆராலே இவ்வாறு நியதிமாறாமல் நிகழ்கின்றன, இவற்றைக்காணும் போது இறைவனின் நினைவு இயல்பாகவே உள்ளத்தில் உதிக்கின்றதன்றோ? இவ்வாறு இயற்கைத் தோற்றப்பாடுகளையும் இந்நிகழ்ச்சிகளையும் உற்றுநோக்கி இறைவன் ஒருவன் உள்ளான் என்று துணிந்ததும், இயற்கையிலே இறைவனைக் கண்டதும், அவன் இன்றி ஓர் அணுவும் அசையாது என்று உணர்ந்ததும் அவன் அருள்வேண்டி இரந்ததும், அவன்பால் அன்புவைத்து வழிபட்டதும் எமது சமயத்திலே இருக்கும் வேதகாலத்திலிருந்தே காணப்பட்டுவரும் சிறப்பியல்புகளாகும்.

அன்பினும் உயர்ந்த மதம் இல்லை. உண்மையிலும் மேலான சமயம் இல்லை. அன்பே சிவம் சீவன் என்ன சிவன் என்ன வேறில்லை சீவனார் சிவனாரை அறிந்தபின் சீவனார் சிவனாராய் இருப்பதே என்பது சித்தாந்த சித்தரான திருமூலநாயனார் வாக்கு.

இறைவன் ஒருவன் உளான் அவனே சிவன் அவனை அறிந்து வழிபட்டு அவனோடு இரண்டறக்கலந்து ஐந்துவித முத்தி பெற்று பேரின்பம் அடையாவண்ணம் தடுக்கின்ற நிலை ஒன்று உண்டு அதுவே ஆணவத்தின் வழிப்பட்ட நிலை. உலகெலெம் சிவன் செயலே என்ற சத்திநிபாத நிலையைத் தடுத்து எல்லாம் என்னாலேதான் ஆக்கப்படுகின்றன என்ற ஆணவம் உண்டாகிறது.



இது அநாதியே உயிர்களைப் பற்றி நின்று இருள்போல மறைக்கின்றது. அந்த மறைப்பை நீக்கி உயிர்கள் நல்வாழ்வு பெறும் பொருட்டு இறைவனின் அருளாலே அவற்றுக்குத் தநு, கரண, புவன, போகங்கள் அளிக்கப்படுகின்றன. அருள் புரியும் இறைவனை தநு கரண புவன உதவியால் அறிந்து மன மொழி மெய்களால் வழிபட்டு சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் படிகளிலே முறைதவறாமல் நின்று ஒழுகினால்முடிவில் அவ்விறைவனே முழுவடிவாக வந்து மெய்யுணர்த்தி ஊயிர்களுக்கு ஐந்துவித முத்திதந்து அருளும். இதையே அனுதியிட்டுக் கூறுகிறது சைவ சித்தாந்தம்.

இது பற்றியே "சித்தத்தை சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்" என திருத்தொண்டர் தொகையில் சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடியருளினார்கள். சிவபுராணத்தில் மணிவாசகரும் "சிவன் அவன் என்சிந்தையுள் நின்ற அதனால் அவன் அருளாலே அவன்தாழ் வணங்கி சிந்தை மகிழ சிவபுராணம் தன்னை முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன் யான்" என்று பாடினார்.

சித்தத்தைசிவன்பால் வைக்கும் இந்த சித்தாந்த கோட்பாடுகள் என்னென்பதை ஓரளவு நாம் உணரவேண்டும். தத்துவம், என்பது வடமொழி, கோட்பாடு தமிழ் மொழி, சைவசித்தாந்தம் என்பது அழிவற்ற நிலையான உண்மைப்பொருளாகிய சிவபெருமானை முற்றும் உணர்வதே. சித்தாந்த நூல்களில் உண்மைகள் தர்க்கரீதியாக விளக்கியிருந்தாலும் அவற்றைப் படித்து உணர்ந்து கொள்பவர்கள் அரிதாகவே உள்ளனர்.

தமிழ் மொழியிலே இக்கோட்பாட்டை முழுமையாக முதலிலே உருவாக்கித் தந்தவர் மெய்கண்டார். அதனால் இக் கோட்பாட்டைக் கூறும் சித்தாந்த சாத்திரங்களை மெய்கண்ட சாஸ்திரங்கள் என்று சொல்வதுமுண்டு. தமிழ் மொழியிலே பதிநான்கு நூல்கள் சித்தாந்த சாஸ்திரங்கள் என்று கொள்ளப்படும். அவை திகுவுந்தியார் தொடக்கம் சங்கற்பநிராகரணம் வரை உள்ளவை. ஏனையவை சந்தான குரவர்களினால் அருளிச் செய்யப்பட்டன. கி. பி 10–13ம் நூற்றாண்டுகட்கு இடைப்பட்ட காலமாயிருக்கலாம். இந்நூல்களை உணர்ந்து கற்றுக் கொள்வதற்கு காலஎல்லை வேண்டும். இறைவனை இடையறாதுவழிபட்டுஅதனால் பெற்ற ஆற்றல்கள் சித்திகள் எனப்படும்.

சைவ சித்தாந்த கோட்பாடுகள் மெய்யியல் ஆராச்சிகளுக்கு ஏற்றவாறு மெய்கண்ட தேவரால் வகுக்கப்பட்டது கி. பி 13ம் நூற்றாண்டளவிலே ஆனாலும் அதற்குள் ஆழமான சைவசமய உண்மைகளும் அடிப்படைக் கருத்துக்களும் மிகப்பழமையானவை.

ஆதிகாலத்தில் தவம், தியானம், வழிபாடு ஆகியவற்றின் மூலம் சித்திகள் அடைவது ஞானிகளின் நோக்கமாய் இருந்தது. பொது நலத்திற்கும் தற்பெருமைக்குமாகச் சித்திகளைச் செய்தனர். பலர், (ஒருகதை படித்திருப்பீர்கள்) ஒரு சித்தர் தெருவால் போய்க் கொண்டிருந்த யானையைத்தடவி இது இறந்து விடும் என்றார். பின்னர் எழும்பிவரும் என்றார் இவ்வாறே நடந்தேறியன. இவ்வாறு சில சித்துக்கள் நிலையற்றன. சிற்சபேசரது சித்தினாலே ஆண்டவர்கள் நிலையான சித்துக்களைச் செய்வார்கள்.

சைவசமய உண்மைகளும் அடிப்படைக் கருத்துக்களும் மிகமிகப் பழமையானவை. அவை வடமொழியில் வேதங்கள், உபநிடதங்கள், ஆகமங்கள் ஆகியவற்றிலும் தமிழ் மொழியில் தொல்காப்பியம், திருக்குறள், திருமந்திரம், தேவாரம், திருவாசகம் முதலிய நூல்களிலும் தொன்று தொட்டுப்பயின்று வந்தவைகளாகும். தொல்காப்பியத்தில் முதநூலுக்குரிய இலக்கணம் கூறப்பட்டிருக்கும் முறை சைவ சித்தாந்த மரபுக்கு பொருந்தியதாகவே உள்ளது.

*"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்*
*முனைவன் கண்டது முதநூல் ஆகும்"* *(பொருள் மரபியல் 649)*

முதனூலைத் தந்தருளும் முனைவன் இயல்பாகவே வினைகளினின்றும் நீங்கியவன் என்பதும் முற்றறிவுடையவன் என்பதும் அவன் உலகத்து மக்கள் உய்யும் பொருட்டு மெய்யுணர்ந்தோர் வாயிலாக முதநூலை வெளிப்படுத்துகின்றான். என்பதும் சைவ சித்தாந்திகளின் அடிப்படைக் கொள்கை என்பதை முன்னர் கண்டோம்.

இவ்வாறே திருக்குறளில் இறைவனது இயல்பும் (கடவுள் வாழ்த்து) இறைவனை அணைந்தோரது இயல்பும் (நீத்தார் பெருமை) மக்கள் வாழ்வாங்கு வாழ்வதற்கு அணைந்தோர் வாயிலாக இறைவன் வெளிப்படுத்திய அறத்தின் ஆற்றலும் (அறன் வலியுறுத்தல்) அன்பு நெறியைக் கடைப்பிடித்து அறவழியில் வாழ்ந்தால் வினை ஓரளவு கழிந்து மனம் பக்குவப்படும் என்பதும் (இல்லறவியல்) பக்குவமடைந்த உயிர் அருளைத் துணையாகக் கொண்டு பற்றற்றான் பற்றினைப் பற்றிநின்று மெய்யுணர்ந்து வீடு பெறும் என்பதும் (துறவறவியல்) சைவ சித்தாந்த மரபுக்கு ஒத்தவாறே தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. உதாரணமாகச் சில குறள் வெண்பாக்களைப் பார்ப்போம்.

1. இறைவனே தலைவன்: உயிர்கள் அவனை அறிந்து அவனடி தொழ வேண்டும்.

*"கற்றதனாலாய பயனென் கொல் வாலறிவன்*
*நற்றான் தொழாஅர் எனின்"* *(2)*

வாலறிவன் – தூய வறிவுடையவன் அதாவது தானே முழுதறியும் முற்றறிவுடையவன்.



*"கோளில் பொறியிற் குணமிலவே எண் குணத்தான்*
*தாளை வணங்காத் தலை"*

இறைவனின் எண்குணங்களாவன:– தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களில் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவில் ஆற்றல் உடைமை, வரம்பில் இன்ப முடைமை,
தாளை வணங்காத்தலை என்பதிலே தாடலை போற்கூடல், (தாள் + தலை = தாடலை) இரண்டாந் தன்மை அற்று ஒன்றாதல் என்னும் அத்துவித முத்தியின் இயல்பு குறிப்பாகப் பெறப்படுகின்றது.

2. நிலையற்ற உலகப் பொருள்களிற் பற்றொழிவதற்கு நிலையான இறைவனைப் பற்றி நிற்க வேண்டும்.

*"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு"* *(350)*

3. மெய்யறிவு பெற்றவர்களுக்கு ஆணவம் நீங்கிப் பேரின்பம் உண்டாகும்.

*"இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி*
*மாசறு காட்சியவர்க்கு"* *(352)*

மருள் = அறியாமை இது ஆணவத்தினால் உண்டாவது.
மாசறு காட்சி = மெய்யுணர்வு.

4. பிறப்புக்குக் காரணமான அறியாமை நீங்குமாறு முத்திக்கு காரணமான மெய்ப் பொருளைக் காண்பதே மெய் அறிவு.

*"பிறப்பெனும் பேதைமை நீங்கிச் சிறப்பென்னும்*
*செம்பொருள் காண்பதறிவு"* *(358)*

பேதைமை = அறியாமை; சிறப்பு = முத்தி; செம்பொருள் = கடவுள்.

5. உயிர்கள் இறைவனைச் சார்ந்து, உலகப் பற்றுக்கள் கெடுமாறு ஒழுகினால் மீளப்பிறப்பது இல்லையாகும்.

*"சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தருநோய்"*

(1) சார்பு = எப்பொருளுக்கும் சார்பான இறைவன்

(2) சார்பு = உலகப் பொருள்களில் வைக்கும் பற்று; அழித்து – மீண்டும், சார்தரா = வந்து சாரமாட்டார் சார்தருநோய் = பிறவித் துன்பங்கள், உயிர் சார்ந்ததின் வண்ணமாகும் தன்மையுடையது என்றும் சைவ சித்தாந்தக் கருத்து இங்கே உட்கிடைக்கையாயுள்ளது.

திருமூலர் அருளிச் செய்த திருமந்திரம் சைவ சித்தாந்தக் கொள்கைகளை இன்னும் தெளிவாகவும் கூறுகின்றது. சைவத்துக்குச் சித்தாந்தம் என்றும் பெயரும். திருமந்திரத்திலேயே முதன் முதலாக வழங்கப்பட்டிருக்கக் காண்கிறோம். "வேதாந்த தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன்" என்று சிவப்பிரகாசம் கூறுகிறது. இக்கருத்தை சிவமாதல் வேதாந்த சித்தாந்தமாகும் என்றும் நவமான வேதாந்த ஞான சித்தாந்தமே. திருமூலர் முன்னே கூறியுள்ளார்.

*"ஊனோ வுயிரோ வுறுகின்ற தேதின்பம்*
*வானோர் தலைவி மயக்கத் துறநிற்கத்*
*தானோ பெரிதறி வோமென்னு மானுடர்*
*தானே பிறப்போடிறப் பறியாரே"* *திருமூலர் (2354)*

இன்னும்

*"ஒன்பான் அவத்தையுள் ஒன்பான் அபிமானி*
*நன்பாற் பயிலு நவதத் துவமாதி*
*ஒன்பானில் நிற்பதோர் முந்துரி யத்துறச்*
*செம்பாற் சிவமாதல் சித்தாந்த சித்தியே"*

ஒன்பது விதமான அவத்தைகளில் சீவன் அபிமானித்து நின்று அவ்வொன்பது நிலைகளிலும் பொருந்தி நிற்கும் இவ்வொன்பதைக் கடந்த சீவதுரியம் பரதுரியம் சிவதுரியங்களில் சிவத்தைப் பொருந்த செம்பொருளான சிவமாதல் சித்தாந்தத்தால் அடையும் சென்னெறி ஆகும். இவ்வாறே ஆராய்ந்து நோக்கினால் மெய்கண்ட சாத்திரத்திற்கு முன்னமே சைவ சித்தாந்தம் இடம் பிடித்துக் கொண்டது தெளிவாகும்.

இரண்டாந் தந்திரத்தில் சிவபெருமானுடைய ஐந்தொழில்கள் மூவகை உயிர்கள் முதலிய கூறப்படுகின்றன. ஐந்தாந் தந்திரத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நாற்பாதங்களும் தீட்சை முறைகளும் விளக்கப்பட்டுள்ளன. எட்டாந் தந்திரத்தில் பதி, பசு, பாச விளக்கம் பேசப்படுகிறது. உண்மையில் திருமந்திரம் தமிழில் ஆகமப் பொருளைக் கூறும் அரியதொரு சாத்திர நூலாகவே விளங்குகின்றது.

(1) சைவ சமயத்துக்கு ஆதாரமாயிருப்பது அன்புடமை. அன்பே சிவம் இது எழுவாயில் கூறப்பட்டது.

*"அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே"* *(257)*



(2) பதி, பசு, பாச என்னும் முப்பொருளும் அநாதியாய் உள்ளவை.

*"பதி, பசு, பாசம் எனப் பகர்வர் மூன்றில்*
*பதியினைப் போற்பசு பாசம் அனாதி*
*பதியினைச் சென்றணு காப்பசு பாசம்*
*பதியணு கிற்பசு பாசம் நிலாவே"* *(59)*

உயிரானது பதியினைச் சாராவிட்டால் பாசத்தைச் சார்ந்து பாசமாகவே இருக்கும். உயிர் பதியைச் சார்ந்து நின்றால் பாசங்கள் உயிரை விட்டு நீங்கி விடும்.

(3) மெய்யுணர்வு பெறுவதற்கு உயிருக்கு உடம்பு வேண்டும்.

*"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்*
*திறம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார்*
*உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே*
*உடம்பை வளர்த்தோன் உயிர்வளர்த் தோனே"* *(704)*

உயிருக்கு அறிவு இல்லையாயினும் உயிர் ஆணவத்தின் பிடியில் இருப்பதனால் தன்னையும் அறியாது. தலைவனையும் அறியாது. சடமாய்க் கிடந்து அழியும் என்பது கருத்து.

(4) முத்தி நிலையிற் சீவன் (உயிர்) சிவனாகி, அத்துவித (இரண்டற்ற) நிலை அடையும்.

*"சீவ னெனச்சிவ னென்னவே றில்லை*
*சீவ னார்சிவ னாரை அறிகிலர்*
*சீவ னார்சிவ னாரை அறிந்த பின்*
*சீவ னார்சிவ னாயிட்டிருப் பாரே"* *(1979)*

(5) சிவ நெறியில் நிற்போர் தாம் இன்புறுவது போல உலகு இன்புறவிழைவர்)

*"நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்*
*வான் பற்றிநின்ற மறைப் பொருள் சொல்லிடின்*
*ஊன் பற்றிநின்ற உணர்வுறு மந்திரம்*
*தான் பற்றப் பற்றத் தலைப்படுந் தானே"* *(47)*

இருதயத்தின் உள்ளமான ஆகாசத்தைப் பற்றி நிலைத்த அதிரகசியமான சச்சிதானந்தப் பழம்பொருள் உடம்பைப் பற்றுக் கோடாகக் கொண்டு நிற்கும் அருளுணர்வு இது சத்தினி பாதத்தால் (திருவருட்சத்தி உயிர் மீது படிவதால்) உண்டாவது ஓங்கார மந்திரம், யோகம் இந்த ஓங்கார மந்திரத்தைப் பற்றி நிற்கச் சிவானந்தம் தலைப்படும் என்பது)

பிற்காலத்தில் தேவார, திருவாசகம் என்னும் இவை இரண்டும் தமிழ் வேதம் என்று போற்றப்படுபவை. இவைகளில் சைவ சித்தாந்தம் மறைந்தும் மறைபடாமலும் தோய்ந் திருக்கின்றது.

முன்னமே திருவள்ளுவர் காலம், சித்தருள் சித்தரான திருமூல நாயனார் திருமந்திரம். பின்னர் சமய குரவர்கள் நான்கு நாயன்மார்கள் காலம். இவற்றில் மறைந்திருந்தது சைவ சித்தாந்தம்.

எடுத்துக்காட்டாக இவை வேதத்தின் ஞான காண்டப் பொருளைச் சிவாகமத்துக்கு மாறுபடா வண்ணம் உள்ள படி எடுத்துக் கூறுபவை என்று 19ம் நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் எடுத்துக் கூறுகின்றார். திருமுறை நூல்களிலும் ஏனைய வாகவுள்ளன வைகளிலும் பொதித்து கிடக்கும் சைவ சித்தாந்த உண்மைகளை சித்தாந்த சாஸ்திரங்கள் கடைந் தெடுத்து வெண்ணெய் போலத் திரட்டித் தருகின்றன. சித்தாந்தம் இலக்கண மென்றால் அதற்கு ஆதாரமாகிய இலக்கியம் பன்னிரு திருமுறைகளே எனலாம்.

இப்போது சித்தாந்த சாஸ்திரங்களில் முறையே முதன்னூலாகவும், வழிநூலாகவும், சார்புநூலாகவும் கொள்ளப்படும் மூன்று முக்கிய நூல்களைப் பற்றி ஓரளவு விரிவாக நோக்குவோம்.

6. சமய குரவர்கள் நால்வரும் இறைவனை உள்ளத்தின் உள்ளே இருத்தினர்.
"வேத நெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்க

பூதபரம்பரை பொழிய புனிதவாய் திறந்தழுத, செல்வக்குழந்தை தன் சித்தத்தில் மறைந்திருந்த கள்வனாகிய சிவனைக் கண்டு "தோடுடைய செவியன்" எனத் தொடங்கி தேவாரப் பதிகங்களைக் கொஞ்சு தமிழில் பாடி அருளியது. மெய்ஞானியாகிய குழந்தை புதருள் மறைந்திருந்த உள்ளக் கள்வனாகிய சிவனின் தனித்துவத்தினாலே ஞானப்பால் உண்ட சக்தியால் கண்டு கொண்டது.

இறைவன் அறிவுள்ளனவும் அறிவில்லாதனவுமாகிய எல்லாப் பொருள்களிலும் வேரறக் கலந்து ஒன்றாயும், அவற்றின் வேறாயும், உடனாயும் இருக்கின்றான் என்பது சைவசித்தாந்தம். இது மெய்ப்பிக்கப்படுகிறது மெய்கண்டாருடைய காலத்துக்கு முன்னே. தேவாரம் முதலிய திருமுறைகளில்,

*"ஈறாய் முதல் ஒன்றாயிரு வெண்ணாண் குண மூன்றாய்*
*மாறாமறை நான்காய் வரு பூதம் அவை ஐந்தாய்*
*ஆறார் சுவை ஏழோசையொ டெட்டுத்திசை தளராய்*
*வேறாய் உடன் ஆனான் இடம் வீழிமிழ லையே".*

என்பது திருஞான சம்பந்தர் தேவாரம்.

உயிர் மலத்தினின்றும் நீங்கி இறைவனை அடைந்த நிலையிலும் இறைவனே அதற்குத் தலைவன், இந்த உண்மையைச் "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்" என்றும் சிந்தை தனைத் தெளிவித்துச் சிவமாக்கி எனையாண்ட அந்தமிலா ஆனந்தம் என்றும் சிவன் முத்தரான மணிவாசகப் பெருமான் பாடுகிறார்.



உழவாரப் படையாளி எனப் பெயர்பெற்ற திருநாவுக்கரசர் புறத்தே ஆலயங்கள் தோறும் களைகளைந்து அவர் உள்ளத்தின் உள்ளே சிவனைக் காணவிடாது மறைத்திருந்த மும்மலங்களையும் பக்தியாகிய உளவாரத்தால் களைந்து சிவனை தம்முள்ளே கண்டார்.

திரு அங்கமாலையில்,

*"தேடிக்கண்டு கொண்டேன் திருமாலொடு நான் முகனும்*
*தேடித் தேடொணா உள்ளத் தேவனை என் உள்ளே*
*தேடிக் கண்டு கொண்டேன்"*

என்று உள்ளுருகிச் சீவனில் சிவனைக் கண்டு ஆற்றேன் அடியேன் என்று கொஞ்சு தமிழில் தேவாரத் திருப்பதிகங்கள் பாடினார்.

தம்பிரான் தோழராய சுந்தரர் தம்மை தடுத்தாட்கொண்ட மானிடச் சட்டையில் வந்த எம்பெருமானை பித்தனென்று வன்மொழி கூறி வன்தொண்டராயினர். கடைசியில் அத்தா உனக்காளாய் இனி அல்லேன் எனலாமே என்கிறார். இவ்வாறே பித்தாபிறைசூடி என்ற தொடரில் விஞ்சு தமிழில் பதிகங்கள் பாடி அருளினார்.

திருவாசகம் என்னும் தேனை தாமும் பருகி ஆன்மாக்களுக்கும் பருக்கி நெஞ்சு தமிழில் அள்ளித்தந்தார் மணிவாசகப் பெருமானார்.

*"சிறந்த அடியார் சிந்தனையுள் தேனூறி நின்று*

..........................................................

*மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை*
*மறைந்திட மூடிய மாய இருளை......*
*ஓராதா ருள்ளத்து ஒலிக்கும் ஒளியானே.....*

என்றும் உள்ளமாகிய சீவனில் உள்ளிருக்கும் சிவனை நெஞ்சுருகிப் போற்றி நெஞ்சு தமிழில் திருவாசகத்தைப் பாடினார். தேவாரம், திருவாசகம் பாடிய நால்வரும் சமய குரவர்கள் பாடியவை கொஞ்சு தமிழ், கெஞ்சுதமிழ், விஞ்சு தமிழ், நெஞ்சு தமிழ் என்று நால்வகையாகத் தமிழைப் பகுத்துள்ளார்கள். வாரியார் இவரை ஐந்தாம் குரவர் என்றும் சிலர் கூறுவர். "என்னுள் நான் இருக்கிறேன். என்னில் சகல ஜீவன்களும் இருக்கின்றன. என்னும் பரமாத்மாவின் வாக்கால் தம் குடிலில் இருக்கும் சீவனில் சிவத்தைக் கண்டவர்.

நாம் இவைகளை அறிந்தபின் மெய்கண்ட சாத்திரத்தின் நடைமுறைகளுக்கு முந்தியே அனாதியாய் சைவ சமயத்தவர்கள் சைவ சித்தாந்த உண்மைகளைக் கண்டவர்கள் என்பதை ஓரளவு அறிந்தோம். இன்னும்,

சிவஞான போதத்தின் ஆசிரியரான மெய்கண்டதேவர் 13ம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர். இக்காலத்தின் உண்மையைக் கல்வெட்டும் சான்று பகருகிறது. இவருக்கு நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்பதாகவே சத்தியபோதி, பத்ருஹரி, என்ற பேரறிவாளர்கள் சைவசித்தாந்தம் ஓர் மெய்யியல் நூலாக உள்ளது என்று பேரறிவாளர் கூறுகிறார்கள். இவற்றின் உண்மையை உணருவதற்கு என்போன்றோர்க்கு சித்தாந்த சிற்றறிவேனும் இல்லை. ஆகவே அதைவிடுத்து மேற்கூறியவற்றிலிருந்து ஆதி தொடக்கம் திருவள்ளுவநாயனார். திருமூலநாயனார். சமய குரவர்கள் நால்வர் இவர்கள் வாழ்ந்த காலம் வரை அதாவது ஒன்பதாம் நூற்றாண்டு வரை உள்ளவற்றில் சைவ சமய சித்தாந்தம் இலைமறைகாய் போலப் பரந்திருந்தது என்பதை உணர்ந்து இறுதியாக உறுதி செய்துள்ளேன்.

ஆனால் தமிழ் நாட்டின் சமய வரலாற்றில் கி. பி. 10ம் நூற்றாண்டுவரை பக்தி நெறியே பிரதான சமயப்பண்பாகக் காணப்பட்டது. கி. பி. 7ம் நூற்றாண்டிலிருந்து பக்தி நெறி தீவிரமடைந்திருந்தது. இதற்குப் பிரதான காரணம் பௌத்த சமண சமயிகளின் எதிர்ப்பே.

சமண சமயத்தைத் தழுவிய நாவுக்கரசர்,

*"பத்திமையாற் பணிந்தடியேன் தன்னைப் பன்னாட்*
*பாமாலை பாடப் பயில்வித்தானை*
*எத்தேவுமேத்து மிறைவன் தன்னை*
*யெம்மானை யென்னுள்ளத்துள்ளே யூறும்*
*அத்தேனை அமுதத்தை ஆவின்பாலை*
*யண்ணிக்குந் தீங்கரும் பையரனை ஆதிப்*
*புத்தேனை புள்ளிருக்கு வேரூரானை*
*போற்றாதே யாற்றநாள் போக்கினேனே".*

என்று பாடுகிறார் இரங்கி.

*"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனை*
*பத்திநெறியறிவித்து பழவினைகள் பாறும் வண்ணம்*
*சித்தமலமறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட*
*அத்தனெனக் கருளியவாறார் றிவா ரச்சோவே".*

சைவ நாயன்மார்கள் இம்மதங்களுக்கெதிரான போராட்டங்களில் சைவ சித்தாந்த மெய்யியலை உருவாக்கும் முயற்சிகளில் பெரிதும் ஈடுபடவில்லையெனிலும் சித்தாந்த கொள்கைகளைப் போற்றினார்கள். கொள்கைகளின் உருவம் 13ம் நூற்றாண்டில் வெளியான மெய்கண்ட சாஸ்திரக் கொள்கைகளைப் படமெடுத்துக் காட்டுவது போல் இருக்கின்றன.



சுந்தரமூர்த்தி நாயனாரும் :- *அரவொலியாகமங்க ளறிவாரறி தோத்திரங்கள்*
*விரவியவேதவொலி விண்ணெலாம்வந் தெதிர்ந்திசைப்ப*
*வரமலிவாணன் வந்து வழிதந்தெனக் கேறுவதோர்*
*சிரமலியானைதந்தா னெடித்தான் மலை யுத்தமனே.*

பாடுகிறார்.

பல்லவ அரசனான இரண்டாம் நரசிம்ம வர்மனின் (கி. பி. 691–728) கைலாசநாதர் கோயிலில் கல்வெட்டொன்றில் "சைவ சித்தாந்த மார்க்கத்தைப் பின்பற்றுபவன். என்ற ஒரு தொடர்காணப்படுகிறது என்று கேள்விப்பட்டுள்ளேன். இன்னும் பல கர்ண பரம்பரையான கேள்விகள் உள.

எனினும் ஆகமப் போதனைகளிலிருந்து உருவாக்கப்பட்ட சைவசித்தாந்த மெய்யியல் ஒன்றின் தேவை கி. பி. 9ம் நூற்றாண்டிலேயே தமிழ் நாட்டில் உணரப்பட்டதெனலாம். சிவபுராணத்தின் இறுதிப் பகுதியில்

"சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்...... எனவருகிற வரிகளை ஆதாரமாகக் கொண்டு மெய்யியலின் அவசியத்தை மாணிக்க வாசக சுவாமிகள் அறிந்திருந்தார் என ஊகிக்கப்படுகிறது. திருமந்திரம் கி. பி. 9ம் நூற்றாண்டின் நூலாகக் கருதப்படுகிறது. திருமூலர்காலம் எவ்வாறாயினும் ஆகமக் கருத்துக்களின் , பெயர்கள் என்பன திருமந்திரத்திற் காணப்பட்ட பொழுதும், சைவ சித்தாந்தத்தை ஒரு முழுமையான மெய்யியற் கொள்கையாக திருமந்திரம் விளக்குதற்கில்லை.

தமிழ் நாட்டின் சமுதாய வாழ்வு சோழப் பெருமன்னர் காலத்தில் பல மாறுதல்களைக் கண்டது. ஆலயங்களை மையமாகக் கொண்ட சமய நிறுவனங்கள் நாடு முழுவதும் பரவலாகத் தோன்றி வளர்ச்சியடைந்தன.

*"ராஜேந்திர சோழனென்றும் பேருள்ள சோழராசன் ஒருவன்*
*பூமியாழும் காலத்தில் கங்காஸ்னானத்துக்குப் போனபோது*
*அவ்விடத்தில் சைவாசாரியர்களைக் கண்டு இவர்களை அழைத்து*
*வந்து தம்முடைய இராட்சியத்தில் ஸ்தாபித்தான்"*

அதுமுதல் காஞ்சி மண்டலத்திலும் சோழமண்டலத்திலும், சைவ சம்பிரதாயம் விஸ்தாரமாயிற்று. இத்தொகுப்பு எனக்குக் கிடைத்தது வறியோன் பெற்ற வான்பொருள் போல இருக்கிறது. "சித்தாந்த சாராவணியில் வந்த ஒரு தொகுப்பு.

ஆகவே இன்றுவரை மெய்கண்ட சாத்திரத்திற்கு முன்னதாகவே சைவ சித்தாந்தக் கொள்கைகள் பரவியிருந்தன என்பது புலனாயிற்று.

*திருச்சிற்றம்பலம்*

*"எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்பதறிவு"* – *வள்ளுவப் பெருந்தகை.*

தெ. ஈஸ்வரன்
***மொறீசியஸ் நாட்டிற்கான இலங்கைத் தூதுவர்***

# சித்தாந்தத்தில் உயிர்த் தத்துவம்



சிவபெருமானின் முக்கண்களைப் போல சைவ சித்தாந்தத்தின் முக்கண்களாக விளங்குவன பதி, பசு, பாசம் ஆகிய மூன்றுமே. இறை, உயிர், தளை என்னும் இவற்றைக் கூறலாம். இம்மூன்று அடிப்படைப் பொருள்களின் உண்மையே சைவ சித்தாந்தம் என்று சுருங்கக் கூறலாம். இவற்றில் யாதொன்றும் தனியாக நிற்பதில்லை. ஒன்றுடன் ஒன்று தொடர்புபட்டே நிற்கும். நன்கு ஆராய்ந்தால், வேதம், ஆகமம் முதலிய முதல் நூல்களும் இவற்றின் விரிந்த பல வகையான ஞான நூல்களும் பதி, பசு, பாசம் என்ற முப்பொருள்களின் தன்மைகளையும் விளக்க வந்த நூல்களேயாம்.

*"பலகலை ஆகம வேதம் யாவையும் கருத்து*
*பதி பசு பாசம் தெரித்தல்"*

*என்பது சிவப்பிரகாசம்.*

இவற்றுள் பதி என்பது இறைவனைக் குறிக்கும். எல்லாவற்றுக்கும், எவர்க்கும் மேலானவராய், அருவம், அருவுருவம், உருவம் என்னும் முத்திறத் திருமேனிகளைக் கடந்தவராய் ஞானசொரூபராய் இருப்பவரே பதி. உலகம் யாவற்றையும் படைத்துக் காத்து அழிக்கும் வல்லமை பெற்றாராயினும், தாம் ஒருவரால் படைக்கவும், காக்கவும், அழிக்கவும் படாமல் இருப்பவர் இறைவன் என்ற பதியேயாம்.

பதியைப் போல் ஒரு காலத்திலும் அழிவற்றதாக இருப்பதாய், எண்ணற்றதாய் அஞ்ஞானமாகிய ஆணவ மலத்தினால் மறைப்புண்டு கிடப்பதாய், இருவினை களுக்கும் ஈடான உடல்களை இறைவனால் பெறப்பட்டதாய் இறந்தும் பிறந்தும் வருவதாய், சிற்றறிவும் சிறுதொழிலும் உடையதாய் இருப்பது பசு எனக் கூறலாம்.

இப்பசுக்களாகிய உயிர்கள் எதனால் பாதிக்கப்பட்டுள்ளனவோ அது பாசம் எனப்படும். இது ஆணவம், கன்மம், மாயை என மூன்றாகும். இவற்றுள் ஆணவம் ஆன்மாக்களோடு அநாதியாய் இருப்பது மாயை எனப்படுவது உயிர்களுக்கு தனுவாதிகளைக் கொடுத்து மயக்கம் செய்வதாகும். ஆன்மாக்கள் தோறும் அனுபவமாய் விரிந்து நிற்பது கன்மம். இது உயிர்கள் எடுக்கும் உடம்புகளுக்குக் காரணமாய், உயிர் தொறும் அனாநியாகவே தொடர்ந்து கலந்து வடிவம், நிறம், உணவு, சுகம், துக்கம், ஆயுள் முதலியவற்றால் பலவகையாக விரிந்து பிறப்பு, இறப்புக்களை உண்டாக்குவதாய் உயிர்களின் அறிவினைச் செலுத்துவதாய் இருக்கும்.



இம்முப்பொருள்களுள் பதியாகிய இறைவன் உண்டா இல்லையா என்பதைப் பற்றிச் சமய நெறிகளிடையே கருத்து வேறுபாடுகள் உண்டு. அவன் கண்ணுக்கேயன்றிக் காட்சிக்கும் புலனாகாமல் இருப்பதாலேயே இந்த நிலை என்பர்.

ஆனால் உயிரைப்பற்றி இந்தநிலை இல்லை. கடவுளை அடியோடு இல்லை என்போரும் உயிரை அவ்வாறு மறுக்கத் துணிவதில்லை. அதற்குக் காரணம் உயிர் நம் கண்ணுக்குப் புலனாகாவிட்டாலும், கருத்துக்குப் புலனாவதாவேயாம். அவ்வாறு புலனாவதாலேயே பொருள்களை உயிர் உள்ளது, இல்லாதது என நம்மால் பகுத்தறிய முடிகிறது. எனினும், "இதுதான் உயிர்" எனக் குறிப்பிட்ட ஒன்றை நம்மால் தட்டிக்காட்ட முடியாது. எனவே தான் "உயிர்" என ஒன்று உண்டு எனப் பொதுவாகக் கொள்ளப்பட்டாலும் அது எது? என்பதில் பல்வேறு வகையான கருத்துக்கள் நிலவுகின்றன. கருத்துக்கள் அளவில் இவை பலவாறாயினும் இவை அனைத்தையும் இரு பெரும் பிரிவுகளில் அடக்கிவிட முடியும். ஒன்று வேதத்திற்குப் புறம்பான நெறியினரின் கருத்துக்களை உள்ளடக்கியது. இரண்டாவது வேத மதத்தினரால் கொள்கையாகக் கொள்ளப்படுவது.

வேத நெறிக்குப் புறம்பானவரில் ஒரு சாரார் உயிர் தங்கியிருக்கிற பருவுடம்பையே உயிர் என்கின்றனர். இது தூலதேகமே. அறிவே உயிராக இருப்பதும், அந்த அறிவு உடம்பில் அல்லாது உடம்பைவிட்டுத் தனியாக நிகழாதது ஆகவே உடம்பே உயிர் என்பதற்கு இவர்கள் கூறும் காரணங்களாகும். இதனைத்தக்க காரணகாரியங்கள் காட்டி மற்றையோர் மறுப்பர். உடம்பு வேறு உயிர் வேறு என்பதற்கு,

*"குடம்பை தனித்து ஒழியப் புட்பறந்தற்றே*
*உடம்பொடு உயிரிடை நட்பு"*

என்ற குறளுக்குமேல் விளக்கம் தேவையில்லை. மற்றொரு சாரார் இதற்கு நேர்மாறாகச் சூக்கும உடம்பு ஐம்பொறிகள் வாயிலாகப் புலன்களை அறிவதால் அதுவே உயிர் என்பது இவர்கள் வாதம். அவ்வாறாயின் நாம் காணும் கனவுகள் கனவில் கண்டது போலவே நனவிலும் நடத்தல் வேண்டும். நடைமுறை வாழ்க்கையில் அவ்வாறில்லை. எனவே சூக்கும தேகமும் உயிர் இல்லை என உணரலாம். வேறொரு சாரார் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐம்புலன்களையும் அறியத்துணைநிற்கும் ஐம்பொறிகளில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு புலனையே அறியுமேயன்றி மற்றொரு புலனை அறிய மாட்டாது. எனவே உயிர் இதற்கு வேறுபட்டது என தெளிவாகவே உணரலாம்.

*"பாராதி பூதம் நீ அல்லை உன்னிப்பார்*
*இந்திரியக பிரணம் நீ அல்லை"*

*என்று தாயுமானவர் கூறுவார்.*

பிராணவாயுவாகிய மூச்சுக்காற்று உள்ள பொழுது அறிவு நிகழ்தலும், அது இல்லாதபோது அறிவு நிகழாமையும் ஆகிய இவ்வுண்மை, பிராணவாயுவே உயிர் என உணர்த்துவதாகப் பிறிதொரு சாரார் கருதுகின்றனர். பிராணவாயு இருக்கும்போதே கருவிகள் உறக்கத்தில் செயற்படாது இருக்கின்ற ஒன்றே, கருவிகளையும் பிராண வாயுவையும் இயக்கும் உயிர் தனியாக இருப்பதை உணர்த்தப் போதுமானதாகும்.

மெய், வாய், கண், மூக்கு, செவி எனப் புறத்தில் தோன்றும் ஐம்பொறிகள் போல, அகத்தில் உள்ள உட்கருவிகளாக மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கு அந்தக்கரணங்களே அறிவு என்பது இன்னும் ஒரு சாராரின் வாதம். ஒரு அந்தக்கரணம் செய்யும் செயலை மற்றொன்று அறியாது என்பதே இந்த வாதத்தை மறுக்கப் போதுமானது. தூல உடம்பில் காணும் ஒவ்வொன்றையும் சுட்டி 'இது உயிர்' என நிறுவ முயன்ற வாதம் தோற்கவே' சிலர் கருவிக் கூட்டம் அனைத்தும் சேர்ந்த தொகுதியே ஆன்மா என வாதிடத் தொடங்கினர். அக் கருவிக்கூட்டம் அனைத்தும் சேர்ந்த தொகுதி 'உடம்பு' எனப்படுதலாலும், இவ்வுடம்பு உயிரினின்றும் வேறானது என விளக்கப்பட்டிருத்தலாலும் இவ்வாதமும் பயனற்றுப் போகிறது.

இந் நெறிகளைச் சாராத மற்றொரு சாரார் உயிர் சரனியம் என்கின்றனர், இல்லாதது, உள்ளது என்னும் இரண்டிலும் சேராதது என்பதே இவர்கள் சூனியம் என்பதற்கு கொள்ளும் பொருள். பொதுவாகப் பார்க்கும்போது உள்ளது போலத் தோன்றி, நுணுகி ஆராயும் பொழுது நிறுவமுடியாததாய் இருத்தலே இவர்கள் இம்முடிவுக்கு வரக் காரணமாகும். உள்ளது இல்லாமல் போகாது, இல்லாதது உளதாகாது. இரண்டும் ஒன்றுக்கொன்று முரணானவை. இவ்வாதமும் பொருந்தாமல் போகின்றது.

வேத நெறிக்குப் புறம்பானோர் இவ்வாறு சடம் முதலியவற்றையும் உயிர் என மயங்க, வேத நெறியினருள் ஒரு சாரார் பரப்பிரமம் எனப்படும் பரம்பொருளே உயிர் என்கின்றனர். இவர்களைப் பொறுத்த மட்டில், பரப்பிரம்மம் என்ற ஒன்றே உள்ளது.

அதனை அடுத்து வேறொரு பொருள் இல்லை. இவர்கள் ஏகான்மவாதிகள் என அழைக்கப்படுகின்றனர். பிரம்மம் ஒன்றே சத்தியப் பொருள் என்றும், உலகம் அசத்தியப்பொருள் என்றும் உயிர் பிரம்மமே தவிர வேறல்ல என்றும் ஆதிசங்கரர்



வாதத்தையே ஏற்கின்றனர். வானத்தில் காணப்படும் கதிரவன் பூமியில் உள்ள பல நீர் நிலைகளில் பிரதிபிம்பிப்பது போல, பரப்பிரம்மமே பல உடம்புகளில் பல உயிர்களாய் பிரதிபிம்பிக்கிறது என்பது இவர்கள் வாதம்.

இக்கருத்துப்படி சீவான்மாவும், பரமான்மாவும் ஒன்றே எனில், உயிர்கள் இறைவனைப் போல் தனித்து நின்று பொருள்களை அறிய வேண்டும். ஆனால் உண்மை அவ்வாறில்லை. மனம் முதலிய கருவிகளைக் கொண்டே உயிர் பொருள்களை அறிகிறது. அன்றியும் பரம்பொருளும் உயிரும் ஒன்றே என்றால், பரம்பொருளும் அறியாமைக்குட்பட வேண்டும். அவ்வாறில்லையாதலால் இவ்வாதம் பொருளற்றதாகி விடுகிறது. அதனால்தான் தாயுமானவர்,

*"சொல்லுக்கு அடங்காச் சுடர்பொருளை நாமெனவே*
*அல்லும் பகலும் அரற்றுவதேன்?"* *என்று கேட்கின்றார்.*

வேறோரிடத்தில் ''யர்ங்களே கடவுள் என்றிடும் பாதகத்தவர்'' என்கின்றார். இறைவனும் உயிரும் அறிவுடைப் பொருள்கள் என்பது உண்மையே. எனினும் இத்தன்மையாலேயே அவை ஒன்று என்றோ, சமம் என்றோ ஆகிவிடாது. மட்குடமும் பொற்குடமும் ஒன்றாகிவிடாது. உயிரும் இறைவனும் அறிவுப் பொருள்கள் என்றாலும் இறைவன் தான் அறியும் முற்றறிவினன். உயிரோ, ஒரு பொருளை ஒரு காலத்து அறிவதும், விட்டு விட்டு அறிவதும், முன் அறிந்ததைப் பின்மறப்பதும் ஆகிய சிற்றறிவினது. இறைவன் அறிவு என்னும் ஒரு துணைவேண்டாது தானேயாய் நிற்பது. உயிரின் அறிவோ, ஏதாயினும் ஒரு துணையைக் கூடியே பிரகாசத்தைப் பெறுவது. பரம்பொருள் வேறு, உயிர் வேறு என்பது இதனால் விளங்கும். இறைவனும் உயிரும் வேறானவை என்றும் இவ்வுணர்வே இறைவனிடம் இரண்டறக் கலக்கத் துணை செய்கின்றதென்று தாயுமானவர் பல இடங்களில் உரைக்கின்றார்.

*"அப்பொருளும் ஆன்மாவும் ஆரணநூல் சொன்னபடி*
*தப்பிலாச் சித்தொன்றாம் சாதியினால் – எப்படியும்*
*தேரில்துவிதம்; சிபாகமமே சொல்லுநிட்டை*
*ஆரும் இடத்து அத்துவிதமாம்"*

என்ற பாடலின்படி இறைவனும் உயிரும் ஒரு சாதி என்னும் கருத்தையும், அவை இரண்டும் வேறானவை என்ற கருத்தையும் முக்தி நிலையில் உயிர் இறைவனோடு இரண்டரக்கலக்கும் என்பதையும் அடிகள் மிகத் தெளிவாக உரைக்கின்றார். அதுவே அத்துவிதம் ஆகும். அத்துவிதம் என்ற நிலையினை, ஒன்றாய், வேறாய், உடனாய் இருப்பது என்றே சைவசித்தாந்தம் விளக்கும்.

இறைவனும் உயிரும் வேறு வேறானவை என்ற இவ்வுணர்வே அத்துவித ஞானத்தை உண்டுபண்ணும் என்பதை,

*"வேதமுடன் ஆகமம் புராணம் இதிகாச முதல்*
*வேறுமுள கலைகளெல்லாம்*
*மிக்காக அத்துவித துவிதமார்க் கத்தையே*
*விரிவா எடுத்துரைக்கும்*
*ஊதரிய துவிதமே அத்துவித ஞானத்தை*
*உண்டு பண்ணும் ஞானம் ஆகும்"*

*என்ற பாடலில் அவர் விளங்கவுரைக்கின்றார்.*

"இறைவனால் உயிர் அறிவிக்கப்பட்டு இறைவனோடு அது கலக்கும் நிலையில் அக்கலப்பில் அது கடவுளுக்கு வேறில்லை என்னும் கருத்தில் வேதாந்த சித்தாந்தங்கள் ஒன்றுபடுகின்றன என்ற கருத்தையும் அடிகள்,

*"சந்தமும் எனதுசெயல் நினது செயல்*
*யானெனுந் தன்மைநினை அன்றி*
*இல்லாத தன்மையால் வேறலேன்,*
*வேதாந்த சித்தாந்த சமர சுபாபம் இதுவே"*

என்ற பாடலில் குறிப்பிடுகிறார். இவையனைத்தும் இறைவனும் உயிரும் ஒன்றல்ல என உறுதியாக உணர்த்தும்.

இவ்வகைக் கருத்துக்களேயல்லாமல் மூன்றாவதாக ஒரு கருத்தும் அண்மையில் எழுந்துள்ளது என இந்திய ஆய்வியல்துறை, மலாயாப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டாக்டர் இரா. தண்டாயுதம் அவர்கள் குறிப்பிட்டு அதனைத்தக்க ஆதாரத்துடன் மறுத்துள்ளார். இதற்கும் முன்பு குறிப்பிட்டவற்றுக்கும் அடிப்படையான வேறுபாடு உளது. முன்னவை சைவ சித்தாந்தத் தத்துவத்திற்குப் புறம்பானவை எனத் தெளிவாகத் தெரிபவை. இதுவே, சைவ சித்தாந்தத்தின் பெயராலேயே "கொள்கை" என வெளிவந்துள்ளது.

*இக்கொள்கையின் அடிப்படையில் கீழ்க் கண்ட கருத்துக்கள் பெறப்படும்.*

(1) சைவ சித்தாந்தம் முப்பொருள் உண்மையைக் கூறவில்லை.

(2) உயிர்களும் உலகமும் இறைவனால் படைக்கப்பட்டவை.

(3) கடவுள் தொடர்ந்தும் உயிர்களைப் படைத்து வருகின்றார்.

(4) சைவ சித்தாந்தத் தத்துவ உண்மைகளை ஆராயும் பொழுது மெய்கண்ட சாத்திரங்களுக்கு அதிக முக்கியத்துவம் தரக்கூடாது.

(5) திருமூலர் கடவுள் ஒருவரையே அனாதி என்கின்றார்.



(6) சைவ சித்தாந்தம் முப்பொருள் உண்மைக்கு இடம் கொடுப்பது போலக் கடவுள் ஒருவரே அனாதியானவர் என்ற கொள்கைக்கும் இடம் தருகிறது. இவ்விரண்டும் சைவ சித்தாந்தக் கொள்கைகளே.

(7) உயிர் வேறு உயிர்ச்சத்துவேறு. உயிர் அழிய, உயிர்ச்சத்து என்றும் இருக்கும். அது ஆதியில்லாதது.

வழிவழியாகவரும் சைவ சித்தாந்தக் கொள்கைகளோடு இப்புதிய கொள்கைகள் முரண்படுகின்றன. முப்பொருள் உண்மையினைச் சிவஞானபோதமே கூறவில்லை என்றும், முப்பொருள்கள் அனாதி என்றும் தனித்தனியானவை யென்றும் சிவஞானபோதம் போதிக்கவில்லையென்றும் கருத்து வெளிப்படுகிறது.

ஆனால் சைவ சித்தாந்தக் கொள்கைகளின் வரலாற்றை ஆராயும்போது இதற்கு நேர்மாறான பதிலே கிடைக்கப் பெறுகிறோம்.

"பதி, பசு ஆகிய இரண்டும் நித்தியப் பொருள்கள். அவை அறிதல் முதலிய குணங்களை உடையன. பதியினது பசுவில் வியாபித்து ஐக்கியமாய் இருக்கிறது. கிளைகளாகிய உலகங்கள் தோற்றுதற் இடமாயுள்ள அடிமரமாகிய பிரகிருதி மாயை நித்தியப் பொருள். பிரகிருதியில் உண்டாகும் இன்ப துன்பங்களைப் பசு அனுபவிக்கும். பதி அனுபவிப்பதில்லை. பதியானவர் இவற்றுக்கு உள்ளும், புறத்தும் எங்கும் பிரகாசிக்கிறார். பதி, பசு, பிரகிருதி ஆகிய மூன்று பொருள்களிலும் வெவ்வேறு என இருக்கு வேதத்தில் முப்பொருள் அனாதியென்றும், அவை தனித் தனியானவை என்றும் குறிப்பிடப்பட்டிருப்பதாக தம்முடைய "சைவபோதம் – இரண்டாம் புத்தகத்தில்" சிவபாதசுந்தரம் குறிப்பிடுகின்றார். சைவ சித்தாந்த முப்பொருளுண்மை எவ்வளவு பழமையானது என்பதனை இது உணர்த்தும்.ஆயினும் இப்புதுக் கொள்கையினை வெளிக்கொணரும் சித்தாந்தப் பெருமன்றத்தினர் தங்கள் கருத்துக்கு ஆதாரமாகத் திருமந்திரத்தையே கொள்கின்றனர் என்பதே முக்கியமாகின்றது. அத்திருமந்திரப் பாடல்களை ஆராய்வதே தகுந்த விடையினைத் தரவல்லது. அன்றியும் சைவசித்தாந்த சாத்திரங்களுக்கு பல காலத்திற்கு முன்பே திருமந்திரம் தோன்றிவிட்டது. இப்பெருநூலே சைவசித்தாந்தக் கொள்கைகளின் கருவூலம். எனவே முப்பொருளைப்பற்றித் திருமந்திரம் கூறுவனவற்றைப் பார்ப்போம்.

பசு, பதி, பாசம் ஆகிய மூன்றும் அனாதி என்றும், பதியணுகினால் பசுவும் பாசமும் நில்லா என்றும் திருமந்திரம் தெளிவாகக் கூறுகிறது.

*"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்*
*பதியினைப் போல்பசு பாசம் அநாதி*
*பதியினைச் சென்றணு காப்பசு பாசம்*
*பதியணு கிற்பசு பாசம் நில்லாவே"*

என்பது அப்பாடல், முப்பொருள் உண்மைக்கும் அவை அனாதி என்பதற்கும் சைவ சித்தாந்திகளால் எப்போதும் மேற்கோளாகக் காட்டப்படும் பாடல் இதுவாகும்.

பதியும் பசுவும் அறிவுப் பொருள்கள். எனினும் சிற்றறிவினதாகிய பசுவைப் பாசம் கட்டுமேயன்றி அறிவினுக் கறிவாகிய பதியினை அது ஒன்றும் செய்யாது. அவனருளால் அந்தப் பாசப் பிணிப்பு அகன்று, பிறப் பிறப்பு இல்லாத நிலை ஏற்படும். சைவ சித்தாந்தத்தின் உயிர்க் கருத்தான இது :

*"அறிவு அறிவு என்ற அறிவு அனாதி*
*அறிவுக்கு அறிவாம் பதியும் அனாதி*
*அறிவினைக் கட்டிய பாசம் அனாதி*
*அறிவு பதியில் பிறப்பறுந் தானே"*

*என்ற பாடலில் சிறப்பாக வெளிப்பட்டுள்ளது.*

இவ்விரு பாடல்களில் மிக அழுத்தமாகவும் நேரடியாகவும் வெளிப்பட்டுள்ள இவ்வுண்மை வேறு பல திருமந்திரப் பாடல்களிலும் பல்வேறு வகைகளில் வெளிப்பட்டுள்ளது.

இத் திருமந்திரப் பாடல்கள் இவ்வாறு சற்றும் கருத்து வேற்றுமைக்கு இடமின்றி முப்பொருளுண்மையையும் அவை அனாதி என்பதையும் அழுத்தமாகப் பேசினாலும், இதே திருமந்திரக் கோட்பாடுகளைத் தாம் ஒருமைக் கோட்பாட்டினராகிய அவர்களும் தம்முடிவுக்குச் சான்றாகக் காட்டுகின்றனர். பாடல் ஒன்றேயாயினும், கொளும் பொருளில் காணும் வேறுபாடே, இவ் வேறுபட்ட முடிவுகளின் அடிப்படையாய் அமைகின்றது.

"பதி, பசு, பாசம் எனப்பகர் மூன்றில்" எனத் தொடங்கும் பாடலின் பின்னிரண்டு அடிகளில் இறைவன் அணுகினால் பசு, பாசம் ஆகிய இரண்டும் நில்லா எனக் குறிப்பிடப் படுகின்றது. "நில்லா" என்பதற்கு அழிந்துவிடும் என அவர்கள் பொருள் கொள்கின்றனர். இவ்வாறு கொள்வதனாலேயே "முதலிரண்டு அடிகளில் மிகப் பாதுகாப்பான அடைக்கலம் தேடும் பன்மைக் கோட்பாட்டினரின் நிலை அடுத்த இரண்டு அடிகளில் ஆட்டம் கண்டு விடுகிறது" என அவர்கள் கருத்தளிக்க முடிகின்றது.

இந்த அடிப்படையில் பொருள் கொள்ள முற்பட்டால், பிற பாடல்களில் உள்ள "பதி பசு பாசம் பயில நிலாவே" என்பதற்கும் இவ்வாறே பொருள் கொள்ளநேரும். இவ்வாறே கொள்வது சரிதானா என ஆராயப்படுதல் வேண்டும்.



முதலில் ஒருமைக் கோட்பாட்டினர் இவ்வாறு பொருள் கொள்ள நேர்ந்ததற்குரிய சூழல், அவர்கள் திருமந்திரத்திலிருந்து நேரடியாக இப்பொருளைப் பெறாது, மொழி பெயர்ப்பின் அடிப்படையில் பெற்றிருக்க வேண்டும் என்று டாக்டர் இரா. தண்டாயுதம் கருத்துத் தெரிவித்துள்ளார்கள்.

உயிர், ஆன்மா, பசு என்பவை ஒரு பொருட் சொற்களாயினும், எல்லாம் ஒரே நிலையைக் குறிப்பன வல்ல. ஆன்மா என்பது உயிரின் வியாபகத்தன்மையை அடிப்படையாகக் கொண்ட சொல். பாசத்தால் கட்டப்பட்ட நிலையிலேயே உயிருக்குப் பசு என்று பெயர். எனவே இங்கு "பசு, பாசம் நில்லா" என்பதற்குப் பசுத்துவம் கழலும் என்றே பொருள் கொள்ள வேண்டும்.

*"பாசம் பயிலுயிர் தானே பரமுதல்*
*பாசம் பயிலுயிர் தானே பசுவென்ப*
*பாசம் பயிலப் பதிபரம் ஆதலாற்*
*பாசம் பயிலப் பதிபசு ஆகுமே"*

என்ற பாடலில் "பாசம் பயிலுயிர் தானே பசு வென்ப" எனத் திருமூலர் இதனைத் தெளிவாகவே குறிப்பிடுகிறார். பாசத்தாலேயே பலப் பல பிறப்புக்கள் தோன்றுவதையும், இறைவனிடம் பக்தி கொண்டால் உயிர்களைப் பற்றியிருக்கின்ற பசுத்துவம் கழலும் என்பதையும்,

*"பாசத்தால் பசியாகிப் பலபல பிறப்பில் சென்று*
*பாசத்தால் பிறந்து இறந்து பலபல போகம்துய்த்துப்*
*பாசத்தால் ஆரப் போக்கில் பதித்துவம் பதித்த நாதன்*
*பாசத்தை நினைக்குந் தோறும் பசுத்துவம் கழலுமன்றே"*

என்ற பாடலும் தெளிவாகவே விளக்குகிறது. "அறிவு அறிவு என்ற அறிவு அனாதி" என்ற பாடலிலும் "அறிவு பதியில் பிறப்பறும்" எனப் பிறப்புக்களிலிருந்து உயிர் விடுபடுவதையே குறிப்பதாகும்.

"கடவுள் ஒருவரே அனாதியானவர்" என்ற கொள்கையைச் சைவசித்தாந்தக் கொள்கையாகக் காண்பது மொழிபெயர்ப்பு மயக்கம் என்றே கருதுகின்றனர். இவை தெளிவாக உணர்த்தும் முப்பொருள்களும் அனாதி என்பதே சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக்கொள்கை. இதனையே சற்றும் ஐயத்திற்கு இடமின்றிக் காலங்காலமாக அது போற்றியும் வற்புறுத்தியும் வருகின்றது.

உயிர் உண்மைபற்றிய ஒருமைக் கோட்பாட்டினரது கொள்கைகளைச் சுருக்கமாக இரண்டு பிரிவுகளில் அடக்கலாம்.

(1) கடவுளுடன் ஒன்றான உயிர், அவனால் படைக்கப்படுகிறது
(2) உயிர் வேறு உயிர்ச் சத்து வேறு

சிவ பரம்பொருளின் வெவ்வேறு வடிவங்களே உயிரும் உலகும் என்பது இவர்களது கொள்கை. படைத்தல் என்னும் தொழிலுக்குப் பொருளே இல்லாமல்ப் போய்விடும் என அவர்கள் கருதுகின்றனர். கதிரவன் ஒளிவிடுவதுபோலப் படைப்பு அவனது இயல்பு என அவர்கள் நம்புகின்றனர். அவ்வாறு படைக்கப்படும் பொழுது உயிர்கள் எல்லாம் ஒரேநேரத்தில் படைக்கப்பட்டனவாக அவர்கள் கொள்வதில்லை. தொடர்ந்து உயிர்கள் படைக்கப்பட்டுக் கொண்டே இருக்கின்றன என்றும் அதற்கேற்ப அவை முதியஉயிர், இளைய உயிர் எனப் பெயர்பெறும். உயிர் வேறு, உயிர்ச்சத்து வேறு எனவும் , உயிர் ஏணி உடம்பால் ஆனதாக இருக்க, உயிர்ச்சத்து சிவத்திலிருந்து வேறுபடாத சச்சிதானந்தமாகவும் பரசிவமாகவும் இருப்பதாக அவர்கள் முடிவு செய்கின்றனர். இக்கருத்துக்கள், உயிரும் இறைவனும் ஒன்றே என்பது சைவ சித்தாந்தத்திற்கு முற்றிலும் முரணான கருத்து. கடவுள் முற்றறிவினராக இருப்பதும், சர்வவியாபகராகத் திகழ்வதும், ஒப்பும் உயர்வும் இல்லாதிருப்பவராக விளங்குவதும் சுதந்திரமாகஇருப்பதும் அவரை உயிர்களிலிருந்து வேறுபடுத்தியே காட்டுகின்றன. உயிர் அறிவுப் பொருளாயினும் ஆணவ மலத்தால் அறிவு மழுங்கி எடுக்கப் பெறும் உடம்பிற்கேற்பவே அறிவு விளக்கம் பெறும். இதன் வியாபகமும் உடம்பின் அளவானதாகவே இருக்கும். இவ்வாறிருக்க, இரண்டையும் ஒன்றெனில் எவ்விதத்திலும் பொருந்தாது எனினும் "இறைவனே எல்லாமாயிருக்கிறார்" என்று வேதமும் திருமுறைகளிலும் கூறும் கருத்து, ஒருவித மயக்கத்திற்கு இடம் தருவதாகவும் ஒரு கருத்து உண்டு. ஆனால் இதனை ஆழமாக ஆராயின் இறைவனும் உயிரும் உலகமும் வேறு வேறானவை என்பதையே இவை உணர்த்துகின்றன என்பதற்குத் தக்க சான்றுகள் உள்ளன.

இறைவன் உயிர்களைப் படைத்தானா என்ற கேள்விக்கு சைவசித்தாந்தம் இதற்கு முதலும் இறுதியுமாக இல்லை என்றே உறுதியாகப் பதிலளிக்கின்றது. "பதியினைப் போல, பசு பாசம் அனாதி", "அறிவு அறிவு என்ற அறிவு அனாதி" என்பன திருமந்திரத் தொடர்கள். இவற்றில் முதற்பாடலில் "பதி அணுகினால் பசு பாசம் அழிந்துவிடும்" எனப் பொருள் கொள்ளும் ஒருமைக் கோட்பாட்டினர் முன்னிரண்டு அடிகளை நன்கு ஆராயாது விடுகின்றனர். முன்னிரண்டு அடிகளில் தஞ்சம்புகும் பன்மைக் கோட்பாட்டினர் பின்னிரண்டு அடிகளை வசதிக்காக மறந்து விடுவதாக அவர்கள் குற்றம் சாட்டுகின்றனர். ஊண்மையில் பாட்டின்



முன்னிரண்டு அடிகளில்தான் உயிர்க்கருத்து அல்லது முதன்மைக்கருத்து கூறப்பட்டுள்ளது. பின்னிரண்டு அடிகளில் உள்ள சார்புக்கருத்தே என்பது அறிஞர் துணிபு. முதன்மைக் கருத்தை யொட்டியே சார்புக்கருத்தை விளக்கவேண்டும். இல்லையேல் பொருள்நிலை திரிந்துவிடும் என்பது மொழிவல்லார் கருத்து.

திருமூலரே அல்லாமல் சைவசித்தாந்த ஞானிகள் அனைவருமே உயிர் இறைவனால் படைக்கப்பட்டதல்ல என்றும், இறைவன் உள்ள அன்றே உயிரும் உள்ளதென்றும் தெளிவாகக் கூறியுள்ளனர்.

*"என்று நீ அன்று நான் உன்னடிமை அல்லவோ?"*
*"என்று உனைநீ அன்றுஉளம் யாம்"*

என்பன தாயுமானவர் பாடல்களாகும். உலகமும் உயிர்களும் கடவுளைப் போலவே என்றும் உள்ளன. கடவுள் என்று உண்டோ அன்றே உலகமும் உண்டு. உயிர்களும் உண்டு. ஆனால் சிவபெருமான் உலகுயிர்களைப் படைத்துக் காத்து அழிக்கின்றார்களே என்று கூறினால் "கடவுள் உலகத்தைப் படைத்தார்" என்பது குயவன் பாண்டத்தைச் செய்தான் என்பது போலாம். குயவன் பாண்டத்தை எப்படிச் செய்தான் எனில் மண்ணையும் சக்கரத்தையும் கொண்டு செய்தான் என்பர். அவன் மண்ணை உண்டாக்கவில்லை. மண்முன்னமே இருந்தது. அந்த மண்ணைப் பாண்டமானான். இது போல உலகத்திற்கு மாயை, சக்தி, சிவம் காரணமாகின்றன.

பெத்த நிலையில் மாத்திரமன்றி முத்திநிலையிலும் ஆன்மா அழியாமல் இருப்பதாகும். "ஆன்மாக்கள் பெத்த நிலையில் மாத்திரமன்றி முத்திநிலையிலும் அழியாமலிருக்கும். முத்தியில் சிவத்தோடு இரண்டறக் கலந்தும் வேறாகவும் இருந்து இன்பமார்ந்திருக்கும். இவ்வாறு சிவமம் ஆன்மாவும் ஒற்றுமைப்பட்டிருக்கும் நிலையே அத்துவித நிலை என்று அழைக்கப்படும்.

ஒருமைக் கோட்பாட்டின் இன்றுள்ள சைவசித்தாந்தக் கொள்கைகளெல்லாம் மெய்கண்ட சாத்திரங்கள் தோற்றுவித்தவையே எனக் கொண்டு இவற்றிற்கு முற்பட்ட வேதங்களையும் திருமுறைகளையும் தங்களுக்குச் சான்றாகக் கொள்வதாகக் குறிப்பிடுகின்றனர். இந்த அடிப்படையிலேயே வேதங்களைவிடவும் திருமுறைகளைவிடவும் மெய்கண்ட சாத்திரங்கள் உயர்ந்தவையா என அவர்கள் கேட்கின்றனர். மெய்கண்டாரிடத்தில் தங்களுக்கு பெரும் மதிப்பிருந்தாலும் அவரைப் பின்பற்றியவர்களும், உரையாயர்களும் தோற்றுவித்த கொள்கைகளிடம் தங்களுக்கு அவ்வளவு மதிப்பில்லை எனவும் கூறுவதாகத் தெரிகிறது.

ஆனால், மெய்கண்டார் தாமாகச் சைவசித்தாந்தக் கொள்கைகளை வகுத்துவிட வில்லை. தமக்கு முன்பிருந்த கருத்துக்களை யெல்லாம் ஒன்று திரட்டி அவற்றிற்கு ஓர் இலக்கண வடிவத்தையே அவர் தந்தார். மெய்கண்டாருக்கு முன்பே சைவசித்தாந்த தத்துவங்களுக்கு ஒரு பெரிய பாரம்பரியமுண்டு. அன்றியும், வேதத்திலும் சிவாகமங்களிலும் திருமுறைகளிலும் கூறப்பட்ட சைவசித்தாந்தக் கொள்கைகளுக்கு மெய்கண்டார் ஒரு சிறு அளவிலாவது முரண்பட்டு நின்றதாக ஒரு சிறு குறிப்பும் இல்லை. எனவே, மெய்கண்டார் கொள்கை, மெய்கண்டாருக்கு முன்பிருந்த கொள்கை என என்று சைவசித்தாந்தத்தில் இல்லை.

சைவசித்தாந்தம் ஒருமைக் கோட்பாடு, பன்மைக் கோட்பாடு என இரண்டையும் தழுவிநிற்பதாக இவர்கள் கூறுவது சற்றும் பொருத்தமில்லாததும், சைவசித்தாந்த மரபுக்கு ஏற்க வொண்ணாத ஒன்றாகும். ஒன்றுக்கு ஒன்று அடிப்படையில் முரண்படும் இரண்டு கொள்கைகள் ஒரே பெயரில் இயங்க முடியாது. சைவசித்தாந்தம் இருமைக் கோட்பாடு, அது அல்லாத ஒருமைக் கோட்பாடு ஆகிய இரண்டிற்கும் இடம் தருவதாக முடிப்பது பெரிய மயக்கத்தை தோற்றுவிக்க வழிவகுக்கும்.

உயிர் எது என்பதில் பல்வேறு நெறிகளிடையே காணப்படும் பல்வேறு கொள்கைகளையும் சைவசித்தாந்தக் கொள்கை இவற்றிலிருந்து எவ்வாறு வேறுபட்டு நிற்கின்றது என்பதையும், அண்மைக் காலத்தில் சைவசித்தாந்த கருத்துக்களூடே புதிதாகத் தோன்றியுள்ள ஒருமைப் பாட்டுக் கொள்கையை மறுதலித்தும், பதியினைப் போல் பசுவும் ஆதியந்தம் இல்லை அனாதி என்பதே சைவசித்தாந்தத்தின் முதலும் இறுதியுமான முடிந்த முடிபு என்பதனையே சைவ உலகம் போற்றுகிறது.*

* இக்கட்டுரை "சைவசித்தாந்தத்தில் உயிர் உண்மை என்ற பெயரில் இந்திய ஆய்வியல் துறை மலாயாப் பல்கலைக்கழக டாக்டர் இரா. தண்டாயுதம் அவர்கள் எழுதிய நீண்ட கட்டுரையிலிருந்து பல ஒப்ப முடிந்த கருத்துக்களை ஏற்றும் போற்றியும் உளது.

*"உண்மையை உணர்க உணர்ந்த பின் எல்லோரும்*
*ஒக்கநின்று ழைப்பது உயர்வே"*

*இலக்கியச் செம்மல்*
செ. குணரெத்தினம்
*முன்னாள் தலைவர் கொழும்புத் தமிழ் சங்கம்,*
*முன்னாள் இலங்கை அரசு அமைச்சின் செயலாளர்.*



# சித்தாந்தச் சிந்தனைகள்



உலக உயிரினங்களின் தலைமை
மானுடர்க்கே உரியதாம்.
மனம் எனும் சூக்குமக் கருவியின்
முழுமையான இயக்கத்தைப் பெற்றதால்
ஐம்புல அறிவையும் மீறி
ஆறாவதான சிந்திக்கும் திறன் வாய்க்க
அத்தலைமை மானுடர்க்கு ஆயிற்று.
மனதின் இயக்கம் பெற்றதால்
அவன் மனிதன் எனப்பட்டான்.
சிந்தனையும், சிந்தனையின் விளைவான தேடலும்
மனிதனின் இயல்பாயிற்று.
அதனால்
அன்று தொட்டு இன்று வரை
மற்றைய ஜீவராசிகள் ஒரே வகையினதாக
மனிதன் மட்டும் அன்றாடம் மாற்றம் பெற்றான்.
அவரவர் தன்மை நோக்கி
அம்மாற்றங்கள் உயர்ச்சியாகவும், தாழ்ச்சியாகவும் உருப்பெற்றன.
அவ்வுயர்வு தாழ்வுகளையும் ஆராயும் திறன் பெற்றதால்
மொத்தத்தில்
வளர்ச்சி மனிதனின் இயல்பாயிற்று.
அவ்வளர்ச்சியே வெற்றியாய் ஆணவம் வளர்க்க
அவன் தேடல் வேகம் பெற்றது.
புலன்களால் நோக்கவல்ல புறப்பொருள்களை
தொடர்ந்து ஆராய ஆராய
அவன் பௌதிக அறிவு விரியலாயிற்று.
பஞ்சபூத காரியங்களான பௌதிகப் பொருள்கள்
அப்பூதங்கள் போலவே எல்லையின்றி விரிந்தன.
மானுடனின் தேடல்
நுண்பூதமான ஆகாயம் வரை சென்றது.
முடிவின்றி விரியும் ஆகாயம்
அவன் அறிவை ஸ்தம்பிக்கச் செய்தாலும்

அவன் சளைத்தான் இல்லை.
தொடர்ந்து தேடத் தலைப்பட்டான்.
அத்தேடலில் அவனுக்கோர் உண்மை புலனாயிற்று.
காலவரையறை கொண்ட வாழ்நாள்,
அனைத்தையும் ஒருங்கே அறியமுடியாத சிற்றறிவு,
இவை கொண்டு
எல்லையற்று விரியும் அறிவின் முடிவு காணலின்
சாத்தியம் இன்மை உணர்ந்தான்.
ஆயினும்,
இயல்பாய் அமைந்த அவன் அறிவுத் தேடல்
ஓர் ஆயுட்காலத்திற்குள்ளே அறிவின் முடிவு காண
தொடர்ந்து அவனை உந்திற்று.
அவன் அல்லலுற்றான்.
ஆயினும்,
அவன் தேடல் நின்றபாடில்லை.
முடிவென்பது எது?
மனதுட் கேள்வி பிறக்க
ஆழச் சிந்தித்தான் அவன்.
தொடர்ந்த அச் சிந்தனையின் பயனாய்
அரியதோர் உண்மை அவனுக்குப் புலனாயிற்று.
முடிவென்பது தொடக்கத்தின் முதல் நிலையே
என உணர்ந்தான்.
ஒரு புள்ளியில் ஆரம்பிக்கும் கோடு
எத்துணை தூரம் நீளினும் முடிவதில்லை.
நீட்டப்பட்ட அக்கோடு,
ஆரம்பித்த புள்ளியை எப்போது அடைகிறதோ
அதுவே அக்கோட்டின் முடிவாம்.
இவ்வுண்மை புலனாக
புறத்தேடலில் அறிவு நிறைவுறாது எனும் உண்மை உணர்ந்தான்.
உடன் அவன் அறிவு
அறிவின் தொடக்கத்தைத் தேடலாயிற்று.
அறியும் பொருள் எது?
அறிவெது?
எனும் கேள்விகள் –பிறக்க
அவன் அறிவுத் தேடல் உள்நோக்கிற்று.



பொறிகளால் தென்பட்டு
பின் புலன்களாய் உணரப்பட்டு
மயக்கம் தந்தவை
அறியப்பட்டவை அன்றி அவையே அறிவல்ல
எனும் உண்மை உணர்ந்தான்.
அக்கருவிகளால் இதுவரை உணரப்பட்ட புறப்பொருள்கள்
மாயையின் வடிவங்கள் என்பதறிந்தான்.
இதுவரையில் தன் முயற்சிகள்
கானல் நீர் தேடிக் கழிந்ததறிந்து கவலையுற்றான்.
அவ்வுணர்வினால் புறத்தேடலில் ஆர்வம் அற
அகத் தேடல் ஆழமாய்த் தொடங்கிற்று,
அத்தேடலில்
"நானார்? என் உள்ளமார்? ஞானங்கள் யார்?"
எனும் கேள்விகள் பிறக்க
பொறிகள் செயலிழக்க
புலன்களின் நாட்டம் விடுபட்டுப் போயிற்று.
மனம் மேலும் ஒடுங்கி ஒருநிலைப்பட
அறிவும் தெளிவுற்று ஒருநிலைப்பட்டது.
அதனால்
அசைவின்றி உள்நோக்கும் ஆற்றல் பெற்றான் அவன்.
மனம் ஒடுங்கி செயல் ஒடுங்கி
பின் வாக்கும் உள்நோக்கி ஒடுங்கிற்று.
தனு, கரண, புவன, போகம் எனும்
அசுத்தமாயா காரியங்களில் ஆழ்ந்து –கிடந்தவன்
வாக்கு,
மூலாதாரம் வரை சென்று சூக்குமையில் ஒடுங்க
சுத்தமாயகாரியத் தொடர்பு பெற்றான்.
அத் தொடர்பு ஆத்மாவை அவனுக்கு உணர்த்திற்று.
துரியாதீத நிலைபெற்றுத் தன்னைத்தான் தரிசித்தான்.
உலகியலால் விடுபட்ட ஆத்மா
சார்ந்ததன் வண்ணமாகும் தன் இயல்பினால்
இறையோடு கூடிற்று.
அவ்வுயர் நிலையில்
தேடல், தேடுபவன், தேடுபொருள் எனும் பேதங்கள் அற
பேரின்ப நிலை கூடிற்று.

மனிதன் அறிவின் முடிவுணர்ந்தான்.
அவ்வறிவின் முடிவே சித்தாந்தமாம்.
(சித் – அறிவு, அந்தம் – முடிவு)
அவன் தேடலின் வெற்றி
முன்னைய பௌதிக அறிவின் வெற்றிகள் போல்
ஆணவம் தராமல் ஆனந்தம் தந்தது.
இவ் ஆத்மீக அறிவின் வெற்றி
மற்றவருக்கு அறிவிக்கவும், ஆரவாரிக்கவும் இடமளிக்காமல்
அவனை "சொல் அற சும்மா" இருக்கச் செய்தது.
மோனம் ஞானவரம் பாயிற்று.
அறிவின் முடிவு கண்ட அம்மனிதன்
தன்னுட்தான் அடங்கிப் போனான்.
அவ்வடக்கம் அவனை உலகியலில் இருந்து விடுவிக்க
உலகத்தாருக்கு அவன் பித்தனானான்.
உலகத்தார் அவனுக்குப் பித்தரானார்.
"நாட்டார் நகைசெய்ய நாம் மேலை வீடெய்த"
எனத் தெளிவுற்றான்.
அத்தெளிவு அல்லல் அறுத்து ஆனந்தமாக்கிற்று.
அவன் பித்த நிலையே முத்தி நிலை எனும் பேர் உண்மை
அவனைப் போலவே,
ஆத்ம வளர்ச்சியால் அறிவுத் தேடலிற் புகுந்த
ஓரிருவருக்குப் புரிந்து போயிற்று.
முடிவு கண்ட அவன் மூலமாகத் தாம் முடிவறிய
தொழுதும் தொடர்ந்தும்
ஓயாது அந்த ஞானியைப் பற்றி நின்றனர்.
தெளிந்த ஞானியாகிய அச்சீவன் முத்தனோ
தனிமை தேடி அவரைத் தவிர்த்தான்.
பசி மிகுந்த அச்சீடர்களின் தேடல்,
விடாது அந்த ஞானியைப் பற்ற
இறைநிலையுற்ற அந்த ஞானியூடு
இறைக்கருணை பொழியலாயிற்று.
சூக்குமையில் ஒடுங்கி
உலகியலில் விடுபட்டு
இறைநிலையில் கலந்த
அம்முத்தர்தம் வாக்கு



சிவவாக்காய் மீண்டும் கிளம்பிற்று.
சில்வகை எழுத்திற் பல்வகைப் பொருளடக்கி
சுருக்கமாய்,
சூத்திரமாய்,
அச்சிவவாக்கு
இறைவன் தன் பெருங்கருணையால்
உலகை உய்விக்க ஓங்காரத்தில் நின்றும் உதித்தது.
மனதாலும் வாக்காலும் அறியவொண்ணா,
அச்சிவப்பொருள்
அந்த ஞானியர் தம் வாக்கினும் பொதிந்து
பசியோடு தேடுவார்க்குத்
தன்னை அறிவிக்கும் குறிப்புத் தந்தது.
அரும்பொருள் நிறைந்த அவ்வாக்கினை
உணர்வொன்றும் திறன் வாய்த்தார் ஒருசிலர்,
உணரத் தலைப்பட்டனர்.
வெளிப்பட்ட அச்சிவவாக்குக்கு,
தத்தம் ஆத்ம நிலைக்கேற்ப விளக்கம் கண்டனர்.
தத்துவ வழியில்,
தமக்குப்பின் தனித்து வருவோர்க்குக் கருணை செய்ய
அவ்விளக்கங்களை விளக்குகளாய் அமைத்தனர்.
அவ்விளக்குகளே ஆத்ம தேடல் எனும் பாதையில்
இன்றும் நம்மை வழிப்படுத்தும்
சித்தாந்த நூல்களாம்.
ஆத்ம தேடலிற் புகுவார்
தாம் செல்லும் பாதையின் தெளிவுணர
இந்நூல்கள்
துணை செய்யும் தூண்களாயின.

★★★★

இயல்பான ஆத்ம ஞானம் உற்றார்க்கன்றி
தத்துவ ஞானம் வாய்க்காது.
உணர்வுந்தல் இன்றித் தனித்த அறிவினால்
தத்துவத்துள் புகுவார்,
அத்தேடலால்,

அறுக்கப்பட வேண்டிய ஆணவம் மேலும் வளர்ச்சியுற
அன்பற்று அல்லல் உறுவர்.
பல பிறவிகளில் மூழ்கிப் பெற்ற அனுபவங்களால்
ஆன்மா
ஆணவத்தின் வலிகெட ஒளிபெறுகிறது.
அங்ஙனம் ஒளிபெற்ற ஆத்மாக்களே
உண்மைத் தத்துவ விசாரத்திற்கு உட்படுமாம்.
எனவே,
தாகத்தோடு தத்துவ நூல்களைக் கற்கப் புகுவார்
முன்னைத் தவப்பயன் உடையார் என்பது தெளிவு.
அவர்க்கன்றி தத்துவ ஞானம் வாய்க்காது.
இறைவனின் அருளல் தொழில்
தெளிவுற நிகழ்வதால்
அன்பாலும், அறிவாலும் முத்திநிலை அடைவார்
என்றும் உளராம்
விஞ்ஞான அறிவு விரிவு பெற்ற இன்றைய உலகிலும்
இதுவே சாஸ்வதமாம்.
எனினும்
பொருளுலகையே இலட்சியமாய்க் கருதி
பௌதிக ஞானத்தையே அறிவின் வெற்றியாய்க் கொள்ளும்
இன்றைய உலகில்
இத் தத்துவ ஞானம் தேடுவார் ஒரு சிலரே.
எனினும்
அவ் ஒரு சிலரே
சீவன் முத்தநிலை எய்தி இவ்வுலகின் நிலைத்தற்கு காரணமாவர்.
எண்ணிக்கையாற் குறையினும்,
பெருமையால் நிறைந்த
அந்நீத்தாரை
அறிவு நிலையால் நெறிப்படுத்தி,
அன்பு நிலைக்கு ஆளாக்கி
உலகிற்கு ஈபவை இத் தத்துவ நூல்களாம்.
பொய்யிலிருந்து விடுவித்து,
அறிவினால் மெய்யாகிய ஆண்டவனை உணர்விப்பதால்
இவை மெய்நூல்கள் எனப்பட்டன.



தமிழ் நூல்வரிசையில்
இம்மெய்நூல்களே தலைமை நூல்களாம்.
கருவி நூல்களான,
நிகண்டு, இலக்கணம், தர்க்கம், இலக்கியம்,
என்பவற்றைக் கற்பது,
இம் மெய்நூல்களை உணர்வதற்கேயாம் என்பர்
நம் தமிழ்ச் சான்றோர் .
இஃது உணர்ந்தே,
“கற்றதனால் ஆய பயன்
நற்றாள் தொழல்”
என்கிறார் வள்ளுவரும்.
ஒரு சிலரால் மட்டுமே உணரப்படினும்
நம் சந்ததியின் சொத்தான இவ் அரிய தத்துவ நூல்களை
அடுத்த தலைமுறைக்குக் கடத்திக் கொடுத்தல்
காலத்தின் தேவையும், கடனுமாம்.
இந்நூல்கள் அனைத்தும் உலகோருக்குப் பயன்தருமோ? எனின்
தராது என்பதே பதிலாகும்.
அங்ஙனமாயின் இந்நூல்களைப் பதிப்பித்தல் எதற்காம்?
கேள்வி பிறக்கும்.
பயன்கொள்ளப் போகும் ஒருசிலரின்
உயர்வுணர,
அவ்வுயர்வால் இவ்வுலகடையும் பயன் உணர,
இந்நூல்களைப் பதிப்பித்தலும் பாதுகாத்தலும்
தவச் செயல் என்று தெளிய உணரப்படும்.
உலகம் உய்ய அநுபூதி நிலையடைந்த அருளாளரால்
நமக்கு உணர்த்தப்பட்ட அவ்வரிய விடயங்களை
அடுத்த தலைமுறைக்கு கடத்திக் கொடுத்தலும்
உலக நன்மை நோக்கிச் செய்யப்படும்
ஓர் அரிய யாகமே.

-கம்பவாரிதி இ. ஜெயராஜ்,
*கம்பன் கழகம்.*

# பசு



சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களில் ஒன்றாகிய பசுவைப் பற்றிய விவரங்கள் சிவஞானபோதம், சிவஞானசித்தியார், மூன்றாம், நான்காம், ஏழாம் சூத்திரங்களில் காணலாம். பசு (உயிர்) உண்டு என்று நிறுவி, அதன் தன்மை, பன்மை ஆகியவற்றைச் சைவசித்தாந்த நூல்கள் விரிவாக எடுத்துரைக்கின்றன.

ஆன்மா பாசத்தாற் கட்டுண்டிருப்பதால் அது பசு என்று கூறப்படுகிறது. ஆன்மாவின் சொரூபம் அறிவு. அது சத்துப் பொருளாகும். ஆன்மாக்கள் எண்ணில்லாதவை. அவை அநாதியாயுள்ளன என்றும் உள்ளன. இதை விளக்கியே திருமந்திரம்,

*"பதி பசு பாசம் எனப்பகர் மூன்றிற்*
*பதியினைப் போற்பசு பாசம் அநாதி*
*பதியினைச் சென்றணுகாப் பசு பாவம்*
*பதியணு கிற்பசு பாசம் நில்லாவே"*

*என்று கூறுகிறது.*

ஆன்மாக்கள் கேவலம், சகலம், சுத்தம் என மூன்று அவத்தை அல்லது நிலையை அடைகின்றன. அவைகளுள் கேவல நிலையில், அநாதியாயுள்ள ஆணவம் என்னும் இருள் மலத்தில் அழுந்தி உடம்புகளின்றி ஒன்றையும் அறிய இயலாததாய் அவ்விருளைவிட்டு நீங்க வழியில்லாமல் ஆன்மா இருக்கும்.

பரம்பொருளின் பெருங்கருணையால் அவைகளின் ஆணவமலம் நீக்கும் பொருட்டு உடம்புகளும், கரணங்களும், உலகமும், போகப் பொருள்களும் கொடுக்கப்படுகின்றன.

அவ் ஆன்மாக்கள் பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்கின்ற தூல பூதங்களினின்றும் சர்மம், உதிரம், மாமிசம், சனாதி, அத்தி, மச்சை என்னும் ஆறு தத்துவங்களையுடைய அண்டசம் (முட்டை), சுவேதசம் (வியர்வை), உற்பிச்சம் (வித்து, வேர், கிழங்கு), சராசரம் (கருப்பை) என்னும் நால் வகையில் ஏழு வகைப் பிறவிகளை எடுக்கும் அரர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீரில் வாழ்வன, தாவரம் என்பன ஏழு வகைப் பிறவிகளாகும்.



இவற்றுள் இம்மை, மறுமை ஆகிய இரண்டையும் பற்றிச் சிந்திக்கத் தக்கதாகவுள்ள மானிட சரீரத்தை எடுத்த ஆன்மாக்கள் உத்தம சாதியாகும். மறுமையை மறுத்து இவ்வுலகப் புத்தியை மாத்திரம் பெற்றிருக்கின்ற மிருகம், பட்சி முதலானவை மத்திம சாதியாகும். இரண்டு உலகங்களின் புத்தியும் மறைக்கப்பட்டிருக்கின்ற மரம், கொடி, செடி முதலியவை அதம சாதியாகும். பிருதுவி தத்துவமாயிருக்கின்ற பூலோகத்திலே மூன்று வகை உயிர் வர்க்கங்கள் காணப்படுவது போல அப்பு, அக்கினி, வாயு, ஆகாயம் ஆகிய தத்துவங்களாய் தேவலோகம், காந்தர்வலோகம், சித்தலோகம் ஆகிய வகைகளிலே நட்சத்திரமாகத் தோன்றுகின்ற சந்திரன் முதலான பிதிர்கள், சூரியன் முதலான தேவதைகள் கந்தருவர், சித்தர் ஆகியோர் உத்தம சாதியாகும். காமதேனு, ஐராவதம் முதலானவை மத்திம சாதியாகும். கற்பகவிருட்சம், பாரிசாதம் முதலானவை அதம சாதியாகும்.

உயிர் வர்க்கங்கள் மலபந்த வேறுபாட்டினாலே விஞ்ஞான கலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படுவர். சகலரிலிருந்து கன்மம், மாயை முழுவதும் நீங்கப் பெற்று ஆணவமலம் ஒன்றையுடையவர் **விஞ்ஞானகலர்** ஆவர். இவர்களுக்குரிய புவனங்கள் சுத்த வித்தைக்கும் அசுத்த மாயைக்கும் இடையேயுள்ளன. இவர்களுக்குக் கன்மம் இல்லையென்றது ஆகாமிய கன்மம் இல்லையாம், மாயை இல்லை என்றது பிரகிருதியின் காரியமாகிய முக்குணங்களின் மயக்கமும், சுக துக்க போகங்களும் இல்லையாம். இவை இரண்டும் இல்லையேயாயினும் தனு, கரண, புவன, போகங்களுண்டு. ஆகாமிய கன்மம் (இப்பிறவியிற் செய்யும் கன்மம்) இல்லாமையால் இவர்கள் இப்பிறவியிலேயே முத்தியடைவர். பரமசிவன் இவர்களுக்கு அறிவுக்கறிவாய் உண்ணின்று உணர்த்தி அனுக்கிரகஞ் செய்வர்.

**பிரளயாகலர்** ஆணவம், கன்மம் ஆகிய இரு மலங்களையுடையவர். சகலரிலிருந்து பரிபக்குவ விசேடத்தால் மாயையின் பந்தம் மாத்திரம், நீங்கி ஏனைய மலங்களிரண்டும் உடையவர். இவர்களுக்குரிய புவனங்கள் அசுத்த மாயை முதல் அராகம் ஈறான தத்துவங்களாகும். மாயாமலமில்லாமையால் இவர்களுக்கு முக்குணங்களின் மயக்கமும், சுகதுக்க மோகங்களும் இல்லையாம். ஆகாமியம் ஏறுவதால் சில பிறவிகளில் முத்தியடைவர். இவர்களுக்கு அருள் செய்வதற்காகச் சிவன், மான், மழு, காளகண்டம், திரி நேத்திரம் ஆகிய வடிவங்களோடு தோன்றி அருள் செய்வார்.

**சகலர்** ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் உடையவர். கலை முதலிய தத்துவங்களோடு கூடியவர்களாகையால் இவர்கள்

சகலரெனப்படுவர். இவர்கள் தேவர், மக்கள் முதலாகப் பலவகையாவர். இவர்களுக்குரிய புவனங்கள் மூலப்பகுதி முதல் பிருதுவி ஈறான தத்துவங்களிலுண்டு. (மூலப் பகுதி என்பது மூலப் பிரகிருதியைக் குறிக்கிறது. இது அசுத்த மாயையினின்று தோன்றி அசுத்தப் பிரபஞ்சத்திற்குக் காரணமாயுள்ளது. பிரகிருதி என்பது முதலிலுள்ளது என்னும் கருத்தையுடையது.) மும்மல மயக்கமுடையராகையால் பல ஜென்மங்கள் பிறந்து இறந்து உழல்வர். இவர்களுக்கு மலபரிபாகமும், இருவினையொப்பும், சத்தி நிபாதமும் ஏற்படும் காலத்து பரமசிவன் குருவடிவாய் வந்து அனுக்கிரகஞ் செய்வர். சகல நிலையில் பிரபஞ்சத்தை அறிவித்தருளும் திருவருளை ஆன்மா அறியாது. அவ்விதம் அறியா வண்ணம் தடைசெய்வது ஆணவ மலமாகும்.

ஆன்மா நாதம் முதல் பிருதுவியீறாக முப்பத்தாறு தத்துவங்களுடனும் லலாடத்தானத்தை (புருவ மத்திடுப் பொருந்தி விடயங்களை அறிந்து அனுபவித்து நிற்கும் நிலை சகலாவத்தை எனப்படும்.

ஆன்மாவின் இயல்பை விளக்கி அது எவ்வாறு சாக்கிரம், சொப்பனம், சுஷுத்தி, துரியம், துரியாதீதம் என்ற ஐந்தவத்தைகளைப் பொருந்தும் என்பதைச் சிவஞானபோதம் நான்காஞ் சூத்திரம் விளக்குகிறது.

*"அந்தக் கரணம் அலற்றினொன்றன்றவை*
*சந்தித்த தான்மாச சகசமலத்துணரா*
*தமைச் சர சேய்ப்ப நின்றஞ்சவத்தைத்தே."*

ஆன்மாவானது அந்தக் கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கனுள் ஒன்றல்ல. ஓர் அரசன், நுணுகிய அறிவுள்ள மந்திரிமாரை ஆலோசனை கூறுவதற்குத் தன்னுடன் வைத்திருந்து அரச கருமங்களை நடத்துவதைப் போல அனாதியே ஆணவ மலத்தினால் அறிவின்றிக் கிடக்கும் ஆன்மாவுக்கு கலை முதலிய ததுவங்களினாலே பொதுவகையால் உணர்வு நிகழ்ந்தாலும் சிறப்பு வகையால் உணர்வு நிகழ்வதில்லை. ஆகையால் ஆலோசனைத் துணையாகிய அல்லற் கரணங்களோடு கூடிநின்று ஆன்மா, சாக்கிரம், சொப்பனம், சுஷுத்தித் துரியம், துரியாதீதம் ஆகிய ஐந்து அவத்தையைப் பொருந்தும்.

இனி அகநிலைகள் ஆறையும் பற்றி அறிதல் வேண்டும். அவை ஆதாரங்கள் எனப்படும். மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம்,



விசுத்தி, ஆஞ்ஞை ஆகியன ஆறு ஆதாரங்களாகும். இந்நிலைகளில் நினைந்து வழிபடச் சிவனின் திருவடியைக் காணலாம்.

பசுவுக்கு பொது இயல்பு கருவி கரணங்களுடன் கூடி நிற்றலாம். சிறப்பியல்பு கருவிகளினின்றும் நீங்கி உடனாய் நிற்கும். சிவமாய் நிற்றலாம். பசு தனித்து நிற்பதில்லை. பாசத்தையேனும் பதியையேனும் சார்ந்து நிற்கும். அது சார்ந்த பொருளின் தன்மையாய் நிற்கும். அவ்விதம் உயிர்சாரும் பொருள் சத்தும் அசத்துமாம்.

தோற்ற மாற்றமின்றி என்றும் ஒரு தன்மையாயிருப்பது சத்து எனப்படும். அது நிலையான உண்மைப் பொருளாகும், சுட்டறிவினால் அறியப்படுவது எல்லாம் அசத்தாகும். அது மாற்ற முடையது. ஆன்மா சத்தோடு கூடிச் சத்தாயும் அசத்தோடு கூடி அசத்தாயும் நிற்றலால் அது சதசத்து எனப்படும்.

ஆன்மா ஆற்றல் அற்றது. அறிவிக்க அறிவது. உயிர் சத்தையும் அசத்தையும் அறியக் கூடிய காரணத்தால் சதசத்து எனப்பட்டதேயன்றி சத்தும் அசத்துமாகிய மாறுபட்ட தன்மையை உடையதல்ல என்பதை அறிய வேண்டும். சத்து பதியாகும். அசத்து மாயாகாரிய உடலுலகளாகும். உயிர் அவ்விரண்டினையும் சார்ந்து நிற்கும் நிலையை சிவஞானசித்தியார் விளக்குகிறது.

*"அறியாமை சாரின் அதுவாய் அறிவாம்*
*நெறியான போதுதவாய் நிற்கும் – குறியா*
*சதசத் தருளுணர்ந்த தானுணரா நின்ற*
*விதமுற்றறிவெனும் பேர் மெய்"* என்று கூறுகின்றார்.

ஆன்மா பெத்தநிலையில் மலங்களாகவே கட்டுண்ட நிலையில் திருவருளையும் துணையாகக் கொண்டு விளங்கும். தத்துவங்களாகிய உடல், பொறி, கரணம் யாவையும் ஆன்மாவிடத்திலே இரண்டற நிற்கும் தன்மை போல, சகலமலமற்றார் முத்தி நிலையில் சிவனிடத்தில் இரண்டறப் பொருந்தி நிற்பார்கள். 'உண்மை விளக்கம்' இதைத் தெளிவாகக் கூறுகிறது.

*"தத்துவங்களெல்லாம் சகசமா ஆன்மாவிற்*
*பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல – முத்திதனிற்*
*சித்த மலமற்றார் செறிந்தீருலர் என்று மறை*
*சத்தியமா ஓதியிருந்தான்".*

பெத்த நிலையில் முதல்வன் உயிராய் ஒற்றுமைப்பட்டு நிற்பன். முத்தி நிலையில் உயிர் சிவமாய் ஒற்றுமைப்பட்டு நிற்கும். இதுவே அத்துவித சம்பந்தமாம். பண்ணும் அதனோடு பிரிப்பின்றி நிற்கும் ஓசை போலவும் பழமும் அதனோடு பிரிப்பின்றி நிற்கும் சுவை போலவும், எல்லாவிடத்தும் வியாபகமாய் முதல்வனுடைய திருவருள் உயிர்களோடு பிரிப்பின்றி நிற்கும் அந்த நிலையை வேதங்கள் அத்துவித நிலை எனக் கூறும்.

பாச நீக்கத்தில் உயிரும் சிவமும் ஒரு பொருளாய் ஒற்றுமைப்படும். பாலுடன் நீர் கலந்தவிடத்து பால் வேறு, நீர் வேறாகப் பிரிக்க முடியாதவாறு போலச் சிவத்துடன் உயிர் கலந்த விடத்துச் சிவம் வேறு, உயிர் வேறு எனப் பிரிக்க முடியாத நிலை ஏற்படும். சிவனிடத்து உயிர் வைத்திருக்கும் அன்பினாலும் உயிரிடத்து சிவம் வைத்திருக்கும் அருளினாலும் உயிரும் சிவமும் ஒற்றுமைப்படும். சிவஞானபோதம் பத்தாம் சூத்திரம்,

*"அவனே தானே யாகியவந்நெறி*
*யேக னாகியிறைபணி நிற்க*
*மலமாயை தன்னொடு வல்வினை யின்றே"*

*என்று கூறுகிறது.*

ஆன்மா சிவானந்தத்தை அனுபவிக்கும்போது தான் வேறு சிவன் வேறு என்னும் வேற்றுமை இன்றி நிற்கும். அதோடுதான் என்றும் முனைப்புமின்றியும் நிற்கும். ஆகையால் வேற்றுமையும் முனைப்பும் அற்று நிற்றலே சித்தாந்த முத்தியாகும்.

## பாசம்

**ப**தி, பசு, பாசம் என்ற முப்பொருளின் உண்மையைச் சித்தாந்த சாஸ்திரம் எடுத்து இயம்புகின்றது. பதியாகிய சிவனும் பசுவாகிய ஆன்மாவும், ஆன்மாவைப் பந்தித்து நிற்கும் பாசமும் அநாதியாயுள்ளன. இதை விளக்கும் திருமந்திரம் –

*"அறிவறி லென்ற அறிவு அனாதி*
*அறிவுக் கறிவாம் பதியும் அனாதி*
*அறிவினைக் கட்டிய பாசம் அனாதி*
*அறிவு பதியிற் பிறப்பறுந்தானே"* *என்று கூறுகிறது.*

அறிவாகிய ஆன்மாவும், அறிவுக்கறிவாய் விளங்கும் பதியும், அறிவினை விளங்கவொட்டாது தடை செய்து நிற்கும் பாசமும் தொன்மையாய் உள்ளன.



பேரறிவாகிய பதி அவ்வறிவிற் பதியுங் காலத்து ஆருயிராகிய ஆன்மாவிற்குப் பிறப்பு நீங்கும். இதுவே இதன் பொருளாகும்.

பாசங்கள் ஆணவம், கன்மம், மாயை என்பனவாம். பாசக்கட்டிலிருந்து நீங்குவதே உயிருக்கு விடுதலை எனப்படும். அறியாமையை நீக்கும் ஆசிரியன் போலவும், நோயை நீக்கும் மருத்துவன் போலவும், பதியே ஆன்மாக்களின் பாசத்தை நீக்குபவன் ஆகின்றான். ஆசிரியர் புத்தகத்தின் துணை கொண்டும், மருத்துவன் மருந்து மூலமாகவும் உடனாய் நின்று நீக்குவர். பதி வினையாகிய மருந்தைக் கொண்டு, உடல் உலகமாகிய இடங்களைக் கொண்டும் பாசத்தை அடக்கி அருள் புரிகின்றார்.

பேரிருளாகிய பாசம், பேரொளியாகிய பதியின் முன் நிற்க மாட்டாது. பதி, பசுக்களுடன் பிரிப்பின்றி நின்று அருளுகின்றாராயினும் பாசமானது பசுக்களைவிட்டு நீங்காமைக்குரிய காரணத்தை அறிய வேண்டும். ஞாயிறும், கண்ணும், கண்ணில் வளர்ந்த படலமும் ஓரிடத்திலிருப்பினும் கண்ணின் படலம் உரிக்கப்பட்ட பின்பே சூரியனின் ஒளி கண்களிற் பட்டு கண் ஒளியை விளக்கும். இதில் கண் பசுவாகிய ஆன்மாவுக்கும், கண்ணின் படலம் பாசத்துக்கும், ஞாயிறு பதிக்கும் உவமானமாகக் கூறப்படுகிறது. கண்ணிலே வளர்ந்த படலத்தை கண் மருத்துவன் உடனே உரித்துவிடுவதில்லை. அப்படலம் முதிர்ந்த பின்னரே உரித்து நீக்குவன். அதுபோன்று சிவனும் தனது மறைப்பாற்றலாகிய திரோதான சக்தி மூலம் பாசத்தை முதிர்வித்து அதனை நீக்கி உயிர்களுக்கு அருள் புரிகின்றான்.

நெல்லினிடத்து உமியும், செம்பினிடத்து களிம்பும் நெல்லும் செம்பும் என்று உள்ளனவோ அன்றே அவையும் உள்ளன. இடையிலே அவைகள் போய்ச் சேர்ந்தனவல்ல. அதுபோல ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் ஆன்மா உள்ள அன்றே அவையும் உள்ளன. சிவஞானபோதம் –

*"நெல்லிற் குமியும் நிகர்செம் பினிற்களிம்புஞ்*
*சொல்லிற் புதிதன்று தொன்மையே – வல்லி*
*மலகன்மம் அன்றுளவாம் வள்ளலாற் பொன்வா*
*ளலர் சோகஞ் செய்க மலத் தாம்".*

உமியும், செழும்பும் எக்காலத்துள்ளனவென்று ஆராய்ந்தால் நெல்லும் செம்பும் உள்ளவன்றே அவையும் உள்ளன என்பது விளங்கும். தாமரைப் பூ மலர்தலும், கூம்புதலும் சூரியனால் ஏற்படுமாறுபோல அவை முதல்வனாலே தொழிற்படுகின்றன. இதுவே இதன் பொருளாகும்.

ஆணவமலம் இதன் சொரூபம் இருண்ட பேரிருள் வடிவம். அது ஆன்மாக்களுக்கு அஞ்ஞானத்தை உண்டாக்கும். வியாபகமான ஆன்மாவைச் சிற்றறிவுடையதாக்கி அனுத்தன்மைப்படுமாறு அது செய்கிறது. அது ஆன்மாவோடு அநாதியே சகசமாய் (கூடப் பிறந்து) உள்ளது. மாயாமலம், தனு கரண புவன போகங்களும், கன்மமலம் சுக துக்கங்களையும் கொடுப்பதற்கு ஆணவமலம் காரணமாய் இருத்தலால் அது மூலமலம் எனப்படும்.

ஆணவத்தின் குணங்களை 'இருபாஇருபஃது' நூல் விளக்கமாகக் கூறுகிறது.

1. பிடித்தது விடாமை. (2) மோகம் மிருத்துச் செல்லுகை. (3) கோபமடையாமை. (4) அறியாமை விஞ்சி நிற்றல். (5) கொலைத் தொழில் நினைவு விஞ்சுதல். (6) எப்பொழுதும் வருத்த முறுதல். (7) யான், எனது என்று விஞ்சுதல். (8) மாச்சரியம் (பொறாமை) ஆகிய எட்டுமாம்.

ஆணவ மலத்தின் இலக்கணம் சிறப்பு, பொது என இரு வகைப்படும். சிறப்பிலக்கணம் கோலத்தில் உயிருக்கு அறியாமையைச் செய்வது. சிறப்பியல்பு என்பது தன்னியல்பைக் குறிக்கும். பொது இலக்கணம் சகலத்தில் கருவிகளோடு கூடி விபரீத உணர்வைச் செய்வது. விபரீத உணர்வானது ஒன்றைப் பிறிதொன்றாக அறிதல். தானல்லாத கருவிகளைத் தானாக நினைத்தலாம். கண்கண்டதை நான் கண்டேன் என்றும், காது கேட்டதை நான் கேட்டேன் என்றும் அறிவது விபரீத அறிவாகும். ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றனுள் ஆணவம் அநாதியே கூடி நின்றது. கன்மமும் மாயையும் ஆன்மாவை இடையே வந்து கூடின. இடையே வந்து கூடிய மாயை கன்மங்களினாலே ஆன்மாவுக்கு உணர்வு உண்டாகின்றது. ஆணவமலம் போல இடையிலே ஆன்மாவை வந்து கூடும் மாயையும், கன்மமும் அநாதியாயுள்ளன.

உயிர்களின் மும்மலங்களும் பரிபாகம் அடையும் பொருட்டு உலகம் ஒடுங்கித் தோன்றி நிற்கும் எனலாம். தோன்றுதலினாலே ஆணவமலம் பரிபாகம் அடையும். ஆணவ மலம் அறியாமையை உண்டாக்கும். அறியாமை என்பது கேவல நிலையில் அறிவு, இச்சை, செயல்கள் நடைபெறாது தடுப்பதாகும். சிருஷ்டியினால் அவ்வித தடை நீங்குதல் ஆணவமல பரிபாகம் எனப்படும். அதேபோல உலகம் ஒடுங்கும் போது கன்ம மலபரிபாகம் அடையும்.

மாயை – இது இறைவனுக்கு பரிக்கிரக சத்தியாகும். அது இறைவன்



விரும்பும்போது உபகாரப்படுவதாய் அவனுள்ளே அடங்கி இருக்கும் சக்தியாகும். மாயை உலகம் ஒடுங்குவதற்கும் தோற்றுவதற்கும் நிலைக்களமாக உள்ளது. மாயையில் ஒடுங்கித் தோன்றிய உலகம் மாயைக் காதாரமாய் நின்ற இறைவன் சக்தியில் ஒடுங்கித் தோன்றினதாகும். மாயை ஒரு வித்துக்கும் உலகம் அவ்வித்தில் முளைக்கும் உலக மாயை கூறுவதுண்டு. நிலம் குளிர்ந்த காலத்திற்தான் வித்திலிருந்து முளை தோன்றும். அதுபோன்று மாயைக்கு ஆதாரமாய் நின்ற இறைவன் சக்தி கற்பித்த விடத்துத்தான் உலகம் மாயையினின்று தோன்றும். மாயை சலனங்களுக்கிடமாக காரியங்களைத் தோற்றுவிக்கும் வல்லமை உடையது. ஆனால் சங்கற்பியாதவிடத்து தோற்றுவிக்கும் சாமர்த்தியம் மாயைக்குக் கிடையாது. சிவஞானசித்தியார் –

*"நித்தமாய் அருவமாய் ஏக நிலையதாய் – உலகத்திற்கோர்*
*வித்துமாய் அரிதாய் எங்கும் வியாபியாம் – விமலனுக்கோர்*
*சக்தியாய் புவனபோகற்தனுகரணமும் உயிர்க்காய்*
*வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமுஞ் – செய்தமன்றே.*

மாயை, சுத்தமாயை அசுத்தமாயை என இரு வகைப்படும். சுத்தமாயை விந்து, மகாமாயை, குடிலை என்னும் பெயர்களையுடையது. மலகன்மங்களோடு கலப்புறாது சுத்தமாயிருத்தலின் சுத்த மாயை எனப்படும். சுத்த மாயையிலிருந்து 5 சிவ தத்துவங்களும், 5 கலைகளும், 224 புவனங்களும் தோன்றும்.

அசுத்தமாயை – மலகன்மங்களோடு விரவி அசுத்தப்படுவதால் இது அசுத்த மாயை எனப்படும். இம்மாயை தனு, கரணம், புவனம், போகம் ஆகியவைகூட ஆன்மாவுக்கு கன்ம மலபரிபாகம் அடையும் பொருட்டுக் கொடுக்கிறது. தனு என்பது பஞ்ச பூதங்களின் சேர்க்கையுடைய தேகமாகும். கரணம் என்பது இந்திரியம், அந்தக் கரணங்கள் புவனம் என்பது உயிர்கள் இன்ப துன்பம் அனுபவிப்பதற்கு இடமாகக் கூறப்பட்டது.

போகம் – இன்ப துன்பங்களை அனுபவிப்பதற்கு ஏதுவான பொருள்கள். மாயையிலிருந்து தலை முதல் பிருதிவி ஈறாகத் தோன்றும் முப்பத்தாறு தத்துவங்களால் தனு, கரண, புவனம் உண்டாகும்.

பிரபஞ்சம் மாயையினின்றும் தோன்றி அழியுங் காலம் அம் மாயையிலே ஒடுங்கும் பிரபஞ்சம் அனித்தமென்றும் மாயை நித்தம் என்றும் சொல்லப்படும். தனு, கரண, புவன போகங்கள் அருவமாயும் அருவுருவமாயும் தோன்றி நிற்கும். சங்கார

காலத்தில் அவைகள் அருவமாய் மாயையில் ஒடுங்கும் முதல்வனது அருளாகிய திரோதான சக்தியின் மூலமே மாயை தொழிற்படும்.

மாயைக்குரிய குணங்கள் இருபா இருபஃது விளக்கமாகக் கூறுகிறது.

*"அஞ்ஞானம் பொய் அயர்வே மோகம்*
*பைசால சூநியம் மாச்சரியம் பயம்*
*ஆவேழ் குணனும் மாயைக் கருளினே"*

(1) பலகலை கற்றும் அறியாமை, (2) களவு செய்கை, (3) கண்டது மறுத்தல், (4) அறிந்தது மறுத்தல், (5) இருந்தும் ஈயாமை, (6) செல்வத்தின் மேலே மாச்சரியம், (7) அழுக்கருமை ஆகிய ஏழும் மாயைக்குரிய குணங்களாம்.

மாயையானது ஆன்மாக்கள் கன்மத்தை அனுபவிப்பதற்காகக் கொடுத்த தனு, கரண, புவன, போகங்கள் மூலம் மயக்கத்தை உண்டு பண்ணிக் கொண்டு நிற்கும் இறைவன் மீது ஆன்மாக்கள் வைக்கும் அன்பே விடுதலை அளிக்கும். ஆசையே ஆன்மாக்கள் முத்தியடைவதற்குத் தடைவாகும். மாயைப் பொருள் மீது ஆசைப்படுவதே மயக்கத்திற்குக் காரணமாகும்.

**கன்மம்** - ஆன்மாக்களுடன் அநாதியாயுள்ள ஆணவ மலத்தின் தொழிற்பாட்டால் ஏற்படும் விருப்பு வெறுப்புக்களே மூல கன்மம் எனப்படும். ஆன்மாக்கள் சரீரங்களை எடுப்பதற்குக் கன்மமே காரணமாகும். கன்மம் என்பது **சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியம்** என மூவகைப்படும்.

இப்பிறவியிலே செய்யும் வினை நல்வினையா, தீவினையா என்பதை உணர்ந்து அறியும் தன்மையை மனிதப் பிறவி எடுத்த நாம் பெற்றிருக்கின்றோம். ஏனைய உயிர் வர்க்கங்களுக்குக் கொடுக்கப்படாத பகுத்தறிவை இறைவன் மனிதனுக்கே கொடுத்திருக்கின்றான். அவ்வித மேல்நிலையை அடைந்த மனிதன் இப்பிறவியிலே கன்மங்களைச் செய்யாமல் வாழலாம். வாழ முயல வேண்டும். கன்மத்தின் குணங்களை "இருபா இருபஃது", "இருத்தலும் கிடத்தலும் இருவினையியற்றலும் விடுத்தலும் பரநிந்தை மேவலென்றெடுத்த அறுவகை குணனுங்கருமத்தருளினே".

(1) மடிவந்திருத்தல், (2) பொசிப்பற்றுக் கிடத்தல், (3) புண்ணியத்தைச் செய்தல், (4) பாவத்தைச் செய்தல், (5) தொழில் செய்யாமல் விடுகை, (6) பரநிந்தை என்னும் ஆறுமாம்.



அறம், பாவம் ஆகிய இரண்டும் இத்தகைய தன்மையுடையது என்று அறிந்தும் இப்பிறவியிலே பாவத்தைச் செய்து கன்மத்தைத் தேடிக் கொள்கின்றோம். அவ்வித கன்மம் **ஆகாமிய கன்மம்** எனப்படும். மனம், வாக்கு, காயம் என்ற மூன்றினாலும் மந்திரம், பதம், வன்மை, தத்துவம், புலமை, கலை என்னும் ஆறு அத்துவாக்கள் (வழிக்கள்) மூலமாகச் செய்யப்படும் நல்வினை, தீவினையாகிய இரு வினைகளும் ஆகாமியம் எனப்படும்.

முற்பிறவியிற் செய்த வினையின் பயனை அனுபவிக்கும் பொழுது விருப்பு, வெறுப்பு நிகழ்தல் உண்டு. அவ்வித இன்ப துன்பங்களால் ஆகாமியம் ஏற்படும்.

இப்பிறவியிற் செய்யப்படும்போது அது ஆகாமியம் எனப்படும்.

இச் செயல்களால் இனிமேல் வருவன புண்ணியமும் பாவமுமாம். அவை முன்னிருந்த வினையோடு சேர்ந்து சஞ்சித வினையாகும். புண்ணியம் இன்பத்தையும், பாவம் துன்பத்தையும் கொடுக்கும்போது அவை **பிராரத்தமாம்.** பிராரத்தம் என்பது பிறவிக்குத் தொடக்கமுடையது எனப்படும்.

முற்பிறவிகளிற் செய்த இரு வினைகளுக்கு ஈடாக இப்பிறவியில் இன்ப துன்பங்களை அனுபவிக்கும்போது மேலும் விளைப்பயன் உண்டாவதால் மீண்டும், மீண்டும் பிறந்து சுவர்க்க நரகங்களுக்குச் சென்று மீண்டும் பூமிக்கு வருவதுண்டு. நிலையான அவ்வினைப் பயன்களைப் வகுத்தவனும் வேந்தனும் போல இறைவனே சக்தி மூலமாக ஆன்மாக்களுக்குக் கூட்டுவான். ஆனால் சடப் பொருளாகிய கன்மம் தாமே வந்து கூடமாட்டாது என சிவஞானசித்தியாரில் வரும் "இருவினை யின்பதுன்பத் ........................" என வரும் பாடல் எடுத்துக் கூறுகின்றது.

நல்வினை, தீவினை ஆகிய இரண்டும் மனம், வாக்கு, காயங்களால் ஏற்படுவனவாகும். நல்வினை செய்து, தீவினையையும், தீவினை செய்து நல்வினையையும் அழிக்க முடியாது. இவ்விரண்டு வினைகளும் அனுபவித்தே ஒழிய வேண்டும்.

*"காகமானது கோடி கூடி நின்றாலுமொரு*
*கல்லின் முன் னெதிர் நிற்குமோ*
*கர்மமானது கோடி முன்னே செய்தாலுநின்*
*கருனை பரலாக வருளைத்*
*தாகமாய் நாடினரை வாதிக்கவல்லதோ!"* *– தாயுமானவர்.*

*"இருவினை வந்தென்னைத் தாக்காதிருக்கவும்*
*கருவி கரண மென்கட்டளை கேட்கவும்*
*அருவி கண்களிலாறாய்ப் பெருகவும்*
*தருகவருளிழந்தண் ணகரானே"*

என்று யோகர் சுவாமிகள் கூறுவதிலிருந்தும் இறைவன் திருவருள் எம்முடைய கன்மத்தை நீக்கவல்லது என்பதை அறியலாம். தன்னுள் இருக்கும் இறைவனைக் கண்டு கொள்வாரை முன்வினை தாக்காதென யோகர் சுவாமிகள்

*முன்னே வினை வந்து*
*மூண்டுதே என்பார்கள்*
*தன்னை அறியாதார் – தங்கமே*
*சஞ்சலத்தை நீக்கிவிடு".*

சிவனை வழிபடுவோரை பந்தித்த வினையானது அகலுமென சுந்தர் தேவாரப் பாடலிலிருந்தும் "சிந்தித் தென்றும் நினைந்தெழுவார்கள்........." அறியலாம்.

**திருமதி சாந்தி நாவுக்கரசன்**
*இந்து விவகாரம், கலாசார சமய அலுவல்கள் அமைச்சு*



# சைவ சித்தாந்தச் சம்புடத்தின் பின்னுரை

உலகில் உள்ள எல்லாச் சமயங்களும் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதை உணருகின்றன. ஆனால் சைவ சமயமே கடவுள் இருக்கிறார் எனப்பல காரணங்களால் காரியமாக நிலை நிறுத்தியுள்ளது. எனினும் கடவுள் இல்லை என்கிற ஒரு சாகியத்தாரும் இருக்கிறார்கள் என்பதை மறுக்கவும் முடியாது.

இவற்றைவிட புறச்சமயம், அகப்புறச்சமயம், அகச்சமயம் என வகுத்து இவற்றைக் கண்டு காட்டும் வழி ஒழுகுபவர்களும் உண்டு. புறச்சமயத்தவர்களில் தார்க்கிகராவார், கையாயிகர், மீமாஞ்சகர், ஏகான்மவாதியர், பேதவாதசைவர், சிவசமவாதசைவர், ஈசுரவவிகாரவாத சைவர், சிவாத்துவிதசைவர் எனப்பலவகையாகப் பகுத்து வகுத்து வணங்கும் தெய்வம் வாழ்க்கை. இவைகளைப் பற்றிக் கூறுகிறவர்களும் பலவகை உண்டு. திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்கள் புதுப்பித்த பதிப்பு நூலாகிய காசிவாசி செந்தி நாதையரின் சிவஞானபோத வசனாலங்கார தீபம் என்னும் நூல் கூறும் கூற்றுக்களின் திரட்டாகும்.

அனைத்துச் சமயங்களுக்கும் ஆதாரமாயுள்ள வேதாந்தங்கள். அதாவது வேதங்களின் சாரமாயுள்ள சத்திய தரிசனங்களாயமைந்த உபநிஷத்துக்கள் – சுருதிகளுமுண்டு இவர்கள் இறைவன் ஒருவனே உளன். இரண்டாவதாக ஓர் பொருளும் இல்லை என்ற ஆதாரத்தை தான் அதுவாகியுணர்ந்து தெளிந்து கொண்டவர்களே சத்திய தரிசன விளக்கமாக வாழ்ந்து காட்டியிருக்கிறார்கள். கடவுள் அனந்த சத்தியுடைய பராசத்தியுடன் ஏகமாய் எங்கும் நிறைந்து இருக்கிறார். இதனை ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் ஐயா அவர்கள் ஏலவே சைவவினா விடையில் விளக்கியுள்ளார். எங்கும் நிறைந்தவர், எல்லாம் வல்லவர், எல்லாமறிபவர், இயல்பாகவே பாசங்களில் நீங்கியவர், வரம்பிலா இன்பமுடையவர் என்று கூறியுள்ளார். இவ்வுண்மையே திருவள்ளுவர், திருமூலர், சமயகுரவர்கள், மெய்கண்டதேவர் ஆகியோர் காலத்திற்கேற்ப வெளிப்படுத்தியுள்ளார்கள்.

காலத்துக்கேற்ப என்பது சமயகுரவர்கள் வாழ்ந்த போது பௌத்தம், வைணவம் ஆகிய சமயங்களும் பல்லவர், சமணர் ஆகியோரின் ஆட்சியும் புகுந்து பங்குபற்றி நம்குரவர்களைத்

துன்புறத்தியது காலத்தின் பாற்படும் இன்னும்பலவுண்டு. ஆறுமுகநாவலர் ஐயா அவர்கள் இன்னும் சிவன் தனது சத்தியைக் கொண்டு செய்கிறார். சத்தி என்னும் சொல்லுக்குப் பொருள் யாது வல்லமை சத்தியாவர் உமாதேவியார் என்று கூறியுள்ளார். இதையே திருமூலநாயனார் தனது திருமந்திரத்தில் பின்வருமாறு கூறுகிறார்.

*ஒடங்கை நங்கை இறையெங்கள் முக்கண்ணி*
*வேடம் படிகம் விரும்பும்வெண் டாமரை*
*பாடும் திருமுறை பார்ப்பதி பாதங்கள்*
*சூடுமின் சென்னிவாய்த் தோத்திரம் சொல்லுமே...... (1067)*

இப்பாடல் திருமந்திரத்தில் நான்காம் தந்திரத்தில் ''சத்திரீபதம் – திரிபுர சங்காரம் என்ற தலைப்பில் வந்துள்ளது. சத்தியாகிய உமையம்மை தன்வல்லமையினாலே சுந்தரி, சௌந்தரி, நாரணி, பரிவர்ணி, ஈசி. மனோன்மணி என்றபல திருநாமங்களைக் கைக்கொண்டு கல்வி, யோகம், முத்தி இவைகளைத் தருகிறார்.

சமய வேறுபாடுகள் தவிர்க்க முடியாதவை மண்ணில் தோன்றிய சான்றோர்கள் தாங்கள் சார்ந்த மண்ணின் இயல்புகளை காலச் சூழலுக்கேற்பவும் தாங்கள் அனுபவித்த புலன் உணர்வுக்கு ஏற்பவும் பெற்ற ஞான அனுபவம் அருட்பேறு ஆகியவற்றிற்கு ஏற்ப சமய நெறிகளை வகுத்துக் கூறிருக்கிறார்கள். ஒருவரது அனுபவம் மற்றவரது அனுபவத்துக்கு ஏற்ப இருக்க வேண்டியதில்லை. அனுபவங்கள் பேறுபடுதலால் அவர்கள் காட்டிய சமய நெறிகளும் வேறுபாடுடையன. இதுபோலவே நமது சைவ சமய சித்தாந்தங்களும் பல கொள்கைகளையும் கோட்பாடுகளையும் உடையன. இவ்வேறுபாடுகளை ஓரளவு உணர்ந்து தான் பல பெரியோர்களின் கொள்கைகளை அடக்கிய கட்டுரைகளை சம்புடத்தில் சேர்த்துள்ளேன்.

சைவ சித்தாந்தச் சம்புடம் என்னும் ஓர் பெரியவயல் வெளியின் பயனை அனுபவிக்க வேண்டி,

*ஞானம் பெருமை நயம் கருணை உண்மை*
*அபிமானம் பொறுமை வணக்கம் உயர் – தானமுடன்*
*சற்குணம் ஆசாரம் தருகல்வி நீதிநெறி*
*சற்குணத்துக்கு உண்டென்தே சாற்று. (தனிப்பாடல்)*

இவ்வாறாய நற்குணம் படைத்தவர்கள் குடியிருந்தார்கள். இவர்கள் அன்பு, அருள், ஞானம் ஆகிய நீரைப் பாய்ச்சி அரனும் ஆன்மாவும் திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார் என்ற வித்தில் இருந்து



பயனடைந்தார். இன்னும் சிவஞானபோத மலர்ச்சி என்ற மரத்தையும் வித்திட்டார்கள். எல்லாவற்றிற்கும் மேலாக திருக்களிற்றுப் படியாரில் இருந்து பத்துவிதமான கிளைகள் தோன்றி வளரத் தொடங்கின. இவைகட்குக் காவலர்களாக இயற்கையில் சித்தாந்தம், திருவாசகத்தில் ஒரு வாசகம், அரிச்சுவடி அமைப்பில் ஆன்ம ஞான வைப்பு, என்பன தோற்றி பாதுகாத்தனர். உங்களுக்கு நாங்களும் இருக்கிறோம் என்ற உண்மையை விளக்க விரும்பி மெய்கண்ட சாத்திரத்திற்கு முற்பட்ட சைவ சித்தாந்தம், திருமூலரின் கடவுள் கொள்கை, (பசுவும் பாசமும்) என்பன தோன்றிப் பயனைப் பலவகையாகக் கொடுக்கத் தொடங்கியன பயனையும் பெற்றார்கள். சைவ சித்தாந்தத்தின் உயிர்த் தத்துவம் தோன்றி உட்பொருளை உடனாயும் வேறாயும் நோக்கிப் பலபயன்களைத் தந்தது. இவைகளை தந்த பல ஆசான்களைக் காண வேண்டும். அவர்களிடத்தில் கற்க வேண்டும் இது ஏனெனில் ஏலவே கூறியது,

*''நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பதற்காக''*

நூல் கற்றலினது வரலாறு நன்னூலார் கோடன்மரபே கூறுங்காலை.............

*"பொழுதொடு சென்று வழிபடன் முனியான் குணத்தொடுபழகி,*
*யவன் குறிப்பிற் சார்ந்து இருவெனஇருந்து, சொல்லெனச் சொல்லி*
*பருகுவனன்ன ஆர்வத்தனாகி சித்திரப்பானவயின் அத்தக அடங்கி*
*வாவெனவந்து போவெனப் போதல் என்மனார் புலவர்"*

இதைச் சொல்ல வேண்டிய காரணமும் உண்டு பதினெட்டுவயது ஒருபத்தும் எட்டும் கொண்ட மாணவன் கூட பொறுமையுடன் செய்ய மாட்டான் எண்பானொடுபத்தும் நான்கும் சேர்ந்த எனக்கு எப்படி இருக்கு மென்றுபாருங்கள்.

*''தன்னுடை ஆற்றல் உடையாரிடத்திலும்*
*தன்னைப் புகழ்தலும் தகும் புலவர்க்கே'' (தொ.ம்)*

தொகுப்பு நூல் என்பது பலதரப்படும். பலதரப்பட்ட தலையங்களைக் கொண்ட ஓர் ஆரியர் ஆக்கியது. பலதரப்பட்ட ஆசிரியர்கள் தங்கள் எண்ணங்களுக்கேற்ப ஆக்கிய தலையங்களைக் கொண்டது. ஆகவே இந்நூல் பல ஆசிரியர்களது கொள்கைகளைக் கொண்ட தலையங்களைத் தொகுத்தது. இதனாலாய வேற்றுமைகளும் பலதரப்படும்.

எது எப்படி இருப்பினும் முடிந்த முடிபு முத்தியாகும். ஆண், பெண், அலி என்று வேறுபாடுகள் உள்ளன. மண் முதல் மனிதனும் திராய்ப் பூடு தொடக்கம் தென்னையும் வேறுபட்டிருக்கும்.

இவ்வேறுபாடுகளை ஒன்றாக்கவே திருக்களிற்றுப்படியார்,

*"வீட்டிலே சென்று வினையொழிந்து நின்நிடிலென்*
*நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென் கூட்டில்லாள்*
*சாத்தியே நின்றிலையேற் றக்கனார் வேள்வி செய்த*
*மாத்திரமே யாங்கண்டாய் வந்து ...*

*இவ்வாறு கூறுகிறார்.*

நாம் செய்ய வேண்டியன :–

1. முன்பு மருவிப் போற்ற தொழில்களையும் புத்திர மித்திர களத்திரி யாதிகளையும் கைவிட்டுத் துறவறத்திலே போய் நின்றாலும் பிரயோசனம் என்? இல்லறத்லிரிந்துமுனைந்து நன்றான எக்கியாதி கன்மங்களைச் செய்தாலும் பிரயோசனம் ஏன்? உனக்கு பிராணனான சிவனைக் கூடி அவன் செயலாகவே கருதி உன்னுடைய செயலற நின்றிலையாகில் தட்க்ஷ பிரசாபதி தன்னுடைய அகங்காரத்தின் மிகுதியாலே கர்த்தாவை இகழ்ந்து தன்னாலே செய்யப் பட்டதாகவே நின்று எச்சியத்தைச் செய்து ஒரு பிரயோசனமுங் கைகூடாமல் நீங்காத துன்பத்தையே பெற்றாற்போல நீயும் கைவிட்டு உன்னுடைய செயலென்றே நின்று பெறுதற்கரிய பேற்றை இழந்து போவை என்ற உண்மையிலே நிற்பாயாக.

2. சிவத்தை அணைந்த முத்தராயினோர்க்குச் சீவன் முத்தி நிலையில் அவர் அறிவும், விளைவும், செயலும், புறத்தே நிகழுங்கால் அவர் அறிவானது மும்மல அழுக்கைச் சிதையவைத்து விடும். அவர்களுடைய வணக்கமே மேலோங்கிநிற்கும். இதனால் மலவாசனை மெல்ல மெல்ல நீங்கி விடும். எனினும் உடம்பு உள்ளவும் பிரார்த்தவினை உளதாக அது ஓர் இடத்தில் ஓர் சோர்வு காணும்போது பற்றி வந்து நுழைந்துவிடும். பத்தராயினோர் சமயம் வாய்க்கும் போது சைவசித்தாந்தத்தின் உண்மை நிலையினை அறிந்து அதற்கு நுடங்கி எல்லாம் அவன் செயல் என்செயலாவதொன்றில்லை என ஒடுங்க வேண்டும். ஒடுங்காவிட்டால் தட்க்ஷாதிபதிதற் பெருமையால் தகரானது (தகர்– ஆடுபோலாகும். இதனைப்போல் பலவுண்டு "முன்னமவனுடைய நாமங் கேட்டாள் என்றத் தொடக்கத் திருத்தாண்டகத்தில் தன்னாமங் கெட்டாள் தலையாட்டாள் நங்கை தலைவன்றாளே" கால அளவு ஒரு மாத்திரை முடிவுக்குமுன் அவன் தாள் தலைப்பட்டாள் இன்னும் பல.



3. ஆணவம், கன்மம் மாயையென்று மும்மலங்களுட் கன்மமாதுன ஆன்மாக்கள் மனம் வாக்குகாயம் என்னும் திரிகரணங்களாலும் செய்து கொண்ட புண்ணிய பாவங்களாம். இவை எடுத்த பிறவியிலே செய்யப்பட்டபோது பிறவிதோறும் இங்ஙனம் மீட்டப்பட்டு பக்குவப்படும் வரையும் புத்தியெனவும் தத்துவம் பற்றுக்கோடாக மாயையிலே கிடக்கும்போது சஞ்சிதமெனவும் இச்சந்தித கன்மங்களுக்குள்ளே பக்குவப்பட்டவை மேலெடுக்குமுடம்பையும் அது கொண்டது பலிக்கும் இன்ப துன்பங்களையும் தனது பயன்படும்போது பிராரத்துவ மென்னும் பெயர் பெறுமென்க.

4. திருவருள் புந்தியிற் பதியவே தற்போதம் கெட்டு சிவபோதம் மேலிட்டு சீவச் செயளெல்லாம் சிவச் செயலாய்லிடுதலின் ஆகாமியம் மேற் படாதென்பர். புந்திசேரருள் வருவினை போக்குமென்றும் நின்மனம் பற்றுதற்குரிய வடிவவென்பர். இங்குனைப் போலிருந்த நங்குருவடிவமென்றும் அநாதியாய் உள்ளமலவாதனை பயிற்சி வயத்தான் மீளவும் வந்து தாக்காமைப் பொருட்டுச் செய்வது இதனைச் சிவோக பாவனையென்பர் நங்கு குருவடிவை நின்கருத்திலிருத்துவாயென்றும் பரந்த ஆகமங்ளிலெல்லாம் முடிந்த முடிவாகிய சித்தாந்தப் பொருள் இதுவேயென்பார் பொருளிதுவெனச் சுட்டிவிதந்துங் கூறுகிறார். இப்படி பரமாசாரியார் ஆட்கொண்டமையை திருவாதவூரடிகள் புராணம் பின்வருமாறு கூறுகின்றது.

*"அன்றேயென்னாவியுமுடலு முடமையுமெல்லாமுங்*
*குன்றே யனையாய் எனையாட் கொண்டபோதே கொண்டிலையோ*
*வின்றோறிடையூறு நெனக்குண்டோ எண்டோள் முக்கணம்மானே*
*நன்றே செய்வாய்பபிழை செய்வாய் நானே இதற்கு நாயகமே"*

இவ்வாறு மனநெகிழ்ந்து பாடுகிறார் மணிவாசகப் பெருமான். பின்னர் என்ன செய்ய வேண்டும் என்பதையும் கூறவேண்டும்.

நமது சரீரத்தில் உள்ள மூலாதாரம் சுவாதிட்டானம், மணிபூரகம் அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களையும் கோயிலில் உள்ள யாக மண்டபம் அலங்கார மண்டபம், கல்லாண மண்டபம், நிருத்த மண்டபம், மகா மண்டபம் அர்த்த மண்டபம் என்ற மண்டபங்கள் தெரிவிக்கின்றன. எனவே திருக்கோயில் சென்று இறைவனை வழிபட்டு அங்கே கண்டபரம் பொருளை நம்முடம்புக்குள்ளேயும் கண்டு மனோலயம் பெறவேண்டும்.

*"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்*
*வள்ளல் பிரானனார்க்கு வாய் கோபுரவாசல்*
*தெள்ளத் தெளிர்ந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்*
*கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே"* *(திருமந்திரம்)*

கட்டையில் கனல் மறைந்திருக்கிறதை என்று லயிக்குக "விறகிற்தீயினன்" என்கிறார் அப்பர் பெருமான் கட்டையைக் கடைந்தவுடன் அதில் மறைந்த கனல் வெளிபட்டுக் கட்டை கனலாகக் காட்சியளிப்பதுபோல உயிரில் ஒளித்திருக்கின்ற இறைவனை ஞானத்தால் கடைவோமானால் சிவம் வெளிப்பட்டுச் சீவனைச் சிவமாக்கிக் கொள்ளுகின்றது.

எண்ணில்லாத உடம்பை எடுத்து வருகின்ற நாம் இறைவனை மெய்யன்போடு உள்ளம் குழைந்து உருகி மலரிட்டு அருச்சனை செய்யது வழிபட்டால் பிறவிப் பெருங்கடல் நீந்தலாம்.

*"கல்லெடுத்து வினவெறிந்து*
*காலெடுத்து மழைக்குடைந்த காலிகாக்கக்*
*குன்றெடுத்து மால்விடையின்*
*கொடியெடுத்து விடிவெடுத்துக் கூறொணாத*
*மன்றெடுத்த சோடியின் மலரெடுத்துச்*
*சாத்தியன்பின் வழிபட்டோர்கள்*
*இன்றெடுத்த வுடற்பிறவி யினியெடா*
*வண்ணமெண்ணம் எய்து வாரே"* *(சிவரகசியம்)*

*"மண்ணிலே சமயபேத வழிப்படும் புன்மை நீங்க*
*வெண்ணிய வீடுசேர்க்கும் மெழிற்சிவ முன்னோன் தன்னை*
*புண்ணிய வேதுவாகப் பொருந்திட வெனக்குத் தந்த*
*கண்ணிய மேவுஞ்சீர்ச் சேனைவாழ் வரதவி நாயகன் வாழி"*

*சிவ சிவ*

*ஆக்கியோன்.*

*"மெய்யடியார் விரைந்து வம்மின், வந்த பின்*
*மெய்யுனைந்த ஆக்கியோனை மேன்மைப் படுத்துயின."*

## நால்வர் நன்றி நவிலல்

உலகளாவிய ரீதியில் நாளா நாளாக காலை மாலைவேறின்றி அன்று தொட்டு இன்றுவரை அலை வீசி ஆழங்காணாத சமுத்திரத்தின் தன்மை போன்ற சைவ சித்தாந்தச் சம்புடத்தின் தொகுப்பை தொடுக்க வைத்த பெரியோர்கள் பலருளர் அவர்களுக்கு வேண்டிய இடங்களில் அவர்களின் கட்டுரை கட்டவித்தபோது நன்றி இன்னும் கூறியதுமன்றி பாராட்டவும் வேண்டும்.

இரண்டாவது இத்தொகுப்பு நூல் சரிவருமோ வராதோ என்று அலையாக அலைந்த என்னை ஆற்றுப்படுத்தி ஊக்கங்காட்டி ஆக்கச் சொன்ன பெரியோர்கள் எங்கள் அறங்காக்கும் வரதராஜ விநாயக ஆலய அறங்காவலர்களேயாகும். அவர்களும் என் நன்றியை ஏற்பார்கள்.

மூன்றாவதாக தேவையான நூல்களைத் தெரிந்து தந்து வழிப்படுத்தி வகைக்கு உழைத்த ஸ்ரீமதி ஜெயஸ்ரீ அசோக்குமார் அவர்கட்கும் மிக மிக நன்றி. மரத்தின் கனக்கோட்டம் நீக்கும் நூல் என் மனத்தின் கனக்கோட்டம் நீக்கியமை ஏழுபிறப்பும் தொடரும் அவர்களுக்கும் நன்றி.

நான்காவதாக சைவமென்றால் தமிழ்தான் தமிழ் என்றால் சைவந்தான் எனப் பேதமற போதிப்போர்க்கு எடுத்துக்காட்டாக உள்ள யுனி ஆர்ட்ஸ் நிறுவனத்தின் நிர்வாகத்தராக உள்ளவரும் மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம் என்னும் பண்பாளரும். தேவாரத் தமிழ் ஓசை தெருவெல்லாம் முழங்க வேண்டும் என்ற காராளரும் துன்பம், துயர் தோன்றாது. சோம்மல் சோர்வு தெரியாது. கண்ணிரண்டும் ஒன்றான காட்சியுடையாளரும் உழைப்புக்கு ஒத்துழைத்து ஊக்கமும் ஆக்கமும் காட்டிய மனைமாட்சியாளர்க்கும் எனது மனமார்ந்த நன்றிகள் இன்னும் பலவுண்டு முந்திய நூல்களுக்கு உதவி செய்தமைக்கு நன்றி கூறினாலும் இன்னும் அவரது ஆணையிற் கிடந்த அனைவருக்கும் நன்றி உரித்தாகுக.

கண் எனப்படும் கட்டுரையில் ஓர் எழுத்துப் பிழை காணப்படில் அது பெரும் பிழையாகும். கண்ணுக்குள் எண்ணெய் ஊற்றிக் கொண்டிருப்பது போல் பார்த்தால் கூடியளவு எழுத்துப் பிழையைக் காணலாம். இப்படியான காலத்தின் எனது சைவ சித்தாந்தச் சம்புடத்தின் கட்டுரைகளைக் கண்ணாரக் கண்டு பிழை திருத்திய திருமதி பத்மாவதி சிவசுப்பிரமணியம் B. A. அவர்களையும் இப்பந்தியில் சேர்த்துள்ளேன்.



*சங்குகள் முழவினேங்கும் சம்பங்கி விளக்கந் தாங்கும்*
*சங்குவேலிப் பொன்போலுமேனிப் பொன்னையா புதுமையாய்க் கண்டெடுத்த*
*கண்ணம்மை கருவுயிர்த்த அறுவரிலொரு வராயன்பு கொடையீகையால்*
*திண்ணமாய்ச் சேர்த்தனன் சம்புடத்தில் விண்ணுயர்விம லேந்திரனே.*

"முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மையுள் புகுத்தி விடும்.

சிவ சிவ.

Printed By: Unie Arts (Pvt) Ltd.